# சங்க இலக்கியம் வழி அறியலாகும்
# பாணர் மரபு

முனைவர் (Ph.D) பட்டப்பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**சு. பார்த்திபன்**

நெறியாளர்

**முனைவர் கோ. கிருஷ்ணன்**
இணைப்பேராசிரியர்

**தமிழ்த் துறை**
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை - 600 005

**மார்ச் 2013**

முனைவர் கோ.கிருஷ்ணன்
இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை -5

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

சங்க இலக்கியம் வழி அறியலாகும் பாணர் மரபு என்னும் ஆய்வுப் பொருளில் முனைவர் (பிஎச்.டி) பட்டப் பேற்றிற்காகச் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப்பெறும் இவ்வாய்வேடு என் மேற்பார்வையின் கீழ் ச.பார்த்திபன் **2010** முதல் **2013** வரை ஆய்வு நிகழ்த்தி உருவாக்கியதாகும். இவ்வாய்வேடு அவருடைய சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன் இவ்வாய்வேடு வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை எனச் சான்றளிக்கிறேன்.

இடம் : சென்னை -5
நாள் : 19.3.2013

**(கோ.கிருஷ்ணன்)**
மேற்பார்வையாளர்

DR. G. KRISHNAN
M.A., M.Phil., M.Ed., Ph.D.
Associate Professor
Department of Tamil
Presidency College
Chennai - 600 005.

**ச. பார்த்திபன்**

தமிழ்த்துறை

மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)

சென்னை - 5

# ஆய்வாளர் உறுதிமொழி

சங்க இலக்கியம் வழி அறியலாகும் பாணர் மரபு என்னும் ஆய்வுப் பொருளில் முனைவர் (பிஎச்.டி) பட்டப் பேற்றிற்காகச் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப்பெறும் இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன் இவ்வாய்வேடு வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என உறுதிமொழி அளிக்கிறேன்.

இடம் : சென்னை -5

நாள் : 19.03.2013

**(ச.பார்த்திபன்)**

ஆய்வாளர்

## நன்றியுரை

சங்க இலக்கியம் வழி அறியலாகும் பாணர் மரபு என்னும் பொருளில் ஆய்வு செய்வதற்கு எனக்கு வாய்ப்பளித்த சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு நன்றி. மாநிலக் கல்லூரி தமிழ்த் துறையில் ஆய்வினை மேற்கொள்ள அனுமதி வழங்கிய கல்லூரி முதல்வர் அவர்களுக்கும் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் ப.மகாலிங்கம் அவர்களுக்கும் நன்றி. முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதி வழங்கி, ஆய்வினை நெறிப்படுத்தியதுடன் பல்வேறு வழிகாட்டுதல்களையும் வழங்கி என்னை நெறிபடுத்திய நெறியாளர் முனைவர் கோ.கிருஷ்ணன் அவர்களுக்கு என் நன்றி. ஆய்வுக் காலங்களில் பல்வேறு ஆலோசனைகளை வழங்கிய முனைவர் ஜே.ஆர்.இலட்சுமி அவர்களுக்கு நன்றி. மற்றும் மாநிலக்கல்லூரி தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் என் நன்றி.

முதுகலை பயின்ற காலம் முதலே என்னை நல்வழிப்படுத்தி பல்வேறு உதவிகளைச் செய்த, சென்னைப் பல்கலைக்கழகத் தமிழிலக்கிய துறைத் தலைவர் பேராசிரியர் வீ.அரசு அவர்களுக்கு என் நன்றி. மேலும் பல்வேறு ஆலோசனைகளை வழங்கிய பேராசிரியர்கள் முனைவர் யா.மணிகண்டன், முனைவர் ஆ.ஏகாம்பரம், முனைவர் கோ.பழனி அவர்களுக்கும் என் நன்றி.

மேலும் ஆய்வுக் காலத்தில், ஆய்வுக்கு உதவித்தொகை வழங்கிய செம்மொழி மத்தியத் தமிழாய்வு நிறுவனத்திற்கும் அதன் பொறுப்பு அலுவலர் அவர்களுக்கும் என் நன்றி.

நான் முதுகலைத் தமிழிலக்கியம் பயில சென்னைக்கு வரக் காரணமாக இருந்த நண்பன் திரு. வே.பாலசுப்பிரமணியன் அவர்களுக்கு என் நன்றி. இந்த ஆய்விற்கு ஊக்கமளித்து உதவிகள் பல செய்து வரும் நண்பன் திரு. தி.அ.இரமேஷ் அவர்களுக்கும் ஆய்விற்கு ஆலோசனைகள் பல வழங்கிய

அண்ணன் முனைவர் சா.திருவாசகம் அவர்களுக்கும் சே.சீனிவாசன் அவர்களுக்கும் என் நலனிலும் முன்னேற்றத்திலும் அக்கறை கொண்ட நண்பன் சு.மணிகண்டன் அவர்களுக்கும் என் நன்றி.

ஆய்வின் தேடலுக்கு உதவிய மறைமலையடிகள் நூலகம், சென்னைப் பல்கலைக்கழக மெரினா வளாக நூலகம் (நாவலர் நெடுஞ்செழியன் கிளை நூலகப் பிரிவு), ரோஜாமுத்தையா ஆய்வு நூலகம், உலகத் தமிழாராய்ச்சி நூலகம் ஆகிய நூலகங்களுக்கும் என் நன்றி. இவ்வாய்வேடு சிறப்பாக அமையக் காரணமாக இருந்த டெலிபாய்ண்ட் நிறுவனத்திற்கும் என் நன்றி.

நான் இந்நிலையை எய்துவதற்கு மனதாலும், உடலாலும் உழைத்த அப்பா, அம்மா, அண்ணன்கள், அண்ணிகள், சகோதரி, குழந்தைகள், நண்பர்கள் ஆகியோர்க்கும் என்றும் எனது நன்றியை உரித்தாக்கிக் கொண்டிருப்பேன்.

ச.பார்த்திபன்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| எச். | - | எச்சவியல் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| குறி. | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறு. | - | குறுந்தொகை |
| சிறு. | - | சிறுபாணாற்றுப்படை |
| சூத். | - | சூத்திரம் |
| சொல் | - | சொல்லதிகாரம் |
| திரு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நச்சர். | - | நச்சினார்க்கினியர் |
| நற். | - | நற்றிணை |
| ப. | - | பக்கம் |
| பட். | - | பட்டினப்பாலை |
| பதி. | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| புற. | - | புறத்திணையியல் |
| புறம். | - | புறநானூறு |
| பெரு. | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொரு. | - | பொருநராற்றுப்படை |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மது. | - | மதுரைக்காஞ்சி |
| மலை. | - | மலைபடுகடாம் |

# பொருளடக்கம்

சங்க இலக்கிய ஆய்வுகள் என்பது தொடர்ச்சியாக நிகழ்ந்து வருகின்ற போதும், அதுபொருண்மை, திணை, துறைகள், பதிப்பு போன்றவற்றை மிக விரிவாக முன்னெடுப்பதாக அமைந்தன. மூலபாடல்களில் காணப்படும் பல்வேறு குடி வகையினரின் வாழ்வியல் சமூகச் செயல்பாடுகள் போன்றவற்றை வெளிக்கொணரும் ஆய்வுகளும் தற்போது நிகழ்ந்து வருகின்றன. தமிழ்ச் சமூகத்தின் வரலாற்றைச் செழுமையானதாகவும் பரந்துபட்டதாகவும் கூறுவதற்குச் சங்க இலக்கிய ஆய்வுகள் மீண்டும் மீண்டும் தேவைப்படுகின்றன.

தமிழ்ச் சமூகத்தின் தொல் தரவுகளை விளக்கி நிற்கும் சான்றாதாரங்களுள் முதன்மையானது பாட்டும் தொகையுமான சங்க இலக்கியங்களாகும். தொகுக்கப்பட்ட இப்பாடல்கள் யாவும் ஒரே காலகட்டத்தில் பாடப்பட்டதன்று. சமுதாயத்தின் வெவ்வேறு குடிகளைச் சார்ந்த பல்வேறு மக்களும் புலவர்களாய் இருந்து பாடிய உதிரிப் பாடல்களின் தொகுப்பே இத்தொகை நூல்களாகும். சங்கப் பாடல்களின் வழி புராதன இனக்குழுச் சமூக வாழ்க்கை முறைகளையும், பிற்கால நிலவுடைமைச் சமூகத்து வேந்தர்களின் வாழ்க்கை முறைகளையும் அறிந்து கொள்வதுடன், சமுதாயத்தின் பல்வேறுபட்ட குடியினரின் வாழ்க்கை முறைகளையும் அவர்தம் சமூக இயங்கியலையும் அறிந்து கொள்ளப் பழந்தமிழ் அகவல் பாடல்கள் துணை செய்கின்றன.

இசைக்குடிச் சமூகத்தினரான பாணர்கள் தமிழ்ச் சமூகத்தின் புராதன குடிகளுள் ஒன்றாகத் திகழ்ந்தனர். அலைகுடிச் சமூகத்தினரான பாணர்கள் குழுவாகச் செயல்பட்டனர். வறுமை வயப்பட்டவர்களாகக் காணப்பட்ட பாணர்கள் மரபு வழிப்பட்ட வாய்மொழிப் பாடல்களைப் பாடினர். நிலவியல்சார் அறிவு பெற்ற பாணர்கள் தம்மைப் புரக்கும் வள்ளல்களின் கொடை, வீரம், பண்பு முதலியவற்றை மக்கள் மத்தியில் பரப்பும் கருவியாய்ச் செயல்பட்டனர்.

பாணர்கள் மட்டுமல்லாது விறலியர், கோடியர், வயிரியர், கிணைஞர், பொருநர் போன்றோரும் இசைக்குடியினராகவே அறியப்பட்டனர். கொடையாளர்களைப் புகழ்ந்து பாடல்களைப் பாடினர். பிற்கால அறிஞர்கள் குறிப்பிட்டது போன்று சங்க காலத்தில் தனித்த நிலையில் மண்டைப் பாணர் என்ற பிரிவினர் இல்லை. புராதன இனக்குழுச் சமூகத்தில் பாணர்கள்

சடங்குகளை நிகழ்த்தியவர்களாகவும், மக்கள் மத்தியில் மிகுந்த செல்வாக்கு பெற்றவர்களாகவும் விளங்கினர். மரபுவழிப்பட்ட பாணர்கள் மிகுந்த இசைத்திறம் மிக்கவர்களாகவும் புதிது புதிதாகப் பண்களைத் தோற்றுவிப்பவர்களாகவும் இருந்துள்ளனர். இனக்குழுச் சமூகத்தில் மிகுந்த முக்கியத்துவம் பெற்ற பாணர்கள் போர்க்காலங்களில் வீரர்களுக்கு உரிய பூவினை வழங்கி, வீரர்களுக்கும் அரசர்கள் / இனக்குழுத் தலைவர்களுக்கும் உற்சாகமூட்டினர். போர் பற்றிய காட்சிகளைப் பாடல்களாய்ப் பாடினர். பாணர்கள் இசைக் கலைஞர்களாய் மட்டுமல்லாமல் அரசர்களாகவும் வீரர்களாகவும் இருந்துள்ளனர்.

இனக்குழுச் சமூகத்தில் பாணர்கள் முக்கியத்துவம் பெற்றமை போன்று, நிலவுடைமைச் சமூகத்தில் புலவர்கள் முக்கியத்துவம் பெற்றனர். புராதன இனக்குழுச் சமூகத்தைச் சார்ந்த பாணர்கள் புலவர் மரபிற்கு முற்பட்டவர்கள். நிலவுடைமைச் சமூகத்தில் கல்வி என்னும் சமூகத் தகுதியுடன் புதிதாய் பாடல் புனையும் புலவர் மரபால் பாணர்கள் இரண்டாம் நிலைக்குத் தள்ளப்பட்டனர். பாண் மரபு பாடல்களை உட்செறிந்தே புலவர் மரபு பாடல்களைப் புனைந்தது. புலவர்கள் தம்மைப் பாணனாய்க் கருதியே பாடல்களைப் பாடினர். வரிசையறிதல் என்னும் தகுதியால் கொடை வேறுபாடு கொள்ள வேண்டுமென புலவர்கள் அரசனை வற்புறுத்தினர். எனவே தம்மைப் புரக்கும் வள்ளல்களைத் தேடிப் பாணர்கள் அலைகுடிச் சமூகமாகத் திரிந்தனர். மிகுந்த வறுமையுற்ற பாணர்கள் சங்கப் பிற்காலங்களில் அரசர்களுக்கும், தலைவர்களுக்கும் நெருக்கம் கொண்டு அவர்களின் அக வாழ்க்கைக்குத் துணை செய்பவர்களாகவும், தூது செல்பவர்களாகவும் சமூக மதிப்பிறக்கம் பெற்றனர். மேலும் பாண்சேரி என்னும் தனிக்குடியிருப்பில் மீன்பிடிக்கும் தொழிலை மேற்கொண்டவர்களாகவும் இருந்துள்ளனர். புராதன காலத்தில் முக்கியத்துவம் பெற்ற பாணர்களின் நிலையினைப் புறப்பாடல்களும், சங்க காலத்தில் பாணர் பெற்ற மதிப்பிறக்கங்களை அகப்பாடல்களும் வெளிப்படுத்தி நிற்கக் காணலாம்.

**ஆய்வுப்பொருள்**

"சங்க இலக்கியம் வழி அறியலாகும் பாணர் மரபு" என்பது ஆய்வுத் தலைப்பாகத் தெரிவு செய்யப்பட்டுள்ளது. சங்க இலக்கிய மூலங்கள், சங்க இலக்கியம் தொடர்பான நூல்கள், கட்டுரைகள் ஆகியவற்றைக் களனாகக் கொண்டு இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. பாணர்களின் வாழ்க்கை

முறைகள் அவர்களின் சமூக இயங்கியல், புற இலக்கியங்கள் காட்டும் பாணர் வாழ்க்கைக்கும் அக இலக்கியங்கள் காட்டும் பாணர் வாழ்க்கைக்குமான வேறுபாடுகள், புலவருக்கும் பாணருக்குமான புலமை முரண்பாடுகள் போன்றவற்றை வெளிக்கொணரும் விதத்தில் இத்தலைப்பு ஆய்வுப் பொருளாகத் தெரிவுசெய்யப்பட்டுள்ளது.

**ஆய்வு முன்னோடிகள்**

சங்க இலக்கியப் பாணர்கள் குறித்த சில ஆய்வுகள் முன்னரே நிகழ்த்தப்பட்டுள்ளன. மா.சம்பத்குமார் என்பவரின் சங்க இலக்கியத்தில் கலைஞர்களின் வாழ்வியலும் பாணர்களின் தற்கால நிலையும், வெ.வரதராசனின் தமிழ்ப் பாணர் வாழ்வும் வரலாறும், இரா.இளங்குமரனின் பாணர் ஆகியன முழுநிலையிலும் கே.பழனிவேலுவின் பாட்டு மரபும் எழுத்து மரபும், க.கைலாசபதியின் தமிழ் வீரநிலைக் கவிதை ஆகியவற்றின் ஒரு பகுதியும் இக்களத்தில் ஆய்வு முன்னோடிகளாகக் கருதப்படுகின்றன.

**ஆய்வின் நோக்கம்**

பாணர்கள் என்போர் தமிழ்ச் சமூகத்தின் புராதன இனக்குழு மக்களாய் இருந்தவர்கள் என்பதை எடுத்துரைத்தல்.

இனக்குழுச் சமூகத்தில் பாணர்கள் சடங்குகளை நிகழ்த்தியவர்களாகவும், நிலவியல்சார் அறிவுடன் செயல்பட்டவர்களாகவும் இருந்தனர் என்பதை எடுத்துரைத்தல்.

மரபுவழிப்பட்ட வாய்மொழிப் பாடல்களைப் பாடும் பாணர்கள் நிகழ்த்துக்கலைகளை மேற்கொள்பவர்களாகவும், அரசர்களையும் மக்களையும் மகிழ்விப்பவர்களாகவும் செயல்பட்டனர் என்பதை எடுத்துரைத்தல்.

புலவர்களும் பாணர்களும் புலமை முரண்பாடுடன் செயல்பட்டனரா? இவர்களுக்கான சமூகத் தகுதி எவ்வாறு வழங்கப்பெற்றது என்பதை ஆராய்தல்.

இசைத்திறம் மிக்க பாண் சமூகத்தினர் வேறு தொழில்களைச் செய்தமைக்கான காரணங்களை ஆராய்தல். அக, புறப் பாடல்களில் பாணர்கள் வேறு வேறு தன்மையுடன் காணப்பட்டமைக்கான காரணங்கள் யாது? என்பதை ஆராய்தல் போன்றவை ஆய்வின் நோக்கங்களாகும்.

**ஆய்வுப் பயன்**

சங்க இலக்கியத்தில் அறியப்படும் பாணர்களின் குடிச்சிறப்பினையும் அவர்களின் தொன்மை மற்றும் இசைத்திறனை வெளிப்படுத்துதல். சமூக

செயல்பாடுகளில் பாணர்களின் பங்களிப்பு, பாணர் புலவர் வேறுபாட்டைக் கூறுதல் ஆகியவை இந்த ஆய்வின் வழி பெறக்கூடிய பயனாகும்.

**ஆய்வு மூலங்களும் ஆய்வு எல்லையும்**

தமிழின் செவ்விலக்கியங்களாக அறியப்படும் பாட்டும் தொகையுமான சங்க இலக்கியங்கள் முதன்மை ஆதாரங்களாகக் கொள்ளப்படுகின்றன. சங்க இலக்கியங்கள் குறித்து வெளிவந்த நூல்கள், முனைவர் பட்ட ஆய்வேடுகள், கட்டுரைகள் ஆகியவை துணைமை ஆதாரங்களாகக் கொள்ளப்படுகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

சங்க இலக்கிய பாடல்களில் காணப்படும் பாணர்கள் குறித்த செய்திகளைத் தொகுத்தல் எனும் முறையில் தொகுப்பு முறை ஆய்வும், பாடல்களில் இடம் பெற்றுள்ள செய்திகளை விளக்கி அதற்கான காரணங்கள் காணப்படுவதால் விளக்க முறை ஆய்வும் இந்த ஆய்வில் மேற்கொள்ளப்படுகின்றன.

**ஆய்வேட்டின் அமைப்பு**

"சங்க இலக்கியம் வழி அறியலாகும் பாணர் மரபு" எனும் தலைப்பில் அமையும் இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன. அவை,

1. பாணர்களின் சமூக வாழ்வியல்
2. பாணர்கள் - புலவர்கள்
3. பாணர்கள் - புரவலர்கள்
4. பாணர்களின் இசைத்திறனும் பிற கலைஞர்களும்

என்பன.

**இயல் ஒன்று – பாணர்களின் சமூக வாழ்வியல்**

தமிழின் தொல் வழக்காறு, வரலாறு, கலை, இலக்கிய, அறிவு மரபுகள் பற்றி ஆராய பாட்டும் தொகையுமான சங்க இலக்கியங்கள் முதன்மை ஆதாரங்களாகத் திகழ்கின்றன. இனக்குழுச் சமூகத்தில் முக்கியத்துவம் பெற்ற பொருட்களை வரிசைபடுத்தும் புலவர் பாணனைக் குறிப்பிடுகின்றார். புராதன தொல்குடிச் சமூகத்தைச் சார்ந்த பாணர்கள் சங்க காலத்தில் சடங்குகளை நிகழ்த்தினர். கடவுளை குழுவாகச் சென்று பாடிப் பரவினர். சங்க காலத்தைப் பொறுத்தவரை பாணர்களைச் சடங்கு நிகழ்த்தியவர்களிடமிருந்து

வளர்ச்சியுற்றவர்களாகக் காணமுடிகின்றது. இனக்குழுச் சமூகத்தில் பாணர்களுக்கு இருந்த முக்கியத்துவம் கருதியே முதுவாய்ப் பாணர் என அழைக்கப்பெற்றனர். மரபுவழிப்பட்ட வாய்மொழிப் பாடல்களைப் பாடும் பாணர்கள் தம் சுற்றத்தினருக்குக் குழுப்பாடல்களையும், இசையையும் வாய்மொழியாகத் தொடர்ந்து பயிற்சியின் மூலமாக அளித்தனர்.

பாணர்கள் தம்மை புரக்கும் அரசர்களின் புகழ், கொடை, வீரம் முதலியவற்றை மக்கள் மத்தியில் பரப்பும் கருவியாகச் செயல்பட்டனர். போர்க்காலங்களில் பாணர்கள் அரசனின் குழுவில் இடம் பெற்று, போர் வேட்கையினை அரசர்களிடமும் வீரர்களிடமும் தோற்றுவித்து அதனை வளர்த்தெடுப்பவராக இருந்துள்ளனர். போர்ச் சூழலை அறிவித்தல், வீரர்களுக்கு உரிய பூவினை வழங்குதல், போர்க் காட்சிகளைப் பாடல்களாய்ப் பாடுதல், போர் முடிந்த பின்பு ஆயுதங்களைச் சேகரித்தல் எனப் பாணர்கள் போர்ச் சூழலில் பங்கு கொண்டனர். தொல்பெரும் இசைக்குடிகளான பாணர்கள் அரசர்களாகவும் மற்போர் செய்வதில் வல்லவர்களான வீரர்களாகவும் இருந்துள்ளனர். குழுவாய் இயங்கிய பாண் சமூகத்தினர் / சங்கப் பிற்காலத்தில் மிகுந்த வறுமையுற்றவர்களாகவும் தம்மைப் புரக்கும் வள்ளல்களைத் தேடி அலைபவர்களாகவும் காணப்பட்டனர். பாண்சேரி என்ற தனித்த குடியிருப்பில் தங்கியிருந்து மீன்பிடிக்கும் தொழிலைச் செய்தனர். தலைவனின் அக வாழ்க்கையில் துணைவர்களாய் இருந்து தூது உரைத்தல், ஊடலைத் தீர்க்கும் வாயில்களாய்ச் செயல்பட்டு சமூக மதிப்பிறக்கம் பெற்றமை முதலானவை இவ்வியலில் ஆராயப்படுகின்றன.

**இயல் இரண்டு – பாணர்கள் புலவர்கள்**

பாட்டும் தொகையுமான சங்க இலக்கியப் பாடல்கள் தொல்பழஞ் சமூகத்தின் தொடக்கநிலைப் பாடல்களாக அறிய முடிகின்றது. புலவர்களுக்கு முற்பட்ட பாணர்கள் புராதன சமூகத்தில் மிகுந்த முக்கியத்துவம் பெற்றனர். பாணர் மரபு பாடலை உட்செறித்தே புலவர் மரபு பரிணமித்தது. சங்க இலக்கியப் பாடல்களை நேரடியாகப் பாணர் பாடல்கள் என்று கூற முடியாத போதும் கடந்த கால பாணர்களின் வாழ்வியலை நினைவுபடுத்திக் கூறும் பாடல்களாகக் கொள்ள முடிகின்றது. பழந்தமிழ்ச் சமூகத்தில் பாணர், புலவர்களின் சமூகத் தகுதிகள், அவர்களுக்கிடையேயான முரண்கள், பாடல் செல்நெறிகள் போன்றவை குறித்து இவ்வியலில் ஆராயப்பட உள்ளது.

சங்க இலக்கியம் பாணர், புலவர் என்ற இரு வேறுபட்ட மரபினரை முன்வைக்கின்றது. புராதன இனக்குழுச் சமூகத்தைச் சார்ந்த பாணர்கள் புலவர் மரபிற்கு முந்தியவர்களாக அறியப்பட்டனர். மரபுவழிப்பட்ட வாய்மொழிப் பாடல்களைப் பாடும் பாணர்களின் சொற்களே நுண்மையான புலப்பாடு உடையன என்னும் கருத்து வலியுறுத்தப்பட்டது. இனக்குழுச் சமூகத்தில் நிலவி வந்த கருத்துகள் நிலவுடைமைச் சமூகத்தில் வேறுவிதமாக மாற்றம் கொண்டது. பாணர்கள் பாடுதலை விரும்பிய அல்லது பாணர்களால் பாடப்படுதலே சிறப்பு என்றிருந்த நிலைமை மாறி புலவர்களால் பாடப்படுதலே பேறு என மதிக்கப் பெற்றனர். பாணர்களைப் பற்றிக் குறிப்பிடுகையில் 'கல்லா வாய்மொழியினர்' எனவும், புலவர்களைப் பற்றிக் குறிப்பிடுகையில் கல்வி, அறிவு, சொல் வன்மை ஆகியவற்றோடு இணைத்தும் கூறினர்.

மரபு வழிப்பட்ட வாய்மொழி பாடல்களைப் பாடும் பாணர்களையும், கல்வி என்னும் சமூகத் தகுதியுடன் பாடல் புனையும் புலவர்களையும் அரசர்கள் ஒரே விதமாய்ச் சமமாய் நடத்துவதை ஏற்க மறுத்தனர். அதற்கான கண்டனங்களை எழுப்பினர். வரிசையறிதல் என்னும் முறையால் கொடை வேறுபாடு கொள்ள வேண்டுமென அரசர்களை வற்புறுத்தினர். இனக்குழுத் தலைவர்களிடம் பாணர்கள் நெருக்கமாய் இருந்ததைப் போன்று அரசர்களிடம் புலவர்கள் நெருக்கமாய்க் காணப்பட்டனர். புலவர்கள் தம்மைப் பாணனாய்க் கருதியே பாடல்களைப் புனைந்தனர். பாணர்களிடமிருந்த உலகியல் அறிவு, வாழ்த்துப் பாக்களின் தன்மை போன்றவற்றை உட்செறித்தே புலவர்கள் பாடல்களைப் பாடினர். இனக்குழுச் சமூகத்தில் பாணர்களும் நிலவுடைமைச் சமூகத்தில் புலவர்களும் செல்வாக்குப் பெற்றமைக்கான காரணங்கள் இவ்வியலில் விவாதிக்கப்படுகின்றன.

**இயல் மூன்று – பாணர்கள் – புரவலர்கள்**

இனக்குழுச் சமூகத்தில் சிறந்த வேட்டையாடும் வீரனே தலைவன் எனப்பட்டான். தன்னிடமுள்ள அதிகப்படியான உணவுப் பொருட்களைத் தன்னைச் சார்ந்தவர்களுக்கு வழங்கினான். எனவே, அவன் வீரத்தைப் புகழ்ந்து பாடுபவர்கள் பாணர், புலவர்களாகப் பரிணாமம் அடைந்தனர். அரசர்களின் உயர் வீரம், கொடை, புகழ் முதலியவற்றைப் புகழ்ந்து பாடுவது புறம் என்றும், தலைவர்களின் அகச் செயல்பாடுகளைக் பாடுவது அகம் என்றும் பாகுபடுத்தப்பட்டன. அரசர்களுக்கும், பாணர்களுக்கும் உள்ள உறவு நிலை,

ஆள்பவர்களின் படிநிலைகள், கொடைத் தன்மை போன்றவை குறித்து இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

இனக்குழுச் சமூகத்தைச் சார்ந்த பாணர்களைப் பாதுகாத்தல் என்பது அரசர்களின், வள்ளல்களின் சமூகக் கடமையாகக் கருதப்பட்டது. இனக்குழுச் சமூகத்தில் வேட்டைக்குத் தலைமையேற்ற வீரர் / வேடர்களே இனக்குழுத் தலைவர் என்னும் தகுதி கொண்டு தன்னை நாடி வருபவர்களுக்குப் பரிசில்களை வழங்கிப் பாதுகாத்தனர். இனக்குழுத் தலைவர், சீறூர் மன்னர், வேந்தர் என்ற படிநிலை அமைப்பு கொண்ட பழந்தமிழ்ச் சமூகத்தில் தொல்குடி மரபினரான பாணர்களைப் பாதுகாத்தல் என்பது பாண்கடன் என்னும் சொல்லால் சமூகக் கடமையாகக் குறிக்கப்பட்டது. பொருளாதாரமற்ற இனக்குழுத் தலைவர்கள் தம்மிடம் வரும் பாணர்களுக்கு கொடை வழங்கச் சீறூர் மன்னனிடமும் செல்வந்தர்களிடமும் இரந்து நின்றனர். நிலவுடைமைச் சமூகத்து வேந்தர்கள் புலவர்களிடம் நெருக்கம் கொண்ட போதும் பாணர்களைப் புரந்து காத்தலை கடமையாகவே கொண்டனர். இனக்குழுச் சமூகத்தில் நாளோலக்கம் எனப்படும் ஆலோசனை குழுவில் முக்கிய இடம் பெற்ற பாணர்கள், வேந்தர்களின் காலத்திலும் நாளவை, திருவோலக்கம் என்ற பெயர் மாற்றத்துடன் தொடரவே செய்தனர். ஈகை பற்றிய கருத்துகள், அவற்றின் நன்மைகள், ஈகை இன்மையால் ஏற்படும் எதிர்மறைக் கருத்துக்களைக் கூறிப் புலவர்கள் தங்களை முன்னிறுத்திய போது பாணர்கள் இரண்டாம் நிலைக்குத் தள்ளப்பட்டனர். தனது முக்கியத்துவத்தை இழந்து கொண்டிருந்த காலத்தில் நகைவர்களாகக் குறிப்பிடப்பட்டு மகிழ்ச்சியை ஏற்படுத்தினர். இனக்குழுத் தலைவர்கள், சீறூர் மன்னர், வேந்தர்கள் பாணர்களுக்குப் பல்வேறு கொடைகள் வழங்கிப் பாதுகாத்தனர். இவர்கள் வழங்கிய கொடையினை நுட்பமாய்ப் பகுத்தராய முடிகின்றது. தம்மைப் புரந்த வள்ளல்கள் இறந்தபோது அதனைத் தம் வாழ்விழப்பாய்க் கருதியமை, கையறு நிலைப் பாடல்களைப் பாடியமை போன்றவை இவ்வியலில் விரிவாக விவரிக்கப்படுகின்றன.

**இயல் நான்கு – பாணர்களின் இசைத்திறனும் பிற கலைஞர்களும்**

தொல்இசைக்குடி மக்களான பாணர்கள் இசைத்திறம் மிக்கவர்களாகக் காணப்பட்டனர். பாணர்கள் யாழிசைக் கருவியையே மிகுதியாகப் பயன்படுத்தினர். யாழிசைக் கருவியை இசைக்க இசை நூல்களை அறிந்தே இசைத்தனர். தெய்வங்களை வழிபட தேவபாணி என்னும் இசையையும்

நடுகற்களை வழிபட மரபு வழிப்பட்ட இசையையும் இசைத்தனர். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் பண்களைப் பாட வேண்டிய காலம் அறிந்து பாடினர். புறச் செயல்களுக்கு ஏற்ப வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி என்று புறத்துறைப் பொருள்களிலும் பாடல்களைப் பாடினர். அரசர்களை வாழ்த்திப் பாடும் மரபு வழிப்பட்ட வாய்மொழிப் பாடல்களைப் பாடும் போது இருபத்தோரு துறைகளை அமைத்துப் பாடினர். யாழிசைக் கருவி மட்டுமல்லாது முழவு, தண்ணுமை, பறை போன்ற பிற இசைக் கருவிகளையும் பயன்படுத்தினர்.

விறலியர் எனப்படுவோர் பாணர்களுடன் இணைந்து செயல்பட்ட பெண் கலைஞர்களாவர். பாணர்களுடன் இணைந்து செயல்பட்ட இந்தப் பெண் கலைஞர்கள் பல்வேறு இசைக் கருவிகளையும் இயக்க வல்ல திறம் மிக்கவர்களாவர். இனக்குழுச் சமூகத்தில் மதிப்பு வாய்ந்தவர்களாய்க் காணப்பட்ட இக்கலைஞர்கள், வேந்தர்களின் காலத்தில் தலைவன் பொருட்டு தூது செல்பவர்களாகவும், ஊடல் தணிப்பவர்களாகவும் விளங்கினர். பாணர்களைப் போன்றே சமூக மதிப்பிறக்கம் பெற்றனர். கோடியர் எனப்பட்ட கலைஞர்கள் விழாக்காலங்களில் வேடம் புனைந்தாடுபவர்களாகவும், கிணைவர் எனப்பட்ட பொருநர் விடியற் காலையில் தடாரிப் பறை இசைப்பவர்களாகவும், வயிரியர் எனப்பட்ட கூத்தர்கள் ஊர் மன்றம் சேர்ந்து பின்பு தெருக்களில் உள்ள வீடுகளின் முன்பு பாடல்களைப் பாடுபவர்களாகவும், அகவலர், அகவுநர் எனப்பட்டோர் நுண்கோல் கொண்டு இன்குரலில் பாடல் பாடும் கலைஞர்களாகவும் காணப்பட்டனர். பாணர்களின் இசைத்திறன் குறித்தும் பிற கலைஞர்களின் செயல்பாடுகள் குறித்தும் இவ்வியலில் விரிவாகப் பேசப்படுகின்றன.

மனிதன் மனதில் தோன்றிய உணர்ச்சிகளையெல்லாம் பாடல்களாய்ப் பாடி வெளிப்படுத்தினான். தான் பார்த்த கேட்ட நிகழ்ச்சிகளையெல்லாம் வார்த்தைகளில் வெளிப்படுத்தி அவற்றை இசையுடனும் பாடினான். பின்னர் அவற்றைப் பதிவும் செய்து கொண்டான். தம் உள்ளத்தில் வைத்து இன்புறும் நிகழ்ச்சிகளை அகம் என்றும் பிறருக்கு உணர்த்தி மகிழும் நிகழ்ச்சிகளைப் புறம் என்றும் வரையறைக்குக் கொண்டு சென்றனர். அவ்வகையில் தமிழ்ச் சமூகத்தின் தொடக்க நிலைப் பாடல்களைச் சங்க இலக்கியங்கள் (பாட்டும் தொகையும்) என்று பெயரிட்டு அழைத்து வருகின்றோம்.

சங்க இலக்கியப் பாடல்கள் வெளிப்படுத்தி நிற்கும் பல்வேறு குடி மரபினர்களுள் இசைக்குடி மரபினரான பாணர்களின் வாழ்வியல் குறித்தும் அவர்தம் சமூக இயங்கியல், பெற்ற மதிப்புகள், மதிப்பிறக்கங்கள் போன்றவை குறித்தும் இவ்வியலில் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**பாணர் –என்பவர் யார்?**

பாணர் என்பவர்கள் தமிழ்ச் சமூகத்தின் தொடக்கநிலைப் பாடகர்களாக அறியப்பட்டவர்கள். மரபு வழிப்பட்ட வாய்மொழிப் பாடல்களைப் பாடும் இயல்பினர். யாழ் என்னும் இசைக்கருவியை இசைத்தவர்கள். அரசர்கள், வள்ளல்கள் பற்றிய புகழ்ச்சிப் பாடல்களைப் பாடிக் கொண்டு நிலம் முழுவதும் பயணித்தவர்கள். “நாட்டில் பாடல்களைப் பாடிக் கொண்டும் அரசர்கள் புகழைப் போற்றிக் கொண்டும் ஆங்காங்கு திரிந்த ஒரு கூட்டத்தினர் பாணர் எனப்பட்டனர். இப்பாணர் குடும்பங்கள் அடுத்த உணவு எங்கு எவ்வாறு கிடைக்கும் என்பது அறியாமல் எப்பொழுதும் திரிந்த வண்ணம் இருந்தனர்”[1] என்று ந.சுப்பிரமணியன் பாணர்கள் குறித்து குறிப்பிடுகின்றார்.

பண் இசைத்தவர்கள் பாணர் எனப்பட்டனர். பண் → பாண் → பாணர் என்றாகியது. “பாணர் - பாடினியரின் காலம் என்பது தொல்பழங்கால மக்கள் சமுதாயத்தில் முதன்முதல் இலக்கியம் தோன்றிய கால கட்டமாகும்”[2] என்று வெ.வரதராசன் பாணர்களின் தோற்றம் குறித்து குறிப்பிடுகின்றார். புராதன காலத்தில் பாணனே சிறப்பிடம் பெற்றவனாய்க் கருதப்பெற்றான். நிலம் முழுவதும் பயணித்ததால் தான் அறிந்த நிலவியல் தன்மைகளை மக்களுக்குப் பாடல்களாய்ப் பாடி வெளிப்படுத்தினான்.

மேலும் பாணர்கள் குறித்து க.த.திருநாவுக்கரசு, "பாணர் - பாடினியர் காலம் என்பது தொல் பழங்கால மக்கள் சமுதாயத்தில் முதன் முதல் இலக்கியம் தோன்றிய காலகட்டமாகும். அக்காலத்தில் பாணனே மூதறிஞனாகக் கருதப்பெற்றான். அவனுக்குச் சமுதாயத்தில் சிறப்பிடம் தரப்பட்டது. அவன் ஊர் ஊராகச் சுற்றித் திரிந்தான். எங்கு இன்ப நிகழ்ச்சிகள் நடந்தாலும் அங்கு அவன் முன்னின்று அவற்றை நடத்தி வைத்தான். அச்சமயங்களில் அவன் உணர்ச்சித் துடிப்புடன் வீரர்களின் அரும்பெருஞ் செயல்களைப் போற்றிப் பாடினான். அப்பொழுது தான் பாடும் பாடலுக்கேற்ப தாளமிட்டு ஆடினான். அவ்வாறு அவன் ஆடலோடு பாடலையும் சேர்த்துப் பாடியபொழுது அவனைச் சார்ந்த ஆடவர்களும் மகளிரும் அவனோடு சேர்ந்து ஆடிப் பாடிப் பார்வையாளரை மகிழ்வித்தனர்."[3] என்று குறிப்பிடுகின்றார்.

"பாணர் என்பதற்கு இசை பாடுவோர் அல்லது பண்பாடுவோர் என்பது பொருளாகும்"[4] என்று வித்தியானந்தன் குறிப்பிடுகின்றார். தன்னைப் புரக்கும் வள்ளல்கள் அரசர்களின் கொடைத் தன்மை, வீரம், வெற்றி, புகழ் முதலியவற்றை யாழிசையுடன் வாழ்த்திப் பாடும் தன்மை பெற்றவர்கள். பாணர்கள் மரபு வழிப்பட்ட வாய்மொழிப் பாடல்களைப் பாடும் இசை குடியினராவர்.

**பாணர் – பெயர்கள் (மாற்றுப் பெயர்கள்)**

பாணர்களுக்கு வழங்கப்படும் பெயர்கள் குறித்து பிங்கல நிகண்டு சென்னியர், வயிரியர், செயிரியர், மதங்கர், இன்னிசைகாரர் பாணரென்றும், சூடாமணி நிகண்டு சென்னியர், வண்டர், ஓவர், மதங்கர், சூதர், பண்ணுவர் என்றும் குறிப்பிட்டுள்ளன. மேற்கண்ட நிகண்டுகள், பாணர் பெயர்களாகக் குறிப்பிடுவன, சங்க இலக்கியத்திற்குள் காணப்படும் பிற இசைக் கலைஞர்களின் பெயர்களைப் பாணர்களுக்குரியது என்று குறிப்பிட்டுள்ளமையை அறிந்து கொள்ள முடிகின்றது.

சங்க இலக்கியத்திற்கு வழங்கப்பட்ட உரைகள், பாணர் மற்றும் பிற இசைக் கலைஞர்கள் தொடர்பான இடங்களில் இவர்களுக்கிடையேயான குடி வேறுபாட்டை நுட்பமாய் பகுத்துக் கூறப்படவில்லை. வயிரியர், கோடியர் போன்ற பிற இசைக் குடியினரையும் பாணர் என்றே பொதுவாகக் குறிப்பிட்டுள்ளனர். உரையாசிரியர்களின் இச்செயல்பாடுகள் குறித்து, "அனைத்துப் பாடல்களிலும் கலைஞர்களைக் குறிப்பிட்டுப் புலவர்கள் பரக்கவே பேசியுள்ள போதிலும் உரையாசிரியர்கள் அக்கலைஞர்களைப் பொருட்படுத்தாது

உரைசெய்துள்ளனர் என உணர முடிகிறது. கலை மற்றும் கலைஞர்கள் குறித்த பதிவுகளையும் ஆய்வுத் தேடல்களையும் உரையாசிரியர்கள் அழுத்தப்படுத்திக் கூறாமைக்குப் பக்தி இலக்கியக் காலத்தின் தாக்கம் பெற்றமையே காரணம்"[5] என்று குணசேகரன் தன் முன்னுரையில் குறிப்பிட்டுள்ள கருத்து மேற்கண்ட கருத்திற்கு வலுசேர்ப்பதாக அமைந்துள்ளது.

சங்க இலக்கியப் பாடல்களின் வழி பல்வேறு இசைப் பிரிவினரைக் காண முடிகின்றது. அவர்களுள் யாழிசைக் கலைஞர்களான பாணர்களைக் குறிக்க இயவர், நயவர், நகைவர், கலப்பையர் என்னும் மாற்றுப் பெயர்கள் வழங்கியுள்ளமையைக் காணமுடிகின்றது.

கருங்கோட்டு இன் இயம் இயக்கினிர் (பெரும்.392)

என்னும் பாடல் அடி, கரிய கொம்பினையுடைய யாழை இசைத்துச் செல்லுங்கள் என்று வறுமையில் உழன்ற பாணனை எதிர்பட்ட பாணன் ஆற்றுப்படுத்துகையில் குறிப்பிடுகின்றார்.

பாடுதுறை முற்றிய பயன்தெரி கேள்விக்
கூடுகொள் இன்னியம் குரல் குரலாக (சிறு.228-29)

என்னும் பாடல் அடிகள், பாடுகின்ற துறைகளிலெல்லாம் முழுவதும் பாடுதற்கமைந்த பயன் விளங்குகின்ற கூடுதல் இசைகளைக் கொண்டிருந்தது அவ்யாழ் என்று யாழினை இயம் என்று குறிப்பிடுகின்றார் புலவர். யாழ் - இயம்; யாழை இயக்குபவர் (பாணர்) இயவர் எனப்பட்டனர்.

அரியல் ஆர்கையர் இனிதுகூடு இயவர் (பதி . 27)

வண்டுகள் மொய்க்காத பூக்களைச் சூடிய தலையினை உடைய கள் உண்ணும் இயல்பினரான இனிய இசைக்கருவிகளைக் கொண்டோர் எனக் குறிப்பிடும் பாடலடி பாணர்களைச் சுட்டி நிற்கின்றது.

நயவன் தைவரும் செவ்வழி நல்யாழ்
இசைஓர்த் தன்ன இன்தீம் கிளவி (அகம்.212)

என வரும் பாடல் அடிகளில், யாழ்வல்லோன் இசைக்கும் செவ்வழிப் பண் அனைய இனிமை தவழும் பேச்சை உடையவள் தலைவி எனக் குறிப்பிடுகையில் பாணனை நயவன் என்று குறிப்பிடுகின்றனர்.

நயவன் - நயம் அறிந்த யாழ் வல்லோன்

திறல்சால் வென்றியொடு தெவ்வுப்புலம் அகற்றி
விறல்வேல் மன்னர் மன்எயில் முருக்கி
நயவர் பாணர் புன்கண் தீர்த்தபின் (சிறு. 246-48)

என வரும் ஆற்றுப்படை அடிகளில், மாறுபட்ட பகை வேந்தரை அழித்த பின், பொருள் விரும்பி வந்தோர்க்கும், பாணர்க்கும் அவர் வறுமைத் துன்பத்தைப் போக்கியவன் எனப் புகழும் வரிகளில் நயவர் என்பது பாணர்க்கு அடைமொழியாய் வந்துள்ளது.

பகைவர் ஆரப் பழங்கண் அருளி
நகைவர் ஆர நன்கலம் சிதறி (பதி.37)

நின் பகைவர்கள் நுகரும்படி துன்பந் தந்து, நினது மகிழ்ச்சிக்குக் காரணமானவர்கள் (பாணர்கள்) நிரம்பப் பெறும்படி அளித்தவனே எனப் போற்றும் போது பாணர்களை நகைவர் என்று குறிப்பிடுகின்றார். அரசர்களுக்கு எப்பொழுதும் மகிழ்ச்சியை உண்டாக்குபவர்கள் நகைவர்.

சங்க இலக்கியப் பாடல்களில் 'கலப்பை' என்னும் சொல் யாழிசைக் கருவியை இட்டு வைக்கும் பை என்னும் பெயரில் வழங்கி வந்தது. அத்தகைய பையினை உடையவர்கள் 'கலப்பையர்' என்னும் பெயரால் அழைக்கப்பட்டனர்.

கலப்பை - யாழிசைக் கருவியை இட்டு வைக்கும் பை
கலப்பையர் - யாழிசைக் கருவியை இட்டு வைக்கும் பையினை உடையவர்

மென்சொல் கலப்பையர் திருந்துதொடை வாழ்த்த (பதி.15)

வாங்குபு தகைத்த கலப்பையர் ஆங்கண் (பதி. 23)

காவில் தகைத்த துறைகூடு கலப்பையர் (பதி.41)

பல்தொகைக் கலப்பையர் (அகம்.301)

என வரும் பாடல்கள் பாணர்கள் கலப்பையர் என்னும் சொல்லால் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

**மண்டைப் பாணர்**

பாணர்களைப் பற்றிக் குறிப்பிடும் நச்சினார்க்கினியர் (தொல்.பொருள்.91) பாணர்கள் என்பார் இசைப்பாணரும், யாழ்ப்பாணரும், மண்டைப் பாணரும் எனப் பலராம் என்று குறிப்பிடுகின்றார். கைலாசபதி அவர்களும் "பிற்கால மரபுகள் இக்கலைஞர்களை வாய்ப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப் பாணர்

(மண்டை பிச்சைப் பாத்திரம்) என மூவகையாகப் பகுத்தன"[6] என்று அவர்தம் கருத்தை ஏற்று மொழிகின்றார். மேலும் ச.கு.கணபதி பாணர்கள் குறித்து, "பாணர்களில் இசைப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப்பாணர் முதலிய பல வகையினர் உண்டு. இசைப்பாணர் என்பவர்கள் வாய்ப்பாட்டுப் பாடுகின்றவர்களோ இசைக் கருவிகளைக் கொண்டு இசைப்பயிற்சியால் சீவிக்கின்றவர்களோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது. மண்டைப் பாணர் பிச்சை எடுத்து வாழ்பவர்கள். மண்டை என்னும் சொல் பிச்சைப் பாத்திரம் என்ற பொருளில் வழங்கி வந்துள்ளது."[7] என்றும் மு.அருணாசலம்[8] அவர்களும் இக்கருத்தையே ஏற்று மொழிந்துள்ளமையையும் காணமுடிகின்றது.

சங்க இலக்கியத்தில் மண்டை என்னும் சொல் பாணர்களுடன் மட்டுமல்லாது, விறலி, புலவர், உழவர் ஆகியோருடனும் தொடர்பு கொண்டுள்ளது. மேலும் மண்டை என்னும் சொல்லுக்கான பொருள் உண்கலம் என்னும் பொருளிலும், பிற சூழல்களிலும் பயின்று வந்துள்ளமையைக் காண முடிகின்றது.

*கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரெனச்*
*சுரன்முதல் இருந்த சில்வளை விறலி (புறம்.103)*

உணவு இல்லாமையால் கவிழ்ந்து வைக்கப்பட்ட கலத்தைத் திருப்பிவைக்க உணவு தருவார் எவர் என்று வறண்ட நிலத்தில் இருக்கும் விறலியே என வரும் பாடலில் மண்டை எனும் சொல் விறலியுடன் தொடர்பு கொண்டுள்ளமையும்,

இலம்படு புலவர் மண்டை விளங்கு புகழ்க்
கொண்பெருங் கானத்துக் கிழவன்
தண்தார் அகலம் நோக்கின மலர்ந்தே. *(புறம்.155)*

வறுமையுற்ற புலவர் கலங்கள், புகழ் விளங்கும் கொண்கானங் கிழானின் குளிர்ந்த மாலையணிந்த, மார்பை நோக்கியே மலர்வன ஆயின என்று குறிப்பிடும் போது புலவருடன் மண்டை என்னும் சொல் தொடர்பு கொண்டுள்ளமையையும்,

*விழவின்று ஆயினும் உழவர் மண்டை*
*இருங்கெடிற்று மிசையொடு பூங்கள் வைகுந்து (புறம்.384)*

என வரும் பாடலில் விழா எதுவும் இல்லை எனினும், உழவரின் உண்கலங்களில் பெரிய கெடிற்று மீன் உணவுடன், பூவுடன் கலந்த கள்ளும்

இருக்கும் என்று குறிப்பிடும் போது மண்டை என்னும் சொல் உழவருடன் தொடர்பு கொண்டுள்ளமையைக் காணமுடிகின்றது.

உண்கலம் என்னும் பொருளில்,

பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார் (புறம்.115)

ஏலாது கவிழ்ந்தஎன் இரவல் மண்டை (புறம்.179)

அழல்கான் றன்ன அரும்பெறல் மண்டை (புறம்.398)

எனவரும் பாடல்களில் மண்டை என்னும் சொல் உண்கலம் என்னும் பொருளிலும் அரசர், வள்ளல்களின் கொடைத் தன்மையைக் குறிப்பதாகவும் வந்துள்ளமையை அறியமுடிகிறது.

அருந்தலை அரும்பாணர் அகல் மண்டைத் துளையுரீஇ (புறம்.235)

மதுக்கலத்தைக் குறிக்கும் பொருளில்,

பரூஉக்கண் மண்டையொடு ஊழ்மாறு பெயர
உண்கும் எந்தைநிற் காண்குவந் திசினே (புறம்.125)

பருத்த இடமகன்ற மதுக்கலத்துடன் ஒன்று மாறி ஒன்று உண்பதற்கு வாய்ப்பாக வைத்த உன் மகிழ்வு இடத்தைக் காண வந்தேன் என்று புலவர் குறிப்பிடுகையில் மண்டை என்னும் சொல் மதுக்கலம் என்னும் பொருளில் வந்துள்ளமையைக் காணமுடிகின்றது.

தேங்கொண்ட வெண்மண்டையான் (புறம்.352)

எனவரும் பாடலில், கள் நிரம்பக் கொண்ட வெள்ளிய மண்டை என்னும் பாத்திரம் என்று குறிப்பிடுகின்றார்.

தனக்குமுகந்து ஏந்திய பசும்பொன் மண்டை
இவற்கீ கென்னும் அதுவுமன் றிசினே (புறம்.289)

என வரும் பாடலில், அரசனைப் புகழும் போது பொன்னாலாகிய மதுக்கலத்தில் உள்ள கள்ளைப் பாணர்களுக்குத் தந்தவன் எனப் புகழப்படுகின்றான். இப்பாடலில் மண்டை என்பது மதுக்கலத்தை உணர்த்தி நிற்கின்றது.

கழுவொடு சுடுபடை சுருக்கிய தோற்கண்
இமிழ்இசை மண்டை உறியொடு தூக்கி (கலி.106)

ஆயர்கள் தத்தம் இனங்களை மேய்த்தற்காக அழைத்துச் செல்லும்போது கழு, சூட்டுக்கோல், தம்முள் உரசும் போது ஒலிக்கும் உண்கலன்கள் ஆகியவற்றைத் தோளில் தாங்கி சென்றனர் என்ற குறிப்பு காணப்படுகின்றது.

அகல்விளக்கு என்னும் பொருளில்,

*உச்சிக் குடத்தர், புத்துஅகல் மண்டையர்*
*பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்* (அகம்.86)

எனவரும் பாடலில், காலை வேளையில் மணம் முடிக்கும் ஆரவாரத்துடன் மங்கல மகளிர் சிலர் தலையில் நீர்க்குடத்துடனும், சிலர் மண்டை என்னும் அகல்விளக்கு ஏந்தியவாறும் சிலர் மணப்பொருள்களைக் குவித்து வைத்தனர் என்று குறிப்பிடுகையில் மண்டை என்னும் சொல் அகல்விளக்கு என்னும் பொருளில் வந்துள்ளமையை அறிந்து கொள்ள முடிகின்றது.

எனவே, சங்க இலக்கியப் பாடல்களில் மண்டை என்னும் சொல் பிச்சைப் பாத்திரம் என்னும் பொருளில் எங்கும் பயின்று வரவில்லை என்பதுடன், மண்டைப் பாணர் என்னும் வகையினர் தனித்த நிலையில் இல்லை என்பதனையும் உய்த்துணர முடிகின்றது.

**பாணன் – பாடினி தோற்றம்**

பாணர் என்னும் இசைக்குடி மரபினரைக் குறிக்க, பாணர் / பாணன் என்ற சொற்கள் தவிர்த்து பாண்மகன் என்னும் சொல்லும் சங்கப் பாடல்களில் பயின்று வந்துள்ளமையைக் காண முடிகின்றது (பாண் மகன் - சிறு.37; பெரு.284; ஐங் . 48; 49; பதி.59; அகம்.392; புறம்.11).

புராதன இனக்குழு மரபைச் சார்ந்தவர்கள் என்பதால், பாணர்கள் தங்களுக்கெனத் தனித்த ஒப்பனை முறைகளைக் கொண்டிருந்தனர். தலையிலும் மார்பிலும் பொற்றாமரை மலர்களைச் சூடியது பற்றி,

*அழல்புரிந்த அடர்தாமரை*
*ஐதுஅடர்ந்த, நூல்பெய்து*
*புனைவினைப் பொலிந்த பொலம்நறும் தெரியல்*
*பாறுமயிர் இருந்தலை பொலியச் சூடி* (புறம்.29)

தீயால் வெதுப்பித் தகடாகச் செய்த தாமரைப் பூவுடனே, நுண்ணிதாகத் தட்டிக் கம்பியாகச் செய்த நூலில் கோத்து, அணிகலத் தொழிலால் விளங்கும் பொன்மாலையைத் தலை பொலிவுறச் சூடினர்.

பாணர் சென்னி பொலியத் தைஇ
வாடாத் தாமரை சூட்டிய (புறம்.126)

வாடா மாலை பாடினி அணியப்
பாணன் சென்னிக் கேணி பூவா (புறம்.364)

பாணர் தாமரை மலையவும் (புறம்.12)

என்னும் பாடல்கள், பாணர் தம் தலையில் பொன்னால் செய்யப்பட்ட தாமரை மலர்கள் சூடியிருந்தனர் என்பதைக் குறிப்பிடுகின்றன.

போது அவிழ் அலரி நாரில் தொடுத்துத்
தயங்கிரும் பித்தை பொலியச் சூடிப் (புறம்.371)

என்ற பாடல், பாணர்கள் அரும்பு மலர்ந்த பூக்களை நாரால் மாலையாகத் தொடுத்து, விளங்குகின்ற தலைமயிர் அழகுறச் சூடிக்கொண்டு இருந்தனர் என்பதைக் குறிப்பிடுகின்றது. தங்களைப் புரந்த வள்ளல் இறந்த போது, வருத்தமுற்ற பாணர்கள் மலர்களைச் சூடாமல் இருந்தது பற்றியும் சங்கப் பாடல்கள் தெரிவிக்கின்றன.

பாணர் சென்னியும் வண்டுசென் றூதா (புறம்.244)

தம்மைப் புரப்பவர் இனிய செவ்வியராகிய வழி பாணர் நம் தலையிற் பூக்களைச் சூடி இன்புறுவர். அப்பூவின் தேனாடி வண்டுகள் சென்று படிந்து ஊதூம். அத்தகைய வள்ளல்கள் இறந்த போது பாணர்கள் தம் தலையில் மலர்களைச் சூடுவதைத் தவிர்த்தனர்

பாணன் சூடான் பாடினி யணியாள்
ஆண்மை தோன்ற வாடவர்க் கடந்த
வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ வொல்லையூர் நாட்டே (புறம்.242)

என்னும் பாடல், ஒல்லையூர் தலைவன் சாத்தன் இறந்த பின்பு, பாணர்கள் தங்கள் தலையில் பூக்களைச் சூடாதிருந்தனர் என்பதைக் குறிப்பிடுகின்றது.

மெய்வளம் பூத்த விழைதகு பொன்அணி
நைவளம் பூத்த நரம்புஇயைசீர்ப் பொய்வளம்
பூத்தன பாணா! நின் பாட்டு (பரி.18)

என்னும் பாடல், உடலழகு விளங்குதற்குக் காரணமாகிய விரும்பத்தக்க பொன் அணிகளைப் பூண்ட பாணணே! என்று குறிப்பிடும்போது பாணர்கள் உடலழகுத் தோன்றுவதற்காகப் பொன் அணிகலன்களையும் பூண்டிருந்தனர் என்பதை அறிய முடிகின்றது.

பாடுஇன் தெண்கிணை கறங்க, காண்வர
குவிஇணர் எருக்கின் ததர்பூங் கண்ணி
ஆடூஉச் சென்னித் தகைப்ப மகடூஉ
முளரித் தீயின் முழங்கு அழல் விளக்கத்து
களரி ஆவிரைக் களர்பூங் கோதை (அகம்.301)

அழகு பொருந்துமாறு குவிந்த கொத்துக்களை உடைய எருக்கின் நெருங்கிய பூக்களால் ஆகிய கண்ணி, ஆடவர் தலையில் அழகு செய்யும் காட்டில் எழுந்த, ஒலிக்கின்ற தீயின் ஒளி போன்ற விளக்கத்தையுடைய ஆவிரைச் செடியின் விளங்கும் பூக்களால் ஆன மாலையானது மகளிரது நிறமுள்ள அழகிய மார்பகங்களில் கிடந்தசையும் என்று அகப்பாடல் பாணன், பாடினியின் தோற்ற வருணனைகளையும் ஒப்பனை முறைகளையும் குறிப்பிடுகின்றது.

பாடினி என்பவள் பாணனுடைய மனைவியாவாள். பாட்டி, பாண்மகள் என்னும் சொற்களாலும் அழைக்கப் பெற்றவள். இவள் பாடும் திறம் மிக்கவள். பாணனைப் போன்றே சமூகத் தகுதி பெற்றவளாகக் காணமுடிகின்றது. "பாடினி பாடல் வல்லாள்; ஆடலும் வல்லாள்; அவள் கருவியிசையும் பாடவல்லாள்; வாய்ப்பாட்டும் பாட வல்லாள்; பாணனொடு இசைந்து பாடுதலும் அன்றித் தனித்துப் பாடவும் வல்லாள்; புதியது புனைந்து பாடவும் வல்லாள்"[9] என்று இளங்குமரனும் பாடினியின் இயல்பு குறித்து குறிப்பிட்டள்ளார்.

பாடினியின் தோற்ற வருணனைக் குறித்து,

பாடினி சிறந்த அழகி; அவள் கூந்தல் ஆற்றின் கருமணல் போன்று இருண்டு நெளிந்தது; நெற்றி பிறை போன்றது; புருவம் கொலைத் தொழிலுடைய வில்லை ஒப்ப வளைந்தது; அழகிய கடைகளுடைய கண்கள் குளிர்ந்த நீர்மையின; இனிய சொற்களை பேசும் சிவந்தவாயோ மலரிதழ் போன்றது; பற்கள் முத்தை நிரைபடவைத்தாற் போன்றவை; மகரக்குழைகள் அசைந்து ஊசலாடும் காதுகள் கத்தரிகையின் குழைச்சுப்போல் அமைந்து அழகுறுவன; கழுத்தோ நாணம் வருந்துதலால் பிறரை நோக்காது முன்

வளைந்திருக்கும் இயல்பினது; தோள்கள் பருத்துத் திரண்ட மூங்கில் போலத் திரண்டவை; அவர் முன்கையில் ஐதமயிருண்டு; அவள் விரல்கள் உயர்ந்த மலைகளில் வளரும் காந்தட்பூப் போன்றவை; நகங்கள் கிளியின் அலகு போல் சிவந்து விளங்குவன; தனங்கள் சுணங்கணிந்து ஈர்க்கிடை போகாத எழுச்சியும் அழகுமுடையன; கொப்பூழ் நீர்ச்சுழி போன்றது; இடை உண்டு என்று பிறரால் அறிய முடியாது ஒருங்கி அசையும் இயல்பினது; அரை பல மணிகள் கோத்தமேகலாபரணம் அணியப் பெற்றது; துடைகள் பெண்யானையின் தும்பிக்கை போன்ற திரட்சியுடையன; அடிகள் ஓடி இளைத்த நாயின் நாக்குப் போன்றன, என்று பெரும்பாணாற்றுப்படையின் வரிகள் குறிப்பிடுகின்றன.

> *வாடா மாலை பாடினி அணிய* (புறம்.364)
>
> *புரிமாலையர் பாடினிக்கு* (புறம்.361)

என்னும் பாடல் அடிகள் பாடினியர் பொன்னரி மாலையைச் சூடியிருந்தனர் என்பதை உணர்த்தி நிற்கின்றது.

> *நூலின் வலவா நுணங்கு அரில்மாலை*
> *வால்ஒளி முத்தமொடு பாடினி அணிய* (பொரு.161)

என்னும் வரிகள் அழகிய தூய்மையான ஒளிபொருந்திய முத்துக்களோடு உடைய பொன்னாலாகிய மாலைகளைச் சூடியிருந்தனர் என்பதைக் குறிப்பிடுகின்றது.

> *மறம் பாடிய பாடினியும்மே* (புறம்.11)
>
> *பாடினி பாடும் வஞ்சிக்கு* (புறம்.15)

என்னும் பாடல் அடிகள், பாடினி பாடல் பாடுவதிலும் வல்லவள் என்பதை உணர்த்தி நிற்கின்றது.

**பாணர் – புராதனக் குடிகள்**

பாணர்கள் என்பார் தொல்பழங் குழுச் சமூகத்தைச் சார்ந்தவர்களாவர். இக்குடியினரே தமிழ்ச் சமூகத்தின் தொன்மை வாய்ந்த குடிகளாகும், மாங்குடி கிழார் என்னும் புலவர் தொன்மை வாய்ந்த குடிகளையும், அவர்களால் மதிக்கப் பெற்ற உணவு, பூ, வழிபடு தெய்வம் போன்றவற்றையும் நிரல்படுத்திக் கூறும் பாடலில்,

> *அடலரும் துப்பின்...*
> *குரவே தளவே குருந்தே முல்லையென்று*

இந்நான் கல்லது பூவும் இல்லை;
கருங்கால் வரகே இருங்கதிர்த் தினையே
சிறுகொடிக் கொள்ளே பொறிகிளர் அவரையொடு
இந்நான் கல்லது உணவும் இல்லை;
துடியன் பாணன் பறையன் கடம்பனென்று
இந்நான் கல்லது குடியும் இல்லை;
ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
ஒளிறுஏந்தி மருப்பில் களிறுஎறிந்து வீழ்ந்தெனக்
கல்லே பரவின் அல்லது
நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே (புறம்.335)

என்னும் பாடலில், இனக்குழு மக்களால் மதிக்கப் பெற்ற பூ வகைகளாக குரவு, தளவு, குருத்து, முல்லை ஆகியனவும்; வரகு, தினை, கொள், அவரை என்ற உணவு வகைகளும்; பூர்வ குடி மக்களாக துடியன், பாணன், பறையன், கடம்பன் என்ற குடியினரும், அவர்களால் வணங்கப் பெற்ற தெய்வம் நடுகற்கள் எனக் குறிப்பிடுகையில், தமிழ்ச் சமூகத்தின் தொல்குடி மக்கள் பாணர்களே என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது. "இவ்வடிகளை ஆராய்ந்த அறிஞர் சிலர் துடியன் பாணன் பறையன் கடம்பன் எனப்பட்ட நான்கு குடியினரும் திராவிடருக்கு முற்பட்ட பழங்குடி மக்களாவர் என்று குறிப்பிடுகின்றனர். வரலாற்றாசிரியர் ஒருவர் இந்நான்கு அல்லது குடியுமில்லை என்பது வியப்பாக இருக்கிறது என்றும், ஒரு கால் ஆரியர் கலப்பில்லாத ஆரியர் வருகைக்கு முற்பட்ட பழங்குடி மக்களை இப்பெயர்கள் சுட்டுவதாகலாம்."[10] என்று குறிப்பிடும் சண்முக சுந்தரத்தின் கருத்து இங்கு நோக்கத்தக்கது.

துடிய பாண பாடுவல் விறலி
என் ஆகுவிர் கொல் அளியிர்; நுமக்கும்
இவண்உறை வாழ்க்கையோ அரிதே (புறம்.280)

என வரும் பாடல், கொடை வள்ளலாய் விளங்கிய அரசன் இறந்து விட்டான். புராதன குடிகளான துடியன், பாணன், விறலி ஆகிய இக்கலைஞர்கள் பாதுகாக்கப்பட வேண்டியவர்கள். எனவே இனி இவர்களின் நிலை என்னவாகுமோ என உணர்ச்சி மேலிட புலவர் குறிப்பிடுவதைக் காண முடிகின்றது.

பாணர் மரபு என்பது பின்னர் வந்த புலவர் மரபுக்கும், வேந்தர் மரபிற்கும் முற்பட்டதாக அறியலாம். மேலும் அவர்களின் செயல்திறன்கள் தமிழ்ச் சமூகத்தின் பூர்வகுடி மக்கள் இவர்களே என்பதை உணர்த்தி நிற்கின்றது. "தமிழ்ச் சமூகத்தின் புராதனமான இனக் குழுச் சமூகங்களின் கலாச்சாரத்தின் அங்கமாக விளங்கிய பாணர் மரபும், அவற்றிலிருந்தும், அவற்றை விஞ்சியும் வன்முறைகளால் உருவான வேந்தர் முடியாட்சிச் சமுதாயமும், அதன் அங்கமாகிவிட்ட புலவர் மரபும் தனித்துவமானவையாக இயங்கின. குறிப்பாகப் பாணர் மரபு உருவான திணைவாரிக் குடிச் சமூகம் மூலதிராவிட (மூலதமிழ்) நாகரிகத்தையும் கலாச்சாரத்தையும் கொண்டிருந்தன"[11] என்று ராஜ் கௌதமன் குறிப்பிடுவது முற்றிலும் பொருத்தமுடையதாகும்.

## கடவுள் வழிபாட்டில் – பாணர்கள்

தொல்பழஞ் சமூகத்தைச் சார்ந்த பாணர்கள் சங்க காலத்தில் கடவுள் வழிபாட்டுடன் தொடர்புடையவர்களாகக் காணப்பட்டனர். தெய்வங்களின் முன்னர் பாணர்கள் இசைக் கருவிகளை இசைத்து வழிபாடு நடத்தியமைக்கான பதிவுகள் காணக்கிடைக்கின்றன. இதனைக் கே.பழனிவேலு "சங்க இலக்கியங்களில் பாண்பாடல்களின் எச்சங்களை மட்டுமே நம்மால் காணமுடிவதனால் பாண்பாடல்களுக்கும், மந்திரப் பாடல்களுக்கும் இருந்த தொடர்புகளைத் தனியே அடையாளப்படுத்திக் காண இயலவில்லை. அதே நேரம் கடவுளரைப் பாணர்கள் குழுவாகச் சென்று பாடிப் பரவும் நிகழ்வுகளைச் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன"[12] எனச் சுட்டுகின்றார்.

சாதாரண மக்களிடமிருந்து தங்களை வேறுபடுத்திக்கொண்ட பாணர்கள், இசை, பாடல், ஆடல் என்று மீவியல்புகளைக் கொண்டமையால் கடவுள் வழிபாட்டுடன் தொடர்புடையவர்களாகக் காணப்பட்டனர். இப்பாணர் குடியினரிடமிருந்தே வழிபாட்டு முறை வளர்ச்சியுற்றது எனலாம். "பாணர் பாடல்களின் தோற்றம் உண்மையில் பூசாரி, பூசாரிகளிடம் இருந்து வந்த பல்வேறு பணிகளின் கிளைபரவலைச் சுட்டுகின்றது. ஒரு போர்ப்படைச் சமூகம் தனது இலட்சியங்களை, எண்ணங்களை, பெரும் விருப்பங்களை, தமது வெற்றிகளை மையப்படுத்திக் கட்டமைவு செய்யும் அசைவியக்கத்தில் அவற்றைக் குலமுதல்வனுக்காகவும் அப்பழங்குடிக்காகவும் எடுத்துச் செல்ல பொதுநபர்கள் அவசியம் பாணர்கள் அப்பணியைச் செய்தனர்."[13] இவ்வாறு வழிபாட்டு மரபில் பாணர்களின் முக்கியத்துவத்தைச் சேவியர் தனி நாயகம் அடிகளார் வெளிப்படுத்தியுள்ளார்.

உளரும் கூந்தல் நோக்கிக் களர
கள்ளி நீழல் கடவுள் வாழ்த்திப்
பசிபடு மருங்குலை கசிபுகை தொழாஅக்
காணலன்கொல் என வினவினை வரூஉம்
பாணகேள்மதி யாணரது நிலையே (புறம்.260)

எனவரும் பாடலில் பாணன் களர் நிலத்துள்ள கள்ளி மரத்தின் நிழற்கண் உண்டாகிய தெய்வத்தை ஏத்தி வாழ்த்தினான் என்றும்,

காவில் தகைத்த துறைகூடு கலப்பையர்
கைவல் இளையர் கடவுட் பழிச்ச (பதி.41)

என வரும் அடிகள் இசைத்துறையில் வல்ல பாணர்கள் தாம் போகும் வழியிடையே தீங்கு வராதிருக்க கடவுளைப் போற்றி வாழ்த்தினர் என்றும்,

தெறல் அருங் கடவுள் முன்னர் சீறியாழ்
நரம்பு இசைத்தன்ன இன்குரற் குருகின் (நற்.189)

என வரும் பாடலடிகள் பாணர்கள் கடவுள் முன்னர் சீறியாழ் இசைத்து வழிபட்டனர் என்பதையும் உணர்த்தி நிற்கின்றது.

பாடின பாணிக்கு ஏற்ப, நாள்தொறும்
களிறு வழங்குஅதர்க் கானத்து அல்கி,
இலைஇல் மராஅத்த, எவ்வம் தாங்கி
வலைவலந் தன்ன மென்நிழல் மருங்கில்,
காடுஉறை கடவுட்கடன் கழிப்பிய பின்றை (பொரு.48-52)

என வரும் பாடலடிகள், பாடினி பாடிய பாட்டின் தாளத்திற்கு ஏற்ப காட்டில் உறைகின்ற தெய்வமாகிய கொற்றவைக்கு தம் கடன்களைச் செய்தனர். தினந்தோறும் யானைகள் செல்லுகின்ற கொடிய காட்டில் தங்கினர். இலைகள் நீங்கிய மரங்களின் வலைபோன்ற நிழலில் தங்கினர். காட்டுவழிப் பயணம் ஆதலால் காட்டில் உறையும் தெய்வத்தை வழிபட்டுத் தம் கடன்களைச் செலுத்தினர் என வரும் குறிப்புகள் மூலம் பாணர்கள் காட்டில் உறைந்த கடவுளர்களுக்கு இசையுடன் சடங்குகளைச் செய்து வழிபட்டனர் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

தொன்று ஒழுகு மரபின் தம்மியல்பு வழாஅது
அருந்திறல் கடவுள் பழிச்சிய பின்றை (மலை.537-38)

என வரும் அடிகள், பாணர்கள் தம் பழமை மரபின்படி, அளத்தற்கரிய வலிமையுடைய இறைவனை வாழ்த்தினர் என்பதை உணர்த்தி நிற்கின்றது.

தொழாதனை கழிதல் ஓம்புமதி; வழாது
வண்டுமேம் படூஉமிவ் வறநிலை ஆறே (புறம்.263)

என வரும் பாடலடிகள், அவ்வழியில் நீ செல்லுவாயென்றால் நடுகல்லாய் நின்ற வீரனை வழிபடாமல் செல்லுவதைத் தவிர்ப்பாயாக எனப் பாணனை நடுகல் வழிபாட்டுடன் தொடர்புபடுத்துவதையும்

கல்லே பரவின் அல்லது
நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே (புறம்.335)

என்னும் அடிகளும் பாணர்களை நடுகல் வழிபாட்டுடன் தொடர்புடையவர்களாகவே காட்டி நிற்கின்றது.

திவவுமெய்ந் நிறுத்துச் செவ்வழி பண்ணிக்
குரல்புணர் நல்யாழ் முழவொடு நன்றி
நுண்நீர் ஆகுளி இரட்டப் பலவுடன் (மது. 604-06)

எனவரும் பாடலடிகள் கோவிலில் பாணர் வாரால் கட்டப்பெற்ற யாழில் செவ்வழிப் பண்ணைப் பாடினர். குரல் நரம்போடு ஒன்றிய யாழும், முழவும், சிறுபறையும் இணைந்து ஒலித்தன என்று குறிப்பிடும் போது பாணர்கள் கோவிலில் இசைத்தது பற்றி அறியமுடிகிறது.

பாணர்கள் புராதன காலத்தில் சடங்குகளை நிகழ்த்தியவர்களாகவும் கடவுள் வழிபாட்டுடன் தொடர்புடையவர்களாகவும் காணப்பட்டனர். பின்னர் சங்கப் பிற்காலத்தில் நிலவுடைமைச் சமூகத்தில் அரசர்களை மட்டுமே புகழ்ந்து பாடும் பாடகர்களாக உருமாற்றம் எய்தினர்.

"தொல் சமூகத்தின் சடங்குடன் இணைந்த பாணர்கள் சடங்கிலிருந்து பிரிக்கப்பட்டு வெறும் இசைக் கலைஞர்களாக மட்டுமே மாற்றப் பெற்றிருக்கலாம்"[14] என்று கே.பழனிவேலு கூறுவது பாணர்கள் வெறும் இசைக்கலைஞர்கள் என்ற நிலையில் மட்டும் இருந்தனர் என்பதை எடுத்துரைப்பதாக அமைகின்றது.

**முதுவாய்ப் பாணன்**

தொல்பெருங் குழூச் சமூகங்களில் சடங்குகள் மற்றும் விழாக்களில் பங்காற்றிய பாணர்கள் முதுவாய்ப் பாணர்கள் என அழைக்கப் பெற்றனர். இசை,

பாடல், ஆடல் என்னும் மீத்தன்மைகளைக் கொண்டமையாலும், புராதன குடிகளில் ஒன்றாகத் திகழ்ந்தமையாலும் பாணர்களின் சொற்களுக்குத் தனித்த முக்கியத்துவம் சங்க காலத்து மக்களால் தரப்பட்டது. "முதுவாய் எனும் இச்சொல் வாய்மொழியாகத் தொடர்ந்து பேணப்பட்டு வந்துள்ள நாட்டுப்புற மரபின் தொடர்ச்சியான ஒன்றாகச் சடங்குச் சூழலிலும் வழிபாட்டுச் சூழலிலும் பயன்படுத்தப்பட்ட ஒரு சொல்லாக உள்ளது"[15] என்று பெ.மாதையனும் "முதுவாய் முதிர்ந்த அறிவினைப் பேசி வெளிப்படுத்துவது ஆகும். அத்துடன் அது மத மந்திர இணைப்பைக் கொண்டிருந்தது"[16] என்று க.சிவத்தம்பியும் குறிப்பிடுகின்றனர்.சங்க இலக்கியப் பாடல்களில் குறிப்பிட்ட குடியினருக்கும் மீத்தன்மை கொண்ட மனிதர்கள், உயிர்களுக்கு மட்டுமே இச்சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. பழமையான அறிவு என்பதற்கு முதுவாய் என்ற அடைமொழி பயன்படுத்தப்பட்டுள்ளது.

"முதுவாய் என்பது இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும் அறிய வல்லவராகவும் வருவது உரைப்பவராகவும் கருதப்படும் மனிதர்க்கு அல்லது உயிர்களுக்குரிய அடைமொழியாகும். இவ்வாடவரும் மகளிரும் சடங்குகளை இயற்றுகின்றனர். இத்தகைய வருவதுரைக்கும் ஆற்றல் சில தெய்வங்களைத் தம்மீது இட்டுக் கொள்வதால் கிடைக்கப் பெறுவது. இதனால் இத்தகைய மகளிர் இயல்பான மனிதர்கள் அல்லர் எனக் கூறப்பட்டமை அறியப்பெறும். ஒருவரின் துன்பம் குறித்துத் தெளிவுறுத்தற்கும் தகுந்த மருந்துகளைக் கூறுவதற்கும் இவர்கள் அழைக்கப்பட்டனர் என்பது செய்யுட் பகுதிகளால் தெளிவாக்கப் பெறுகின்றது. வேறு வகையாகக் கூறினால், இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும் அறிந்து கூறுதற்கு இவர்கள் அழைக்கப்பெற்றனர்"[17] என்று க.கைலாசபதி குறிப்பிடுகின்றார்.

ஈங்கிருந் தீமோ முதுவாய்ப் பாண; (புறம்.319)

என வரும் பாடலில், அறிவு முதிர்ந்தவன் பாணன் என்று குறிப்பிட முதுவாய் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

மேலும்,

முதுவாய் இரவல (சிறு.40; பரி.66, 48, 70)

முதுவாய் ஒக்கல் பரிசிலர் (புறம்.237)

என வரும் பாடல்களில் இடம் பெறும் முதுவாய் எனும் சொல் பாணர்களைக் குறிப்பதாகவே அறிய முடிகின்றது. பாணர் மட்டுமல்லாது கோடியர் எனும்

இசைக் கலைஞர்களையும் இச்சொல் அடையாளப்படுத்தியிருப்பதையும் அறிய முடிகின்றது.

முதுவாய்க் கோடியர் (குறு. 78; பட்.53)

எனவரும் பாடல்களின் மூலம் பாணர்களையும், பாணர் குழு சுற்றத்தினரையும் முதுவாய் என்னும் முன்னொட்டால் அழைத்தமையை அறிந்து கொள்ளமுடிகிறது. "இத்தகைய முன்னொட்டால் அழைக்கப்பெற்ற பாணரின் சங்க கால சமுதாயத்திற்கு முற்பட்ட சமூகத்தால், மிகச் சிறப்புடன் விளங்கியவர்களாகவும், சடங்குகளுடன் தொடர்புடையவர்களாகவும் இருந்திருக்க வேண்டுமென உய்த்துணர முடிகின்றது. இந்த அடைமொழியைப் பாணர்க்கும் கூத்தர்க்கும் பயன்படுத்துதலும், அதன்வழி அவர்கள் மரபுவழியாக வருவது உரைத்தலோடு தொடர்பு பெற்றிருத்தலும், ஓர் எச்சமான செயல் என விவாதிக்க முடியும். இந்த அடைமொழியைப் பயன்படுத்துவதின் பின்னணியில், ஒரு மேலோங்கிய அல்லது மிகவும் கருதத்தக்க வருவதுணர்த்தும் கூறுகொண்ட செய்யுள் மரபு இருப்பதை ஒருவர் இயல்பாகவும் தெளிவுறவும் உய்த்துணர முடியும்."[18] எனவரும் கைலாசபதியின் வரிகள் மேற்கண்ட கருத்திற்கு அரண் செய்வதாக அமைகின்றது.

மேலும் முதுவாய் என்னும் சொல்,

முதுவாய்க் குயவ (நற்.200)

என வரும் பாடலில் முதுவாய் எனும் சொல் குயவர்களுடன் தொடர்பு கொண்டுள்ளமையைக் காணமுடிகின்றது. புராதன சமூகத்தில் குயவர்களுக்கு இருந்த முக்கியத்துவம் கருதியே அவ்வாறு அழைக்கப்பெற்றனர்.

முதுவாய்ப் பொய்வல் பெண்டிர் (அகம்.22, 63)

முதுவாய் வேலன் (அகம். 195, 248, நற். 282)

முதுவாய்ப் பல்லி (அகம். 387)

என வரும் பாடல்களில் வரும் முதுவாய்ப் பெண்டிர் என்பது தெய்வமேறப்பட்ட குறிகூறும் பெண்களையும், வேலனுடன் தொடர்புடைய உச்சி மயிரை ஆடையால் கட்டி, சிறு பையில் வளைந்த கோல் ஒன்றையும் உடைய, எதிர்காலத்தை உரைக்கும் அறிவு வாய்ந்த வேலன் என்று குறிப்பிடுவதாகவும் காணமுடிகின்றது. கடும் போர்க்களத்தில் அம்புகளின் கூட்டத்தால் எய்யப்பெற்ற புகழும் மானமும் மிக்க வீரர்களுக்குரிய நினைவு

நடுகல் வரிசைகள் அங்கு உள்ளன. வீரர்க்களுக்கான நடுகல்லில் இருந்து, முதுவாய்ப் பல்லி பசியால் சிறிது கீச்சொலி செய்யினும், அணியணிந்த யானை மீது செல்லும் ஆற்றல்மிகு அரசரும் அதனைக்கெடு குறியாகக் கருதித் தம் பயணத்தைத் தொடராது திரும்புவர் என்று குறிப்பிடும் போது பல்லியின் ஒலி முக்கியத்துவம் கருதி முதுவாய் என்னும் அடைமொழியால் அழைக்கப்பெற்றமையைக் காண முடிகின்றது.

தொல்குடிச் சமூகத்தைச் சார்ந்த பாணர்கள் சடங்குகள், கடவுள் வழிபாட்டோடு தொடர்புடையவர்களாய்க் காணப் பெறுவதால் வருவது உணர்த்தும் ஆற்றல், புராதன பெருமை, தெய்வத் தன்மை, வெகுமக்களைக் காட்டிலும் உயர்ந்தோர் என வேறுபல பொருள் கோடல்களையும் இச்சொல் தருகின்றது. "பாணர்கள் தெய்வீக ஆற்றலுடையவர்களாகக் கருதப்படுவதுண்டு. அவர்கள் சொற்பலிக்கும் என்ற நம்பிக்கை மக்களிடையே காணப்படும். வருவதுணர்த்தும் ஆற்றலுடையவர் என்றும் அவர்கள் கருதப்பட்டனர்"[19] என்று தமிழண்ணல் குறிப்பிட்டுள்ள கருத்து அறிய தக்கது.

மேலும் முதுவாய் எனும் சொல்,

பல் ஆயமொடு பதிபழகி
வேறுவேறு உணர்ந்த முதுவாய் ஒக்கல்
சாறயர் மூதூர் சென்று தொக்காங்கு
மொழிபல பெருகிய பழிதீர் தேயம் *(பட்.213-216)*

என வரும் பட்டினப்பாலை அடிகள். பழமையான அறிவை உடையவராகப் பல்வேறு இடங்களில் வாழ்ந்தவர் எனக் குழு சார்ந்த நிலையில் முதுவாய் எனும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. எனவே, பாணர்களுக்கு வழங்கப்படும் முதுவாய் எனும் இச்சொல் சடங்குகளை நிகழ்த்தும் தெய்வீக ஆற்றல், அறிவின் முதிர்ச்சி, குடி பழமை எனப் பல்வேறு நிலைகளில் விரிந்த பொருள் கொள்ள ஏதுவாக நிற்கின்றது.

**பாணர்கள் – அலைகுடிச் சமூகத்தினர்**

சங்க இலக்கியப் பாடல்களில் பாணர்கள் அலைகுடிச் சமூகத்தினராகவே காட்சிபடுத்தப்பட்டனர். தம்மைப் புரக்கும் வள்ளல்களைத் தேடி பெரும் சுற்றத்தாருடன் நிலம் முழுவதும் பயணித்தனர். "பாணர், பாடினியர் போன்ற கலைஞர்கள் சங்க காலங்களில் மிதவைச் சமூகமாக வாழ்ந்தார்கள். குடிகளையும், அரசனையும் இணைக்கும் இணைப்புத் தளமாகக் கலைஞர்தம் வாழ்வியல்

நிலவியது. ஓர் ஊர் ஒரு நாடு என ஓர் எல்லைக்குள் கலைஞர்கள் வாழ்க்கை அடங்கவில்லை. எல்லா நாடும், எல்லா ஊரும் கலைஞர்தம் நாடாகவும், ஊராகவும் திகழ்ந்தன"[20] என்று குணசேகரன் சுட்டுகிறார். அரசர்கள், வள்ளல்களைத் தேடிச் சென்று அவர்கள் பற்றிய புகழ்ச்சிப் பாடல்களைப் பாடி, பல்வேறு பரிசில்களைப் பெற்று வந்தனர்.

உணவுத் தேவையின் பொருட்டு அலைகுடி வாழ்க்கையை மேற்கொண்ட பாணர்கள் நிலவியல்சார் அறிவினையும் புரிதல்களையும் உள்வாங்கிக் கொண்டு குழுப்பாடல்களின் மூலம் அவற்றை வெளிப்படுத்தினர். "புலவர் மரபிற்கு முன்பே பூர்வ இனக்குழுக் குடிகளின் நாகரிகத்துக்கு ஏற்றதாக, அதன் பாலியல் மற்றும் உணவு சேகரிப்பு, நுகர்வு, சேமிப்பு, தொடர்ச்சி சார்ந்த லௌகீக நடவடிக்கைகளைப் பாணர் மரபு என ஒன்று பதிவு செய்திருப்பதை ஒரு கருதுகோளாக, காரணமாக முன்மொழியலாம். அந்தப் பாணர் மரபு, உணவு மற்றும் பாலியல் நுகர்ச்சித் தேடலைத் தனது நாகரிகமாகக் கொண்டியங்கிய இனக்குழுவாழ்வின் நிலைபேற்றுக்கு இன்றியமையாத உலகியல் அறிவினை, அந்த இனக்குழுவின் அறிவுக் களஞ்சியமாகத் தொகுத்து வைத்திருந்தது. இதனை இன்னும் சற்று விவரிக்கலாம். பாலியல் உணர்ச்சி, அதன் வெளிப்பாடு, அதன் இலக்கு, அதன் நுகர்ச்சி, களிப்பு, அதன் பயன், அதன் எச்சத்தின் தொடர்ச்சி குறித்த குழுப்பாடல்கள், இரசப் பாடல்கள், சடங்குவகை மந்திரங்கள் ஆகியவற்றைப் பாணர் மரபு தனது குடியின் தொழிலாகக் கொண்டு வாய்மொழி மரபாகச் சேமித்து வைத்தது. அடுத்ததாகக் குழு வாழ்வின் உயிரியல் தேவையை நிறைவேற்றுதற்கு உரிய இரை / உணவு, பாலியல் போலன்றி, தங்கள் உடல்களுக்கு, அதாவது அகத்திற்கு வெளியே, புறத்தில் இறைந்து கிடந்ததை வெகு நுட்பமாக அவதானித்துப் பாணர் மரபு பதிவு செய்தது. உணவைத் தேடுவது அதன் சரியான இருப்பிடத்தை காலம், பருவம், நிலம் ஆகியவற்றுக்கு ஏற்றவாறு அறிந்து அடையாளப் படுத்துவது, உணவாகக் கண்டறியப்பட்ட பறவைகள், விலங்குகள், மீன்கள், பூச்சி புழு இனங்கள், செடி கொடிகள், பூக்கள் காய் கனிகள்,தானியங்கள், கிழங்குகள் இவற்றை அடைவதிலுள்ள தடைகள், இவற்றைக் கண்டறிய உதவும் இயற்கை மற்றும் செயற்கை உத்திகள், கருவிகள் ஆகியவற்றை வாய்மொழி மரபாகப் பாணர் மரபு இனக்குழு வாழ்வின் உலகியல் அறிவாகப் பதிவு செய்தது"[21] என வரும் ராஜ்கௌதமன் கருத்து பாணர்களின் வாழ்வியலை எடுத்தியம்புவதாக அமைகின்றது.

அலைகுடிச் சமூகத்தினராக நானிலம் முழுவதும் பயணித்து நிலவியல் அறிவினைப் பெற்று தம் குழுப்பாடல்களின் மூலம் அவற்றைப் பதிவு செய்தனர்.

ஆன்இனம் கலித்த அதர்பல கடந்து
மான்இனம் கலித்த மலைபின் ஒழிய
மீன்இனம் கலித்த துறைபல நீந்தி
உள்ளி வந்த வள்ளுயிர்ச் சீறியாழ்
சிதாஅர் உடுக்கை முதாஅரிப் பாண (புறம்.138)

என வரும் பாடல், பசு இனம் மிக்க வழிபலவற்றையும் கடந்து, மான் கூட்டமிக்க மலை கழிய, மீன் தொகுதிமிக்க நீர்நிலை பலவற்றை விலகி பாணர்கள் புலவலர்களைக் காண வந்ததாகக் குறிப்பிடுகின்றது.

பறையொடு தகைத்த கலப்பை என் முரவுவாய்
ஆடுறு குழிசி பாடுஇன்று தூக்கி
மன்ற வேம்பின் ஒண்பூ உறைப்பக்
குறைசெயல் வேண்டா நசைய இருக்கையேன்
அரிசி இன்மையின் ஆரிடை நீந்தி (புறம்.371)

என வரும் பாடல், இசைக் கருவிகளைக் கட்டிய பையை உடையவனாய், முரிந்த வாயையுடைய சமையல் கலங்களைச் சமைக்கும் செயலில்லாமல் தூக்கிக் கொண்டு, ஆக்குதற்கு அரிசி இல்லாமையால் அரிய வழிகளைக் கடந்து வந்தேன் எனக் குறிப்பிடும் பாடலின் மூலம் பாணன் பாடினி அலைகுடியாக இருந்தது பற்றியும்,

பழுமரம் தேரும் பறவை போலக்
கல்லென் சுற்றமொடு (பெரு.20)

என வரும் அடிகள் பாணர்கள் பழுத்த மரத்தை தேடி அலையும் பறவைகள் போல் இருந்தனர் என்று உவமையாகக் குறிப்பிடுகின்றது.

களிறுவழங்கு அதர்க் கானத்து அல்கி
இலைஇல் மராஅத்த, எவ்வம் தாங்கி
வலைவலந் தன்ன மென்நிழல் மருங்கில் (பொரு.491-93)

என வரும் அடிகள் யானைகள் செல்லுகின்ற கொடிய காட்டில் தங்கினர். இலைகள் நீங்கிய மரங்களின் வலைபோன்ற நிழலில் பாணர்கள் பாடினியுடன் தங்கியது பற்றிக் குறிப்பிடுகின்றது.

*கார்கோட் பலவின் காய்ந்துணர் கடுப்ப*

*நேர்சீர் சுருக்கிக் காய கலப்பையிர்*

*கடுக்கலித்து எழுந்த கண்ணகன் சிலம்பில்*

*படுத்துவைத் தன்ன பாறை மருங்கின்* (மலை.12-15)

இசைக் கருவிகளைப் பையில் போட்டு இருபக்கமும் சமமாக இருக்கத் தோளில் சுமந்து செல்கின்றனர். கருவிகள் வைத்திருந்த பை,கார் காலத்துப் பழுக்கும் பலாக்காய்க் கொத்துக்களைப் போன்றிருந்தது எனக் குறிப்பிடுவதன் மூலம் பாணர் குழுக்களாய் அலைகுடியாக இருந்தனர் என்பதை அறிந்து கொள்ளமுடிகிறது.

*பகல் நீடு ஆகாது இரவுப்பொழுது பெருகி*

*மாசி நின்ற மாகூர் திங்கள்*

*பனிச்சுரம் படரும் பாண்மகன் உவப்ப* (பதி.59)

பகற்பொழுது நீளாமல் இரவுப் பொழுது நீண்டு விளங்குவதும், மாசித் தன்மை நிலைபெற்றதும், விலங்குகள் குளிரால் உடலை வளைத்து உறைவதற்கு உரியதுமான மாதத்திலும் பாணன் புரவலரைக் காண வந்தது பற்றி அறிய முடிகின்றது.

நிலையில்லாத வாழ்க்கையை மேற்கொண்ட பாணர் ஊர் ஊராய் சென்றது பற்றியே ஆற்றுப்படைப் பாடல்கள் குறிப்பிட்டுள்ளன. "பாணர்கள் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குக் கூட்டமாகச் சென்று கலைகளை நிகழ்த்தி வந்தனர். தமது வறுமையைத் தீர்க்கும் பொருட்டு மன்னர்களை நாடி வேற்றிடங்களுக்குச் சென்றுள்ளனர். இதனால் பாணர்கள் தம் இருப்பிடங்களை அடிக்கடி மாற்றிக் கொண்டு வாழ்ந்துள்ளனர்."[22] என்று குறிப்பிடும் கே.பழனிவேலு கருத்து பாணர்கள் நிலையில்லாத வாழ்க்கையை மேற்கொண்டு வாழ்ந்தனர் என்பதை மேலும் அறிந்து கொள்ள வகை செய்கின்றது.

**பாணர் – பெரும் சுற்றத்தினர்**

சங்க இலக்கியப் பாடல்களில் பாணர்கள் பெரும் சுற்றத்தினராகவே காட்சிப்படுத்தப்பட்டுள்ளனர். பாணர்கள் கூட்டமாகச் சென்று, தம் இசைக்கலையை அரசர்கள், வள்ளல்களிடம் நிகழ்த்திக் காட்டி பரிசில்களைப் பெற்று வந்தனர். "பாணர்கள் கடும்பசி ஒக்கலாக, கூட்டமாக, பாடினி, விறலி, இளையோர், சிறார், பெரியோர் அடங்கிய குழுவாக, பல குடும்பங்கள் இணைந்ததொரு இனக்குழுவாக ஊர் ஊராகப் புரவலர்களிடம் தம்

வித்தையைக் காட்டி உடை, மது, ஊன் உணவு, பொற்றாமரை, ஆரம் முதலியவற்றைப் பெறுபவர்களாகச் சித்தரிக்கப்பட்டுள்ளனர்"[23] என்று ராஜ்கௌதமன் குறிப்பிட்டுள்ளார்.

*பைதல் சுற்றத்துப் பசிப்பகை யாகிக்*
*கோழியோனே; கோப்பெருஞ் சோழன் (புறம்.212)*

எனப் பாணர் சுற்றத்தின் பசியைப் போக்கியவன் என்று அரசனைப் புகழும் போதும்,

*கல்லென் சுற்றமொடு கால்கிளர்ந்து திரிதரும்*
*புல்லென் யாக்கைப் புலவுவாய்ப் பாணன் (பெரு. 21-22)*

என வரும் ஆற்றுப்படை அடிகளிலும் பாணர்கள் சுற்றத்தாருடனேயே காட்சிப்படுத்தப்பட்டனர். மேலும் பாணர்களின் சுற்றம் குறித்து சங்க இலக்கியப் பாடல்கள் பல்வேறு வகைகளிலும் குறிப்பிட்டுள்ளதை,

*இரும்பாண் ஒக்கல் (புறம். 224)*
*இரும்பேர் ஒக்கல் (புறம். 378,301,சிறு.14)*
*காரென் ஒக்கல் (புறம். 141)*
*முதுவாய் ஒக்கல் (புறம்.237)*
*இலம்பாடு ஒக்கல் (புறம். 285)*
*பசித்த ஒக்கல் (புறம். 389)*
*பாண் கடும்பு (புறம். 33,170)*
*பாடுநர் கடும்பென (புறம். 160)*
*வறுங்கடும்பு உய்தல் (புறம்.181)*
*பரிசில் கடும்பே (புறம். 205)*

எனப் பல்வேறு நிலைகளிலும் பாணர் சுற்றம் இருந்ததை சங்கப் பாடல்களின் வழி அறிந்து கொள்ள முடிகின்றது. "கலைஞர்களாகப் பாணர்கள் இருந்ததனால், குழுவாகவே இயங்க வேண்டியிருந்தது. மேலும், பலவிதமான இசைக்கருவிகளை இசைக்கவும் பாடவும் ஆடவுமான கலைஞர்கள் இக்குழுவில் இடம் பெற்றிருந்தனர். அகவன் மகள், ஆடுமகள், ஆடுகளமகள், கண்ணுளர், கலப்பையர், கிணைமகள், கிணைமகன், கிணையர், கோடியர், சென்னியர், துடியர், பாணர், பாடினி, பாண்மகன், பாண்மகள், பாடுநர், பாடுமகள்,

பொருநர், வயிரியர், விறலியர் எனும் பல்வேறு கலைஞர்கள் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.இவர்களைப் பாணர் சுற்றத்தினராகக் கருதலாம். இவர்கள் அனைவரும் இணைந்தே நிகழ்வுகளை நடத்தியுள்ளனர். நிகழ்த்துக்கலை மரபினால் ஒரு குழுவாக இயங்க வேண்டிய தேவை பாணர்களுக்கு இருந்துள்ளது"[24] என வரும் கருத்து பல்வேறு இசைக்கலைஞர்கள் இக்குழுவில் இடம் பெற்றிருப்பினும் இக்குழுவைப் பாணனே தலைமையேற்று நடத்தினான் என்பதை அறிய இடம் தருகின்றது.

> புணர்புரி நரம்பின் தீம்தொடை பழுனிய
> வணர்அமை நல்யாழ் இளையர் பொறுப்பப்
> பண்அமை முழவும் பதலையும் பிறவும்
> கண் அறுத்து இயற்றிய தூம்பொடு சுருக்கிக்
> காவில் தகைத்த துறைகூடு கலப்பையர்
> கைவல் இளையர் கடவுட் பழிச்ச (பதி.41)

என வரும் பாடலில், இசை பொருந்தியதும், முறுக்கிய நரம்புக் கட்டுடையதும், வணர் என்னும் உறுப்புடையதுமாகிய யாழினை இளைய பெண்கள் சுமந்து சென்றனர். பண் பொருந்திய முழவு, ஒரு கண் மாக்கிணை, பிற இசைக் கருவிகள் ஆகியவற்றை, வங்கியம் என்னும் கருவியோடு கட்டிய மூட்டை காவு தடியின் ஒரு புறம் விளங்க, மறுபுறம் ஆடல் துறைக்கு வேண்டிய பொருட்களைப் பொதிந்த மூட்டை அமைய அதனைச் சுமந்தவராய் இளையர் சென்றனர். செல்லும் போது, இசைத்துறை வல்ல அவர்கள் வழியிடையே தீங்கு வாராதிருக்கும் பொருட்டுக் கடவுளைக் குறித்து வாழ்த்திப் பாடினர் என வரும் பாடலில் பாணர்கள் எவ்வாறு பெரும் சுற்றத்தாருடன் சென்றனர் என்பதைக் காணமுடிகின்றது.

தங்களைப் புரக்கும் வள்ளல்களைத் தேடிய பாணர்கள் குழுக்களாக இயங்கியமை பற்றியும், இசை, நடனம் போன்ற நிகழ்வுகளை அவர்கள் இணைந்தே நிகழ்த்திக் காட்டினர் என்பதையும் சங்க இலக்கியப் பாடல்களின் வழி அறிந்துகொள்ள முடிகின்றது.

**பாணர்கள் – வறுமை**

பாணர்கள் அலைகுடிச் சமூகத்தினராகவும், பெரும் சுற்றத்தாருடனும் காணப்பட்டமையால் அவர்களை வறுமை வயப்பட்டவர்களாகவே சங்க இலக்கியப் பாடல்கள் காட்சிப்படுத்தின. பாணர்கள் அரசர், வள்ளல்களிடம்

தங்கள் வறுமையை எடுத்துக் கூறியே பரிசில்களைப் பெற்றனர். ஆற்றுப்படை என்னும் துறைகள் / பாடல்கள் பாணர்களின் வறுமை நிலையை நன்கு விளக்கி நிற்கின்றது. சங்க இலக்கியப் பாடல்கள் தனித்த நிலையில் பாணர் வறுமையைப் பற்றிக் குறிப்பிடாது, குழு நிலையிலேயே வறுமையைக் காட்சிப் படுத்துகின்றது.

"இனக்குழுச் சமுதாயத்தில் இருந்த குழுவினர் பறையன், துடியன், பாணன், கடம்பன் எனக் கலைமரபினராகவே இருந்துள்ளனர் (புறம்.335). இவர்கள் இனக்குழுத் தலைவனின் ஆதரவிலேயே வாழ்ந்துள்ளனர். புன் செய் வேளாண்மையை அடிப்படைப் பொருளாதாரமாகக் கொண்டிருந்த இந்த இனக்குழுச் சமுதாயம் பற்றாக்குறை உடைய சமுதாயமாக இருந்துள்ளது. பற்றாக்குறை காலங்களில் இனக்குழுத் தலைவர்களான சீறூர்மன்னர்கள் அதைப் போக்குவதற்கான தொழிலாக, வழியாக வேந்துவிடுதொழிலை மேற்கொண்டுள்ளனர். வேந்துவிடுதொழிலால் கிடைத்த உணவுப் பொருட்களும் பரிசுப் பொருட்களும் சமுதாய பொதுத்துய்ப்பிற்கும் மீள்வழங்குகைக்கும் உரியனவாக இருந்துள்ளனவேயன்றி தனிஉடைமைகளாக இருக்கவில்லை. பாணர் போன்றோர்க்குத் தானியங்களும் பரிசு பொருட்களும் வழங்கப் பட்டிருக்கின்றன. இந்த வேந்துவிடுதொழிலே நிலக்கொடைகளைப் பெற்று நிலத்தலைவர்களாக உயரும் நிலைக்குச் சீறூர் மன்னர்களை மாற்றுகின்றது. இந்நிலையில் பாணர் போன்ற இனக்குழுச் சமுதாய குடிகள் உடைமைச் சமுதாயத்தின் வளத்தை நோக்கி நகரத் தொடங்குகின்றனர். குழுவின் பொதுத்துய்ப்புக்கான கலைகளை வழங்கும் கலைஞர்களாக இனக்குழுச் சமுதாயத்தில் இருந்த இவர்கள் பின்னர் உடைமைச் சமுதாயத்தின் குறிப்பாக அச்சமுதாய தலைவர்களின் தனித் துய்ப்புக்கான கலைகளை வழங்கும் கலைஞர்களாக மாற்றம் அடைந்துள்ளனர்"[25] என வரும் கருத்து தொல் பழங்காலத்தில் மிகுந்த முக்கியத்துவம் பெற்ற பாணர்கள், பின்னர் நிலவுடைமை சமூகத்தில் வள்ளல்களைப் போற்றி புகழ்ந்து தம் வாழ்க்கையை மேற்கொண்டனர் என்பதனை விளக்கி நிற்கின்றது.

உடும்புரித் தன்ன எலும்பெழு மருங்கில்
கடும்பின் கடும்பசி களையுநர்க் காணாது
சில்செவித் தாகிய கேள்வி நொந்து நொந்து
ஈங்குளவன் செய்தியோ பாண. (புறம்.68)

எனவரும் பாடலில், உடும்பைத் தோல் உரித்தாற் போல எலும்பு எழும்பிய விலாவையுடைய சுற்றத்தின் வாட்டும் பசியை நீக்குபவரைக் காணாமல், கேட்பவர் பலராயினும் சிலரே விரும்பிக் கேட்கும் கலைத்திறத்தை எண்ணி மிகுநோவுற்று இங்கே என்ன செய்கின்றாயோ பாணனே, எனவரும் பாடலில் வறுமையின் காரணமாய் மிக மெல்லிவுற்ற பாணனின் தோற்றத்தைக் காணமுடிகின்றது.

கையது கடன்நிறை யாழே; மெய்யது
புரவலர் இன்மையிற் பசியே; அரையது
வேற்றிழை நுழைந்த வேர்நாண சிதாஅர்,
ஓம்பி உடுத்த உயவல் பாண, (புறம்.69)

என வரும் பாடலில், கையிலே இசை நலம் நிறைந்தயாழ்; உடலிலே உதவுவார் இல்லாமையால் பசி; இடுப்பிலே, தைத்தலால் வேறு நூல் புகுந்த வேர்வையால் நனைந்த கிழிந்த ஆடை; அதனைப் பேணி உடுத்த வறிய பாணனே எனவும் பாணரின் வறுமை நிலையைக் காட்சிப்படுத்துகிறது.

பசித்த பாணர் உண்டுகடை தப்பலின் (புறம்.327)

உணவுக் கொடை வழங்குதல் பற்றிய பாடலில் பாணர்கள் பசித்தவர்கள் என்றே குறிப்பிட்டுள்ளனர்.

யாணர் நன்னாட்டுள்ளும் பாணர்
பைதல் சுற்றத்துப் பசிப்பகையாகி (புறம்.212)

கோப்பெருஞ்சோழன் பாணர்களின் வறுமைச் சுற்றத்திற்கு அமைந்த பசியைத் தீர்ப்பவன் என்று புகழப்படுகின்றான்.

பாணர்களின் இரங்கத்தக்க வறுமை நிலையினை ஆற்றுப்படை பாடல்கள் நன்கு பதிவு செய்துள்ளன. இனக்குழுச் சமூகத்தில் போற்றுதலுக்குரிய இசைக்கலைஞர்களாக மதிக்கப்பெற்ற பாணர்கள், பின்னர் அரசர்கள், மக்களை மகிழ்வித்து பரிசில் வேண்டி வாழ்பவர்களாய் மாறினர். "தொல்குடிச் சமூகங்களில் சடங்கு ரீதியில் நெருக்கமான உறவு பூண்டு வந்த பாணர் முதலானோர் மன்னராட்சி உடைமை சமூகத்தில் காலங்கடந்த எச்சங்களைப் போல ஆனார்கள். வறுமைக் கூட்டங்களாக இவர்கள் ஊர் ஊராய் நடந்து திரிந்து அரச அவை, அரண்மனை வாயில் ஆகிய இடங்களிலும், விழாக் களங்களிலும் தங்களது வித்தையைக் காட்டிப் பசியாற்றினார்கள். இவர்களது வாழ்க்கை

இரந்துண்டு (பிச்சை எடுத்து) வாழும் வாழ்க்கை போல ஆனது. ஆற்றுப் படைப்பாடல்களில் இவர்களது இரங்கத்தக்க நிலையைக் காணலாம்"[26] என வரும் ராஜ்கௌதமனின் கருத்து மேற்கண்ட கருத்திற்கு வலுசேர்ப்பதாக அமைந்துள்ளது

ஆடுபசி உழந்தநின் இரும்பேர் ஒக்கலொடு
நீடுபசி ஓராஅல் வேண்டின், நீடுஇன்று
எழுமதி வாழி, ஏழின் கிழவ (பொரு.61-63)

என வரும் அடிகள் பாணனை நோக்கி, ஏழு நரம்புகளை இயக்குகின்ற இசையின் தலைவனே! உங்களை வருத்துகின்ற மிகுதியான பசித் துன்பத்தைப் போக்குவதற்கு காலம் நீட்டிக்காமல் உடனே நான் சொல்லுகின்ற இடத்திற்குச் செல்வீராக என ஆற்றுப்படுத்துவதைக் காணமுடிகின்றது. சிறுபாணாற்றுப் படையில், பசியால் வருந்தும் குடும்பம், பசித்துன்பத்தால் துன்புற்று மெலிந்த இடையுடையளானாள் கிணைமகள். கூரிய நகத்தால் குப்பையில் முளைத்திருந்த வேளைக் கீரையை உப்பில்லாமல் வெந்ததை,பிறர் பார்த்துவிடின் புறங்கூறி நகைப்பார்களே என முன்வாயில் கதவை அடைத்து, தம் கரிய பெரிய சுற்றத்துடன் உண்கிறாள் (சிறு.130-140) பெரும்பாணாற்றுப்படை அடிகளிலும் (பெரு.19-22) இவ்வாறே பாணர் தம் வறுமையைக் காணமுடிகின்றது.

பாணர்கள் புராதன இனக்குழுச் சமூகத்து கலைஞர்கள் ஆதலால், உழைப்பின் மூலம் தங்கள் வாழ்க்கையை மேற்கொள்ளாதவர்களாயிருந்தனர். அரசர்கள், வள்ளல்களின் முன்பு தங்கள் கலைத்திறனைக் காட்டி பல்வேறு பரிசில்களைப் பெற்றனர். இனக்குழுச் சமூகத்தில் போற்றதக்கவர்களாய் இருந்த கலைஞர்கள் நிலவுடைமை சமூகத்தில் இரங்கத் தக்கவர்களாய் மாறினர். இதனை பெ.மாதையன், "பாணர் குழுக்களாக இருந்து கலையையே தொழிலாக மேற்கொண்டவர்களாக வாழ்ந்த நிலையினராக உள்ளனர். இவர்களின் உழைப்பு பிறரை நம்பியே செய்யப்படுவது எனும் நிலையிலான சார்புநிலையால் இனக்குழுச் சிதைவில் நிலவுடைமை சமுதாயத்தை நோக்கிச் செல்லத் தொடங்கு கின்றனர். பாணர் உள்ளிட்ட கலைஞர் இந்த மாறுதல் காலகட்டத்தில் இனக்குழுவின் அழிவால் பாணர் போன்ற கலைஞர்கள் வறுமைச் சூழலுக்கு ஆட்படுகின்றனர். பாணர்களின் வாழ்வுக்கு ஆதாரமாக இருந்த கடையெழுவள்ளல்களின் இறப்பும் அவர்களை வறியவர்களாக்கி இடப்பெயர்ச்சிக்கு ஆளாக்குகின்றது. இவர்களின் கலைத்திறம் நிலவுடைமை சமுதாய தலைவர்களால் பயன்கொள்ளப்படுவதோடு அது இவர்களின் வறுமை நீக்க வழியாகவும் ஆகின்றது"[27] என்று குறிப்பிட்டுள்ளார்.

மேலும் இனக்குழுச் சமூகத்தில் செல்வாக்குடன் திகழ்ந்த பாணர்கள், நிலவுடைமைச் சமூகத்தில் மதிப்பிறக்கம் பெற்றமைக்கான காரணத்தை ராஜ்கௌதமன், "உணவு உற்பத்தியிலோ உணவு சேகரிப்பிலோ, பண்ட மாற்றிலோ நேரடியாகப் பங்கு பெறாமல் பழைய இனக்குழுச் சமூக வழக்கப்படி, குழுச் சமூகத்திற்குரிய சடங்குகள், பொழுது போக்குகள், விழாக்கள், களியாட்டங்கள் ஆகியவற்றில் தங்களது இசை, கூத்துக் கலைத் திறன்களை வெளிப்படுத்தி மகிழ்வித்து வலிமை ஏற்படுத்தி குழுச் சமூகத்தாலும் ஊராலும் பராமரிக்கப்பட்டு வந்த பாணர், துடியர், கிணைவர் முதலான இசைக் குடும்பத்தார்கள் மன்னராட்சி சமூக அமைப்பில் மதிப்பிறக்கம் அடைந்தார்கள்"[28] என்று குறிப்பிட்டுள்ளார். புரவலர்களின் கொடைத் தன்மையை உயர்த்திக் காட்டவே பாணர்களின் வறுமை நிலை மிக விரிவாகப் பேசப்பட்டதாக உய்த்துணர முடிகின்றது.

**மரபு வழி – பயிற்சி**

புராதன இனக்குழுச் சமூகத்தைச் சார்ந்த பாணர்கள் தாமறிந்த நிலவியல் தன்மைகளையும், இசை நுட்பங்களையும், வாழ்த்துப் பாடல்களின் முறைகளையும் மரபு வழிப் பயிற்சியாக, வாய்மொழிப் பாடல்களாக அடுத்த தலைமுறையினருக்குப் பயிற்றுவித்தனர். "இசைப் பயிற்சி ஒரு வகையான கல்வியாக அளிக்கப் பெறாமல், தொழிலறிவாகவே அளிக்கப் பெற்றது. எழுதிப் படித்து அறிதல், ஆசிரியர் கற்பிக்க கற்றுக் கொள்ளுதல் என்ற நிலையிலன்றிக் கேள்விக் கல்வியாக, பரம்பரை வழியே கற்றலாகப் பாணரின் இசைக் கலை இருந்துள்ளது"[29] என்று கே.பழனிவேலு பாணர்களின் மரபுவழி பயிற்சி குறித்து குறிப்பிட்டுள்ளமையைக் காணமுடிகின்றது. பாணர் தம் சுற்றத்தினருக்கு மரபு வழிப்பட்ட வாய்மொழிப் பாடல்களையே வழங்கி வந்தனர்.

"பாணர்களின் கலையான பாடுதல், அவிநயத்தல், உணர்ச்சியுடன் பேசுதல் ஆகியவை முதியவர்களிடமிருந்து வாய்வழியாகக் கற்கப்பெற்றன. இத்தகு கற்றலின் உட்கூறுகளான விதிமுறை, உட்கருத்து, மரபுவழி, உள்ளடக்கம் போன்றவை நினைவூட்டும் வழியாக விளங்கின. இவை பாணராலும் அவையினராலும் சமமாகப் பகிர்ந்து கொள்ளப் பெற்றன. இப்படிப் பட்ட சூழ்நிலையில் கல்வி என்ற ஒன்று இக்காலகட்டத்தில் இல்லாமலிருந்தது வியப்பளிப்பதன்று"[30] என்று பாணர்களின் கற்றல் முறை பற்றி மேலும் கே.பழனிவேலு குறிப்பிடுகின்றார்.

பாணர்களின் குழுக்களில் இளையவர்கள் இடம் பெற்று, அவர்கள் பாடும் முறை, இசைத்திறம் போன்றவற்றைக் கற்றனர் என்பதைப் பல்வேறு பாடல்களும் வெளிப்படுத்துகின்றன. "சுற்றமாகச் சூழ்ந்த பெரிய கூட்டத்தினர் நிகழ்ச்சிகளைப் பொறுத்தவரை என்ன செய்தனர் என்று தெளிவாகத் தெரியவில்லை. ஆனால் குழுவில் உள்ள இளைஞர்கள் ஒரு குறிக்கோளுடன் சென்றதாகத் தெரிகிறது. அவர்கள் பயிற்சியாளர்கள், தங்களின் மூத்தோருக்கான சிறு தொழில்களைச் செய்ததுடன் பாண்கலையையும் கற்றனர்."[31] எனவரும் கைலாசபதியின் கருத்தும், "பாணர்களோடு வருகின்ற இளைஞர்கள் அவர்கள் பாடுவதைக் கேட்டும் கண்டும் பாடல் கலையில் தேர்ச்சி பெற்றிருத்தல் வேண்டும்"[32] என வரும் பாண்டுரங்கன் கருத்தும் மேற்கூறிய கருத்திற்கு அரண் சேர்ப்பதாக அமைகின்றது.

செல்லா யோதில் சில்வளை விறலி!
மலர்ந்த வேங்கையின் வயங்குஇழை அணிந்து
மெல்லியல் மகளிர் எழில்நலம் சிறப்பப்
பாணர் பைம்பூ மலைய இளையர்
இன்களி வழாஅ மென்சொல் அமர்ந்து
நெஞ்சுமலி உவகையர் வியன்களம் வாழ்ந்த (பதி.40)

என வரும் பாடலில் பாணர் சுற்றத்தினர் போர்க்களத்தில் அரசனை வாழ்த்திப் பாடினர் என வரும் போது, இளஞ்சிறார் மெல்லிய சொற்களால் இதயத்தில் மகிழ்ச்சி பொங்கப் போர்க்களப் புகழைப் பாடினர் என்று கூறும் போது, முழுவதும் கற்காத இளையவர்களைக் காண முடிகின்றது.

புணர்புரி நரம்பின் தீம்தொடை பழுனிய
வணர்அமை நல்யாழ் இளையர் பொறுப்பப்
பண்அமை முழவும் பதலையும் பிறவும்
கண்அறுத்து இயற்றிய தூம்பொடு சுருக்கி (பதி.41)

என வரும் பாடலில், கற்றல் நிலையில் இருந்த அரசர்கள், பாணர்களின் இசைக் கருவியைச் சுமந்து சென்றனர். அரசர்/வள்ளல்களின் முன்பு இசையை நிகழ்த்துகையில் அவற்றை உற்று நோக்கி குழுப்பாடல்களையும், இசை நுட்பத்தையும் உள்வாங்கிக் கொண்டனர் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

கண்டோர் மருளும் வண்டுசூழ் நிலையும்
கனவுஎன மருண்ட என்நெஞ்சு ஏமாப்ப
வல்அஞர் பொத்திய மனம்மகிழ் சிறப்ப,
கல்லா இளைஞர் சொல்லிக் காட்ட (பொரு.97-100)

ஆற்றுப்படுத்தும் பாணனின் கூற்றாக வரும் இப்பாடலில், அவனைச் சந்திப்பதற்கு முன் வறுமையில் இருந்தோம். அவனைக் கண்ட பின்பு பிறர் எங்களைக் கண்டு வியந்து மயங்கும் நிலையில் வண்டுகள் சூழும் தன்மையில் இருந்தோம். இது கனவுதானோ என்று நாங்கள் நினைக்கும் நிலையில் எங்களைச் சார்ந்த வேறு தொழிலைக் கல்லாத இளைஞர் இது உண்மை எனச் சொல்லிக் காட்டினர் என வரும் போது பாணனுடன் கற்றல் நிலையில் இருந்த இளைஞனைக் காணமுடிகின்றது. பாணர்கள் எங்கு சென்றாலும் அவர்களும் உடன் சென்று, இசையையும் பாடல்களையும் அறிந்து கொண்டனர் என்பதை உய்த்துணர முடிகின்றது.

*பாடுவல் விறலிஓர் வண்ணம்; நீரும்*
*மண்முழா அமைமின்; பண்யாழ் நிறுமன்*
*கண்விடு தூம்பில் களிற்றுஉயிர் தொடுமின்*
*பதலை ஒருகண் பைஎன இயக்குமின்;*
*மதலை மாக்கோல் கைவலம் தமின் என்று*
*இறைவன் ஆகலின் சொல்லுபு குறுகி*
*மூவேழ் துறையும் முறையுளிக் கழிப்பிக்*
*கோவெனப் பெயரிய காலை ஆங்கது*
*தன்பெயர் ஆகலின் நாணி (புறம்.152)*

எனும் பாடல், பாணன் கூற்றாக விறலியை நோக்கி பாண் குழுவினரைப் பலவிதமான இசைக் கருவிகளையும் இயக்கச் சொல்லி, தன் கையில் மதலை என்னும் பிறப்புணர்த்தும் கோலைக் கொண்டு இசை நுட்பத்துடன் இருபத்தொரு பாடல் துறைகளையும் முறையாகப் பாடி முடித்து இறுதியில் கோவேயென்று வல்வில் ஓரியின் பெயரைக் குறிப்பிட்டதால் அவன் நாணினான் என்று வருகின்றது. இப்பாடலில் பாணன் பாடிய பாடல் முறை என்பது மரபு வழிப்பட்டதாகும். எல்லா அரசர்களின் முன்பும் ஒரே மாதிரியான வாழ்த்துப் பாடல்களைப் பாடி இறுதியில் 'கோ' என வரும் இடத்தில் தனக்கு பரிசளிக்கும் மன்னனின் பெயரை இணைத்துப் பாடியிருத்தல் வேண்டும் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது. "பாணர்களின் பாடல்கள் நிகழ்த்துவோனின் சொந்தப் படைப்பாக அன்றித் தமது முன்னோர்களின் படைப்பாக இருந்தமையை அறியமுடிகின்றது"[33] என வரும் கருத்து நிகழ்த்துக் கலை மரபில் பாணர்கள் எல்லா இடங்களிலும் ஒரே தன்மையில் பாடியமையை உய்த்துணர்ந்து இடம் தருகின்றது.

“பாணர் தம் பாடல்கள் வழிவழியாகப் பாடப்பட்டவையாகும். முன்னோர்களின் பாடல்கள், பாடல் நிகழ்த்தப்படும் இடம், சூழலுக்கு ஏற்ப இட்டுக்கட்டும் அடிகள், பாடப்படும் இடத்தில் உள்ள மன்னன், தலைவனை அப்பாடலில் பொருத்தியுள்ளன. இப்படிப் புதியதாக இணைப்பவை ஒரு வாய்பாட்டில் இயங்கியுள்ளன”[34] என்று கே.பழனிவேலு குறிப்பிட்டுள்ளார். பாணர் குடியின் இளையவர்கள் தமது குடியின் முன்னோர்களுக்கு இசை நிகழ்த்துதலில் உதவி செய்வதின் மூலமே மரபுவழிப்பட்ட பாடல்களை அறிந்து கொள்ள முடிந்தது என்பதை மேற்கண்ட பாடல்களின் வழி உறுதிசெய்ய முடிகின்றது.

**பாணர்கள் – தகவல் பரப்பல்**

புராதன இனக்குழுச் சமூகத்தைச் சார்ந்த பாணர்கள் மீத்தன்மைகளைக் கொண்டுள்ளமையால் அரசர்கள் மத்தியில் தனித்தன்மையுடன் விளங்கினர். மரபுவழிச் செய்திகள், கதையாடல்கள் நிலம் சார்ந்த அறிவு எனப் பலவற்றையும் ஆழ்ந்த புலமையுடன் வாய்மொழியால் கற்ற இப்பாணர்கள் மக்கள் மத்தியில் மிகுந்த செல்வாக்குடன் திகழ்ந்தனர். இனக்குழுத் தலைவன் / அரசனின் குடி, புகழ், வீரம், கொடை முதலியவற்றை மக்கள் மத்தியில் பரப்பும் கருவியாய்ச் செயல்பட்டனர். மக்களிலிருந்து உருவாகி தலைமையேற்கும் இவர்களை உயர்வு நோக்குடன் காட்சிப்படுத்த வேண்டிய தேவை உருவாகின்றது. நாட்டைக் கட்டுப்படுத்த அரசன் வீரர்களைப் பயன்படுத்தியமை போல மக்கள் மனங்களைக் கட்டுப்படுத்த இப்பாணர்கள் தேவைப்பட்டனர்.

“சமூகத்தின் பொருளியல் நிலைமைகள் அனைத்தையும் தம் கட்டுப் பாட்டில் வைத்திருக்கின்ற ஆளுகின்ற பிரிவுகள் அத்தகைய கட்டுப்பாட்டை நிரந்தரமாகச் செலுத்துவதற்கு ஆயுதந் தாங்கிய சிறப்புப் படையினர் - வீரர்கள் - தேவைப்படுகின்றனர். அவர்கள் தம் நலன்களைப் பாதுகாக்கத் தேவையான நிர்வாக அமைப்பு - அரசுமுறை, நிதிமுறை வைத்துக் கொள்ளுதல் வேண்டும். அதே நேரத்தில் மக்களை மன ரீதியான முறையில் கட்டுப்படுத்த வேண்டியுள்ளது. அதற்குத் தத்துவார்த்தமான பிரச்சார முறைகளை ஏற்படுத்துதல் அவசியமாகிறது.

இதையே, தன் ஆட்சியைப் பாதுகாக்க மனிதர்களின் மனத்தை எப்போதும் அரசு தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்க விரும்பும் சமூகத்தின் அறிவார்ந்த சக்திகளைத் தன் கட்டுப்பாட்டில் வைத்து, தங்களுக்குத் தேவையான

கருத்துக்களைப் பிரச்சாரம் செய்ய வைக்கும். இப்பிரச்சாரமெல்லாம் அரசின் மேலான ஆதிக்கத்தை வலியுறுத்துவதாகவும் அந்த ஆதிக்கப் பாதையில் எதிர்வரும் தடைகற்களைத் தகர்த்தெறிவதாகவும் அமையும்"[35] என்று பாணர்களின் பாடுபொருள் குறித்து கேசவன் குறிப்பிட்டுள்ளார்.

அலைகுடிச் சமூகத்தினராகப் பெரும் சுற்றத்தாருடன் உணவுத் தேவைக்காக அரசர்களையும் வள்ளல்களையும் தேடிச் சென்ற பாணர்கள், அவர்கள் பற்றிய புகழுரைகளை மக்கள் மத்தியில் பரப்பிச் சென்றனர். தான் பார்த்த அறிந்த செய்திகளுடன் மக்களிடையே வழங்கி வந்த கதைகளையும், தொன்மங்களையும் இசையுடன் பாடிச் சென்றனர். "வடமொழிப் பெருநூல்களும் சில தொன்மங்களும் மொழிபெயர்ப்பு வடிவத்தில் சங்க காலத்தில் வழங்கி வந்திருக்க வேண்டும் என்பது பெறப்படுகிறது. இவற்றுள் சில எழுத்துப் பெயர்ப்பாக இல்லாமல். வாய்மொழிப் பெயர்ப்பாக இலக்கியப் பாணர்களால் அறிஞர்களிடையேயும் மக்களிடையேயும் அறிமுகப்படுத்தப் பட்டும் இருக்கலாம்"[36] என வரும் கருத்து நினைவு கூறத்தக்கது.

பாணர்களும் பாணர்ச் சுற்றத்தினரும் அரசர்கள் பற்றிய புகழுரைகளை மக்கள் மத்தியில் பரப்பியமை பற்றி,

கடும்பரிப் புரவி நெடுந்தேர் அஞ்சி
நல்லிசை நிறுத்த நயம்வரு பனுவல்
தொல்இசை நிறீஇய உரைசால் பாண்மகன்
எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும் (அகம்.352)

எனும் பாடல் மிக்க வேகம் உடைய குதிரைகள் பூண்ட நீண்ட தேரைக் கொண்ட அதியமான், அஞ்சியின் பழம் புகழை நிலை பெறச் செய்த திறமை மிக்க பாண்மகன் நல்ல இசையுடன் பாடினான் எனக் கூறும்போது அதியமான் அஞ்சியின் புகழை மக்கள் மத்தியில் பாணர்கள் பரப்பியமையை அறிந்து கொள்ள முடிகின்றது.

நன்மரன் நளிய நறந்தண் சாரல்
கன்மிசை அருவி தண்ணெனப் பருகி
விடுத்தல் தொடங்கினேன் ஆக வல்லே
பெறுதற் கரிய வீறுசால் நன்கலம்
மார்பில் பூண்ட வயங்குகாழ் ஆரம்
மடைசெறி முன்கைக் கடகமோடு ஈத்தனன் (புறம்.150)

என வரும் பாடலில், பாணர்கள் பெரும் சுற்றத்தாருடன் வேற்று நாட்டிற்குச் செல்ல காட்டிற்கு வந்த போது, மான் கூட்டத்தை அழித்து, குருதி தோய்ந்த அழகிய வீரக்கழல் அணிந்த காலையும் ஒளிமிக்க நீலமணி அணிந்த உச்சியையும் உடைய செல்வச் செழுமை வாய்ந்த வில் வேட்டுவன், ஒருவன் வந்தான். அவனைப் பார்த்து வணங்கினேன், நான் எழுந்திருத்தலைக் கையால் அசைத்து இருக்கச் செய்தான். வெண்ணெய் போன்ற தசைத் தடியைத் தன்னை விட்டுக் காட்டுவழியில் வழிதவறிப் போன இளையவர் விரைந்து வந்து அடைவதற்கு முன், விரைவாகத் தான் உண்டாக்கிய தீயால் சுட்டுச் சுற்றத்துடன் உண்ணுக என்று தந்தான். அதனை நாங்கள் அமிழ்தெனச் சுவைத்து உண்டு பசிதீர்த்தோம். அவனிடம் விடை கொள்ளத் தொடங்கினோம். விரைவாக வந்து, பெறுவதற்கு அரிய சிறந்த அணிகலம் வேறு இல்லை. காட்டு நாட்டினேம் என்று சொல்லித் தன் மார்பில் அணிந்திருந்த முத்து மாலையை, மூட்டில் அணிந்த கைக் கடகத்தொடு தந்தான். உன் நாடு எதுவோ என யாம் கேட்க, நாடு சொன்னான் அல்லன். நீர் யாரோ எனக் கேட்கப் பேரையும் சொன்னான் அல்லன். அவன் நாட்டையும் பேரையும் வழியில் பிறர் சொல்லவே கேட்டோம் என ஊரும் பேரும் கூறாமல், புகழும் விரும்பா பெருநிலையாளனான கோப்பெரு நள்ளியின் புகழை மக்கள் மத்தியில் பரப்பியதைக் காணமுடிகின்றது.

புறம்பெற்ற வயவேந்தன்
மறம்பாடிய பாடினியும்மே (புறம்.11)

வஞ்சி மாநகரின் பாடுபுகழ் மிக்க வலிய வேந்தன் தனக்கு மனவெப்பத்தை உண்டாக்கிய பகைவர் அரணை அழித்து, எதிர்த்தவர் புறங்காட்டி ஓடப் பெற்றான்; அதனைப் பெற்ற அவன் வீரத்தைப் பாடிய பாடினி என வரும் பாடல் அடிகள் அரசனின் போர் வீரத்தைப் பற்றி மக்களிடயே பரப்பியமையை அறிந்து கொள்ள முடிகின்றது.

இரவல் மாக்கள் ஈகை நுவல (புறம்.24)

இரக்கும் பரிசிலர் (பாணர்) அரசனின் கொடைத் தன்மையைப் பற்றி உயர்த்திக் கூறினர்.

அரசனின் புகழ், வீரம், கொடை முதலியவற்றை மக்கள் மத்தியில் பரப்பும் நோக்குடனேயே ஆற்றுப்படை பாடல்கள் பாடப்பெற்றன.

தேம் தீந்தொடைச் சீறியாழ்ப்பாண
இன்நகை விறலியொடு மென்மெல இயலிச்

*செல்வை ஆயிற் செல்வை ஆகுவை*
*விறகொய் மாக்கள் பொன்பெற் றன்னதோர்*
*தலைப்பாடு அன்றுஅவன் ஈகை*
*நினைக்க வேண்டா, வாழ்கவன் தாளே. (புறம்.70)*

என வரும் பாடலில் அரசனின் கொடைத் தன்மையை விளக்கி நீயும் சென்றாய் என்றால் பெறலாம் என ஆற்றுப்படுத்தும் போது அரசனின் கொடைத் தன்மை விளக்கி கூறப்படுகின்றது.

*மன்றப் பலவின் மாச்சினை மந்தி*
*இரவலர் நாற்றிய விசிகூடு முழவின்*
*பாடின் தெண்கண் கனிசெத்து அடிப்பின் (புறம். 128)*

எனும் பாடல் பாணர் முதலான இசைக் கலைஞர்கள் ஊர் மன்றத்தைச் சேர்ந்து முழவு முதலிய இசைக் கருவிகளை வைத்திருக்க அதனைப் பலாப்பழம் என்று நினைத்து மந்தி அடித்தது என வரும் பாடலில் ஊர் மன்றத்தில் அரண் பற்றிய பாடல்களைப் பாடியிருத்தல் கூடுமென அறிய முடிகின்றது.

*சொரிசுரை கவரும் நெய்வழிபு உராலின்*
*பாண்டில் விளக்கம் பரூஉச்சுடர் அழல*
*நல்லுதல் விறலியர் ஆடும்*
*தொல்நகர் வரைப்பின் அவன் உரைஆ னாவே! (பதி.47)*

பெரிய தீச்சுடர் ஒளிவிட, அவ்வொளியில் நல்ல நெற்றியினையுடைய விறலியர் ஆடுவர். விறலியர் ஆடும் அந்தப் பழமையான நகர எல்லையில் குட்டுவனின் புகழ்ச்சி மொழிகள் நீங்காதவையாக விளங்கின என வரும் பாடலில் விறலி அரசனின் புகழை மக்கள் மத்தியில் பரப்பியமையை அறிந்து கொள்ள முடிகின்றது.

*மின் இழை விறலியர் நின்மறம் பாட (பதி.54)*

என வரும் பாடலில் விறலியர் அரசனின் புகழைப் பாடினர் என்று அறிந்துகொள்ள முடிகின்றது.

*பசிபடு மருங்குலை கசிபு கைதொழாஅ*
*காணலென் கொல் என வினவினை வரூஉம்*
*பாண கேண்மதி யாணரது நிலையே*
*புரவுத் தொடுத்து உண்குவை ஆயினும் இரவு எழுந்து*

எவ்வம் கொள்கை ஆயினும் இரண்டும்
கையுள போலும் கடிதுஅண் மையவே (புறம்.260)

எனும் பாடல், ஆநிரை மீட்டலில் இறந்துபட்ட வீரனின் புகழைப் பாணர்கள் செல்லுமிடங்களெல்லாம் பரப்ப வேண்டும் என்பதையே நோக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

பாணர்களுக்கு கொடை வழங்கி அரசன் தங்களின் கொடை, புகழ், வீரம் முதலியவற்றை மக்கள் மத்தியில் பரப்பினான் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

சேவியர் தனிநாயகம், "பகைவர் நிலத்தின் செல்வங்களைச் சூறையாடுகின்ற, கொள்ளையிட்ட செல்வத்தைப் பகிர்ந்தளிக்கின்ற வீரனாகிய தலைவனை மையப்படுத்தி ஒரு சமுதாய உணர்வு கட்டமைக்கப்படுகின்றது. பாணனே இங்கு சமுதாயத்தின் குரலாக ஒலிக்கிறான். அவன் தன் குரலில் கடந்த கால வெற்றிகளையும் இன்றைய எதிர்பார்ப்பையும் ஆசையையும் அச்சத்தையும் வெளியிடுகிறான். அக்குலத்தின் குறிப்பாகத் தலைவன் ஒருவனின் வீரச்செயல்களைப் பாடுகிறான். அதன் வழியே நெஞ்சில் தேக்கி நிறுத்தவேண்டிய வீரத்தையும், உறுதியையும் நிலைநிறுத்தச் செய்கிறான். மன்றங்கள் எனப்பட்ட சமுதாய பொதுவிடங்களில் பாணர்கள் ஆடியும் பாடியும் இசைத்தும் அச்சமூக உறுப்பினர்களை மகிழ்வித்திருந்தனர். அதில் அக்குலத்தின், தலைவனின் செயல்கள் எண்ணப்பட்டன. அக்குலத்தின் வாழ்வும் சாவும் அங்கு பாடுபொருளானது"[38] என்று பாணரின் பாடுபொருள் குறித்து குறிப்பிட்டுள்ள கருத்து அறியத்தக்கது.

**போர்க்களத்தில் பாணர்கள்**

இனக்குழுத் தலைவர்கள், அரசர்களுக்கிடையே நடைபெறும் போர்களில் தொல்பழங்குடிச் சமூகத்தைச் சார்ந்த பாணர்களும் பங்கு பெற்றனர் என்பதைச் சங்க இலக்கியப் பாடல்களினின்றும் அறிந்து கொள்ள முடிகின்றது. போர் நடைபெறும் இடங்களுக்குச் சென்று அரசனைப் புகழ்தல், அரசர்களுக்கும் வீரர்களுக்கும் போர் / வீரம் பற்றிய பாடல்களைப் பாடி ஊக்குவித்தல், போர்க்களத்தில் கண்ட காட்சிகளைப் பதிவு செய்து மக்களுக்கு எடுத்துக் கூறுதல், போர் நடைபெறும் இடங்களில் அவர்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்தல், போர்க்காலங்களில் தன் நாட்டு மக்கள், பகை நாட்டு மக்களின் நிலை எவ்வாறு உள்ளது என்பதை அரசனுக்குத் தெரிவித்தல் போன்ற செயல்களைப் பாணர்கள் செய்தனர்.

சங்க இலக்கியத்தில் பாணரின் பெயர் இடம்பெறாமைக்கான காரணத்தை, "போரில் முரசறைவோன் போலவே பாணனும் வீரனின் போர்க் குணத்தை எழுச்சிபெறச் செய்யப் பாடுகிறான். மன்னனின், தலைவனின், வீரனின் போராற்றலைப் பாடுகிறான். வெற்றிக்குப் பின் அவர்களோடு கள்ளுண்டு, விருந்துண்டு ஆடுகிறான். இசைக்கருவிகள் மேம்படுத்தப்பட்டு விட்ட பிற்காலத்தில் ஆடலும் பாடலும் நெருங்கி குழுவாக இணைந்தது. இவ்வாறாகப் பாணர்கள் மரபு குல மரபினின்றும் விலகி திடமானதொரு நிறுவனக் கட்டமைவு உடைய குழுவாக அமைந்தது. நாடோடித்தனம், பெயர் முன்னிறுத்தப்படா நிலை என்பதே பாணர் வாழ்வியலின் முக்கிய தன்மை, எனவேதான் பாணர்களின் பெயர்களோ, பாணர் பற்றிய தகவல்களோ கூட ஏடு குறித்த விபரங்களை உள்ளடக்கியிருந்த பழங்காலத் திணைத்துறை குறிப்புகளில் இடம் பெறவில்லை"[39] என்று சேவியர் தனிநாயகம் அடிகள் குறிப்பிடுகின்றார்.

போர்ச் சூழலை அறிவித்தல்,

கேட்டியோ வாழிபாண பாசறைப்
பூக்கோள் இன்று என்று அறையும்
மடிவாய்த் தண்ணுமை இழிசினன் குரலே. (புறம்.289)

இப் பாடல் அடிகளில் பாணனே பாசறையில் இன்று பூக்கொடை நாள் என்று முழங்கும் தண்ணுமை குரலைக் கேட்பாயாக என்று அரச கூற்றாக வந்துள்ளது. வீரர்களையும் மக்களையும் போருக்கான சூழ்நிலைக்கு உருவாக்குவாயாக எனும் உட்கருத்து இடம் பெறுவதைக் கருத இயலுகின்றது. போர் நடைபெறும் காலங்களிலும் போர் நடைபெறாத காலங்களிலும் மக்கள் மனங்களில் போர் / வீரம் பற்றிய எழுச்சியைத் தோற்றுவிக்கும் பாடல்களையே பாடுவதை நோக்கமாகக் கொண்டனர். "மன்னரின் பரிவாரக் குழுவில் ஒருவராக இடம்பெறும் பாணர்கள் போர் வேட்கைப் புகழை மன்னரிடமும் வீரர்களிடமும் குறிப்பிட்ட அளவில் தோற்றுவித்து அதை வளர்த்தெடுப்பவராக இருந்துள்ளார். அமைதிக் காலங்களில் அரசரிடம் அவர்தம் வீரரிடம் அவர்தம் முன்னோர் வீரச் செயல்கள் பற்றிய கதைகளை எடுத்துக்கூறி மகிழ்விப்பதுடன் போர்க்காலத்தே படையினருடன் சென்று தம் போர்ப் பாடல்கள் மூலம் முன்னோரின் வன்மையான வீரச் செயல்களிலும் மேம்பட வேண்டும் என்று எழுச்சி ஊட்டுபவர்களாகவும் இருந்துள்ளனர்"[40] என்ற கருத்தும் காணமுடிகின்றது.

வீரர்களுக்குப் பூச்சூட்டுதல்,

உழைக்குரல் கூகை அழைப்ப ஆட்டி
நாடுமுலை அன்ன நறும்பூங் கரந்தை
விரகறி யாளர் மரபில் சூட்ட (புறம்.261)

எனும் பாடலில் பாணர்கள், குளறும் குரலையுடைய கூகை தன் கூட்டத்தை அழைக்கும்படி அழைத்து மணமுடைய கரந்தைப் பூவை அறிவுடையவர் சூட்டும் முறைப்படி சூட்டினர் என்று, போரிடும் முன்பு மரபு வழிப்பட்ட சடங்காக பூச்சூட்டுதலை அறிய முடிகிறது.

போரினைக் காணுதல்,

விலகெழு தானை விச்சியர் பெருமகன்
வேந்தரொடு பொருத ஞான்றைப் பாணர்
புலிநோக்கு உறழ்நிலை கண்ட (குறு . 328)

விச்சிக்கோ எனப்படும் விச்சியர்தம் தலைவன் வேந்தர்களோடு போர் செய்த பொழுது பாடும் பாணர்கள், இருபுறமும் சமமாகப் போர் நடந்ததால் புலி நோக்காக இருபக்கமும் மாறிமாறிப் பார்த்தனர் எனப் இப்பாடல் அடிகள் குறிப்பிடுகின்றது.

நன்மை நிறைந்த நயவரு பாண,
சீறூர் மன்னன் சிறியிலை எஃகம்
வேந்தூர் யானை ஏந்துமுகத் ததுவே
வேந்துடன் றெறிந்த வேலே (புறம்.308)

சீறூர் மன்னனின் சிறிய இலை வடிவ வேல், பெரிய வேந்தன் ஏறி வந்த யானையின் நெற்றியில் பட்டுத் தங்கியது; பெரிய வேந்தன் எறிந்த வேல் தன் தலைவனின் சந்தனம் அப்பிய மார்பில் தைத்து உருவிச் சென்றது எனவரும் போர் பற்றிய காட்சி பாணனை முன்னிலையில் விளித்துக் கூறுவதால் பாணர் மரபே புலவரிடம் புலமைத் தன்மையாய் சென்றிருக்க வேண்டும் என்பதை உய்த்தறிய இடமுள்ளது.

ஆயுதங்களைச் சேகரித்தல்,

பாசறை யீரே, பாசறை யீரே
துடியன் கையது வேலே; அடிபுணர்
வாங்கிரு மருப்பில் தீந்தொடைச் சீறியாழ்ப்
பாணன் கையது தோலே (புறம்.285)

பாசறையில் உள்ளவர்களே, பாசறையில் உள்ளவர்களே, துடிப்பறை கொட்டுபவன் கையில் உள்ளதாயிற்று வேல்; அடிவரை பொருந்த வளைந்த தண்டையும் இனிய இசை எழுப்பும் நரம்பையும் உடைய சிறிய யாழையுடைய பாணன் கையில் உள்ளதாயிற்று கேடயம் எனவரும் புறப்பாடல், போர் நடைபெற்று முடிவுற்ற பின்னர் இறந்துபட்ட வீரர்களின் உடலில் கிடக்கும் ஆயுதங்களைச் சேகரித்தல் / அப்புறப்படுத்தல் போன்ற பணிகளையும் பாணர்கள் மேற்கொண்டிருக்க வேண்டும் என்ற கருத்தை அறியமுடிகின்றது.

பாசறையில் பாணர்கள், "இறந்துபட்ட அல்லது குருதி சிந்திய உடல்பகுதிகளையும் பிணமான உடல்களையும் போர்க்களப் பகுதியில் இருந்து அகற்றக் கூடிய பணிகளையும் மருத்துவச் சேவை செய்யக் கூடிய செயற்பாடுகளையும் பாணர்களும் துணங்கையர்களும் அவர் சார்ந்த உறவினர்களும் செய்துள்ளனர் என எண்ணத் தோன்றுகிறது. போர்க்களங்களில் பாணர் மற்றும் அவர்தம் உறவினர்கள் பிணங்களுக்கான ஒருவிதச் சடங்கு செய்யக் கூடியவர்களாகவும் விளங்கியதனால் பாணர்களையும் அவர்தம் உறவினர்களையும் போர்க்களப் பகுதிகளில் இணைத்தே புலவர்கள் பதிவு செய்திருக்கின்றனர் என உறுதிகொள்ள முடிகிறது"[41] என்ற குணசேகரனின் கருத்து ஏற்புடையதாகக் காணமுடிகின்றது.

போர்க்களத்தில் வாழ்த்துதல்,

உரவுக் களிற்றுப் புலாஅம் பாசறை,
நிலவின் அன்ன வெள்வேல் பாடினி
முழவின் போக்கிய வெண்கை
விழவின் அன்னநின் கலிமகி ழானே (பதிற்.61)

வாளால் வெட்டப்பட்ட யானைகளையுடையதும் புலால் நாற்றம் வீசுவதுமான பாசறையில், நிலவுபோல் ஒளிவீசும் உனது வேலினைப் பாடும் பாடினி, முழவொலிக்குப் பொருத்தமாகத் தன்கையால் தாளமிடும் விழாவினைப் போல் ஆரவாரமிக்க இந்த பொழுதில் உன்னைக் காண வந்தேன் எனக் கூறும் புலவர் பாடும் பாடலிலிருந்து பாசறையில் பாடினி அரசனை வாழ்த்தியமையை அறிந்துகொள்ள முடிகின்றது.

தீய சக்திகளிடமிருந்து காத்தல்,

வாங்கு மருப்பு யாழொடு பல்இயம் கறங்கக்
கைபயப் பெயர்த்து மை இழுது இழுகி

ஐயவி சிதறி ஆம்பல் ஊதி
இசைமணி எறிந்து காஞ்சி பாடி (புறம்.281)

வேந்தனுக்காக நெடுந்தகையாளன் போரிட்டு புண்பட்டதாகவும், அப்புண்ணை தீயசக்திகளிடமிருந்து காக்க, இரவமரத் தழையொடு வேப்பிலையும் சேர்த்து மனையில் செருகி, யாழொடு பலவகை இசைக் கருவிகள் ஒலிக்க, சாந்து மெழுகில் வெண்கடுகு தூவி ஆம்பல் குழல் ஊதி ஒலிக்கும் மணியை அடித்துக் காஞ்சிப் பண்ணைப் பாடி தீயசக்திகளிடமிருந்து காத்தவர்கள் பாணர்களே என்று உய்த்தறிய இடம் உள்ளது.

போர்க் காலங்களில் சமைத்தவர்கள்,

உண்மின் கள்ளே அடுமின் சோறே
எறிக திற்றி! ஏற்றுமின் புழுக்கே
வருநர்க்கு வரையாது பொலங்கலம் தெளிர்ப்ப
----------------
கூந்தல் விறலியர் வழங்குக அடுப்பே! (பதி.18)

பாணர் குடிப் பெண்களே! நீங்கள் கள்ளினை உண்ணுங்கள் அதுவன்றி, விருந்தினர் உண்பதற்காகச் சோற்றினைச் சமையுங்கள்; தின்பதற்கு இறைச்சியை அறுப்பீராக, தின்பதற்காக வேகவைக்கத்தக்க பொருட்களை அடுப்பினில் ஏற்றுங்கள் என வரும் பாடலின் மூலம் போர்க்காலங்களில் பாணர் சுற்றத்தினர் சமைத்தனர் என்ற குறிப்பை அறிந்துகொள்ள முடிகின்றது.

அரசர்களுக்குப் பாணர் மீதிருந்த அன்பு, உரிமை காரணமாகத் தங்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்யுமாறு வேண்டினர். பாணர்களும் அவற்றைத் தட்டாமல் செய்தனர். இதனை “கலைத் தொழிலுக்கு மட்டும் உரிய இக்கலைஞர் பெருமக்களை மாற்றுத் தொழில் (சமையல் கலை) செய்யச் சொல்வான் வழியே இக்கலைஞர் பெருமக்கள் அன்பின் பொருட்டும், அரவணைப்பின் பொருட்டும், உறவின் பொருட்டும் மன்னரிட்ட பல தொழில்களையும் செய்தனர் என்றும் உணர்ந்துகொள்ள முடிகிறது”[42] என்று குணசேகரன் குறிப்பிட்டுள்ளார்.

இனக்குழுச் சமூகத்தைச் சார்ந்த பாணர்கள், போர்ச் சூழலில் பல நிலைகளில் இயங்கியமையைச் சங்கப் பாடல்களின் வழி அறிந்து கொள்ள முடிகிறது.

## பாணர் – அரசர், வீரன்

தொல்பெரும் இசைக் குடிகளான பாணர்கள் இசைக் கலைஞர்களாக மட்டுமல்லாது சீறூர் தலைவர்களாகவும், மற்போர் செய்யும் வீரர்களாகவும் விளங்கியமை பற்றிய பதிவுகள் சங்க இலக்கியப் பாடல்களில் காண முடிகின்றது. இனக்குழுத் தலைவர்களையும் அரசர்களையும் தம் இசையால் மகிழ்வித்த பாணர்களுக்குச் சிறிய ஊர்களும் பரிசில்களாக வழங்கப்பெற்றன. பரிசில்களாக வழங்கப் பெற்ற சீறூர்களுக்குத் தலைமையேற்று ஆட்சி நடத்தியமையையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

*ஐதமை பாணி வணர்கோட்டுச் சீறியாழ்க்*
*கைவார் நரம்பின் பாணர்க்கு ஒக்கிய;*
*நிரம்பா இயவில் கரம்பைச் சிறூர்* (புறம்.302)

எனும் பாடல், மெல்லிதாய் அமைந்த தாளத்திற்கு ஏற்ப வளைந்த தண்டையுடைய சிறிய யாழைக் கைத்திறனால் வருடி இசைக்கும் பாணர்க்கு, சிறிய வழியையுடைய கரிசல் நிலச்சிறிய ஊர்கள் கொடுக்கப்பட்டன எனவரும் பாடலில் பாணர்களுக்குச் சிற்றூர்கள் பரிசில்களாகக் கொடுக்கப்பட்டன என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

*இறைஞ்சி யோனே குரிசில் பிணங்குகதிர்*
*அலமருங்கழனித் தண்ணடை ஒழிய*
*இலம்பாடு ஒக்கல் தலைவற்கு ஓர்*
*கரம்பைச் சீறூர் நல்கினன் எனவே* (புறம்.285)

பின்னிக் கிடக்கும் கதிர் அசையும் வயல் நிலம், முன்னே இரவலர்க்குக் கொடுத்தமையால் கரிசல் நிலச்சிற்றூரை நல்கினான் என வரும் அரச வாழ்த்துப் பாடலில் சிற்றூரைப் பரிசில்களாக வழங்கியமை பற்றி அறிந்து கொள்ளலாம். இவ்வாறு சிற்றூரை பரிசில்களாகப் பெற்ற பாணர்கள் தலைமையேற்று ஆட்சி நடத்தி வந்தனர் என்பதையும். அவர்கள் அரசாண்ட நாடு பாணநாடு எனவும் வழங்கப் பெற்றமையை அறிந்துகொள்ள முடிகின்றது.

பாணன் அரணாய் இருந்தது பற்றி,"பாணன் என்பான் பாலியாற்றின் வடகரையில் உள்ள நாட்டில் அரசு புரிந்து வந்தான். அந்நாட்டில் பாலியாற்றின் கரையில் உள்ள பெரும்பாணப் பாடியும் பாண்மலையும் அப்பகுதியிலுள்ள கல்வெட்டுக்களால் குறிக்கப்படுகின்றன. அவன் வழி வந்தோர் வாணர் எனவும் வாணாதிராயர் எனவும் வாணதரையர் எனவும் நிலவினர்"[43] என்று வெ.வரதராசன் குறிப்பிட்டுள்ளார்.

கணை இருஞ் சுருணைக் கனிகாழ் நெடுவேல்
விழவுஅயர்ந் தன்ன கொழும்பல் திற்றி
எழாஅப் பாணன் நல்நாட்டு உம்பர் (அகம்.113)

கல்லிலே நடந்து செல்லும் பழக்கமுடைய வலிய அடியினையும் மூங்கில் குழாயில் உணவைப் பாதுகாப்பாகக் கொண்டவனும் பகைவரின் ஏமாறும் காலம் பார்த்து ஆநிரை கவரும் வீரம் மிக்கவனுமாகிய பாணனின் நாடு பற்றிய காட்சிப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

பயநிரை சேர்ந்த பாணநாட்டு ஆங்கண்
நெடுவிளிக் கோவலர் கூவல் தோண்டிய
கொடுவாய்ப் பத்தல் வார்ந்துஉடு சிறுகுழி (அகம்.155)

பாணனது நாட்டில் பசுக்கூட்டம் எல்லா இடத்திலும் இருக்கும். அவற்றை மேய்க்கும் கோவலர், நீண்ட சீழ்க்கை ஒலிக்கும் திறனுடையோர். அவர்கள் பருகும் தண்ணீர்க்காகக் கிணற்றில் வளைந்த வாயை உடைய பத்தலை இட்டு, நீரை முகந்து சிறிய குழியில் நிறைப்பர் எனவரும் பாடலில் பாணனது நாட்டில் கோவலரின் செயல்கள் காட்சிபடுத்தப்பட்டுள்ளன.

நல்வேல் பாணன் நல்நாட்டு உள்ளதை
வாட்கண் வானத்து என்றூழ் நீள்இடை
ஆட்கொல் யானை அதர்பார்த்து அல்கும் (அகம்.325)

வடக்கே நல்ல வேற்படையையுடைய பாணனது சிறந்த நாட்டில் இருக்கும், ஒளி பொருந்திய வானத்தில் உள்ள ஞாயிற்றின் வெப்பம் மிக்க நீண்ட நெறியில் தலைவன் சென்றுள்ளான் என வரும் தலைவிக்கூற்று பாடலில் பாணனது நாடு பற்றியும் அவன் அரசனாய் இருந்து அரசாண்டது பற்றியுமான செய்திகளை அறிந்துகொள்ள முடிகின்றது.

பாணர்கள் அரசர்களாய் மட்டுமல்லாது மற்போர் செய்வதில் வல்லவர்களாகவும் இருந்துள்ளனர்.

நாணினென், பெரும யானே பாணன்
மல்அடு மார்பின் வலிஉற வருந்தி,
எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன்
நிறைத்திரள் முழவுத்தோள் கையகத்து ஒழிந்த
திறன்வேறு கிடக்கை நோக்கி (அகம்.386)

எனும் பாடல், மற்போர் செய்வதில் வல்லவனான பாணன் என்பானது மார்பு வலிமை மிகுதியால் வருந்தம் அடைந்து, அவனுடன் எதிர்த்துப் போர் செய்தலை மேற்கொண்ட ஆரியப் பொருநன் என்பானது வலிமை நிறைந்த முழவு போன்ற தோள்கள் அப்பாணனின் கையில் சிக்குண்டு வலிமையற்று, இறந்து தோள்வேறு உடல் வேறாகக் கிடந்தான் என்று பாணனின் வலிமை மிகுதியாகவும் பேசப்பட்டுள்ளது. மேலும்,

வலிமிகு முன்பின் பாணனொடு, மலிதார்த்
தித்தன் வெளியன் உறந்தை நாள் அவைப்
பாடுஇன் தெண்கிணை பாடுகேட்டு அஞ்சிப்
போர்அடு தானைக் கட்டி
பொராஅது ஓடிய ஆர்ப்பினும் பெரிதே (அகம்.226)

மிக்க வலிமையுடைய பாணனொடு பேராற்றல் மிகுந்த கட்டி, என்பவன் உறையூரில் ஆட்சி புரிந்த தித்தன் வெளியனோடு போர் செய்வதற்குப் படைதிரட்டி வந்தான் என வரும் பாடலில் பாணன் மிக்க வலிமை நிறைந்த வீரனாகக் காட்சி படுத்தப்பட்டுள்ளான்.

**பாணர் – மீன்பிடிக் கலைஞர்கள்**

சங்க இலக்கிய பெரும்பான்மைப் பாடல்கள் பாணர்களை அலைகுடிச் சமூகத்தினராகவும் இசைக் கலைஞர்களாகவும் காட்சிபடுத்திய நிலையிலிருந்து, அவர்கள் தனித்த குடியிருப்பில் தங்கியிருந்தது பற்றியும், மீன்பிடித் தொழில் செய்தமை பற்றியுமான தகவல்களையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

பாணர்கள் தனித்த குடியிருப்பில் தங்கியிருந்தது பற்றி,

பாணர்கள் தனித்த குடியிருப்பில் (சேரி) தங்கி இருந்தனர். "குடும்பங்கள் பல சேர்ந்து வாழும் இடம் சேரி எனப்பட்டது. சேரி என்பதற்கு நெருங்கு, கூடு, திரள் என்பன பொருள். கூட்டமாகத் திரண்டு நெருக்கமாக மக்கள் சேர்ந்து வாழ்ந்த இடம் சேரி எனப் பெயர் பெற்றது."[44]

கள்அரிக்கும் குயம் சிறுசின்
மீன்சீவும் பாண்சேரி
வாய்மொழித் தழும்பன் ஊணூர் அன்ன (புறம்.348)

என வரும் பாடலில், தேன் கூட்டிலிருந்து தேன் எடுக்கும் குயவர் சேரியும், சிறிய மீன்கள் இவற்றைப் பிடித்து உண்ணும் பாணற் சேரியும் உடைய தழும்பன் என்பானின் ஊணூர் குறிக்கப்பட்டுள்ளது.

*அகலிரு வானத்து இமிழ்ந்து இனிது இசைப்பக்*
*குருகுநரல மனைமரத்தான்*
*மீன்சீவும் பாண்சேரியொடு*
*மருதம் சான்ற தண்பணை சுற்றி,* (மது. 267-70)

பாணர் சேரியில் ஒவ்வொரு வீட்டின் மாடத்திலும் மீன்சீவும் போது எழுப்பும் பாடல் ஆடலால் ஏற்படும் ஓசையும் கலந்த மருதப் பண்புகள் சார்ந்த மருத நிலம் சூழ்ந்த பகுதி என்று குறிப்பிடும் ஆற்றுப்படை வரிகள் பாணர்கள் தனித்த குடியிருப்பில் இருந்தது பற்றிக் குறிப்பிடுகின்றது.

"இவ்விரு பாடல்களும் மருத நிலத்து வயலின் வளப்பத்தைச் சுட்டுவதனால் பாணர்களில் சிலர் மருத நில வளர்ச்சியில் ஒரு நிலையான இடத்தில் தங்கி விளைவித்துண்டமையைக் குறிப்பதாகக் கொள்ளலாம். அதே நேரம் 'மீன் சீவும் பாண்சேரி' எனப் பாணர்கள் மீனுடன் மட்டும் இணைக்கப்படுகின்றனர். அதனால் மருத நிலத்து வயல்களில் மீன் பிடித்தும் அவற்றை விற்றும், சமைத்தும் உண்கின்ற தற்காலிகச் சேரிகளாக இவை இருந்திருக்கலாம்"[45] என்று கே.பழனிவேலு குறிப்பிடும் கருத்தை ஏற்றுக் கொள்வதில் தயக்கம் ஏற்படுகிறது. ஏனெனில்,

*அவிர்அறல் வையைத் துறைதுறை தோறும்*
*பல்வேறு பூத்திரள் தண்டலை சுற்றி*
*அழுந்துபட் டிருந்த பெரும்பாண் இருக்கையும்* (மது.340-42)

வையை நீர்ப் பெருக்கின்மேல் மலர்கள் மாலை போன்று வந்து கொண்டிருந்தன. கருமணலையுடைய வையை துறைகள் தோறும் பல்வேறு பூத்திரள்களையுடைய சோலைகள் இருந்தன. அச்சோலைகளைச் சுற்றி நீண்ட நாள்களாக அங்கேயே தங்கிய பெரும்பாணர்கள் குடியிருப்புகள் இருந்தன. அழுந்து படல் எனும் சொல் தலைமுறை தலைமுறையாகப் பாணர்கள் வாழ்ந்து வந்தனர் என்ற பொருளை உணர்த்தி நிற்கின்றது. எனவே பாணர்களில் ஒரு பிரிவினர் நிலைத்த குடியிருப்பில் தங்கியிருந்தனர் என்று உணர்த்துகின்றது.

*பாணர்கள் மீன் பிடித்தல் பற்றி,*

*கடற்கரை மெலிக்குங் காவிரிப் பேரியாற்று*
*அறல்வார் நெடுங்கயத்து அருநிலை கலங்க,*
*மால்இருள் நடுநாள் போகி, தன்ஐயர்*
*காலைத் தந்த கணைக்கோட்டு வாளைக்கு,*

அவ்வாங்கு உந்தி, அஞ்சொல், பாண்மகள்
நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி மறுகில்
பழஞ்செந் நெல்லின் முகவை கொள்ளான்
கழங்குஉறழ் முத்தமொடு நன்கலம் பெறூஉம் (அகம்.126)

எனும் பாடல் காவிரியில் ஓரிடத்தில் நெடுகிலும் கருமணல் படிந்த பெரிய ஆழமான மடு ஒன்று உண்டாயிற்று. அந்த மடுவில், இரவில் நீந்தி உருண்டு திரண்ட கொம்புகளை உடைய வாளை மீன்களைப் பிடித்துக் கொண்டு காலையில் வந்தனர் சில பாணர்குல இளைஞர். அழகிய உட்குழிந்த கொப்பூழும், அழகாகப் பேசும் பேச்சும் உடைய அவரது தங்கை, அவற்றைக் கூடையில் இட்டு, ஊருக்குள் கொண்டு சென்றாள். உயர்ந்த கொடிகள் அசையும் தெருவில், அவற்றுக்கு விலையாக, முகந்து தரும் பழைய செந்நெல்லை வாங்காமல், கழற்சிக்காய் போன்ற பெரிய முத்துக்களையும், சிறந்த அணிகலங்களையும் வாங்கிக் கொண்டாள்.

நாண்கொள்நுண் கோலின் மீன்கொள் பாண்மகள்
தான்புனல் அடைகரைப் படுத்த வராஅல்
நார்அரி நறவுஉண்டு இருந்த தந்தைக்கு
வஞ்சி விறகின் சுட்டு, வாய் உறுக்கும் (அகம்.216)

தூண்டிலால் மீனைப் பிடித்து விற்கும் பாணர் இனத்துப் பெண் ஒருநாள் தனது தூண்டிலில் அகப்பட்ட வரால் மீனை வஞ்சி மரத்து விறகுத் தீயில் சுட்டு, கள் குடித்து மயங்கிக் கிடக்கும் தன் தந்தைக்கு ஊட்டுவாள் என வரும் பாடலில் பாண்மகள் மீன் பிடித்து வந்தது பற்றி அறிந்துகொள்ள முடிகின்றது.

வலைவல் பாண்மகன் (ஐங்.48)

வலை வீசி மீன் பிடித்தலில் வல்லவன் பாணன் என்று குறிப்பிடுவதும், பாணர்கள் மீன் பிடித்தலின் முறை பற்றி,

.... பாணன்

சூழ்கழி மருங்கின் நாண்இரை கொளீஇ (ஐங்.111)

மீன் பிடிக்கும் பாணன் தூண்டில் கயிற்றில் சிறிய மீனை இரையாக மாட்டிச் சினை கொண்டு பெருத்த கயல் மீன்களைப் பிடிப்பான் என்று குறிப்பிடுகின்றது.

*பச்சூன் பெய்த சுவல்பிணி பைந்தோல்*
*கோள்வல், பாண்மகன் தலைவலித்து யாத்த*
*நெடுங்கழைத் தூண்டில் நடுங்க நாண்கொளீஇ*
*கொடுவாய் இரும்பின் மடிதலை புலம்ப*
*பொதிஇரை கதுவிய போழ்வாய் வாளை (பெரு. 283-87)*

கடற்கரையை அடுத்த பகுதியில் பாணர் மீன்பிடிப்பர். மீன் பிடிக்கச் செல்லும்போது பச்சை இறைச்சியைத் தோல்பையில் இட்டுத் தோளில் வைத்திருப்பர். மீன் பிடித்தலில் வல்லவர். நீண்ட மூங்கில் கிளையில் தூண்டில் அமைத்திருப்பர். அத்தூண்டிலில் பச்சை இறைச்சியைத் தின்றுவிட்டு தான் தப்பித்துக் கொள்கிறது பெரியவாயையுடைய வாளைமீன் என்று வரும் வரிகளின் மூலம் அவர்கள் மீன் பிடிக்கும் விதத்தினை அறிந்து கொள்ள முடிகின்றது.

*பாணர்*
*பசுமீன் சொறிந்த மண்டை போல (குறு.169)*

என வரும் பாடலில், பாணர்கள் கையிலுள்ள மண்டைப் பாத்திரம் பச்சை மீன்களைப் பிடித்து வைத்தலால் புலால் நாற்றம் வீசுகிறது என அறிந்து கொள்ள முடிகின்றது.

**பாணர்கள் மீனைப் பண்ட மாற்றுதல் பற்றி**

பாணர்கள் தாம் பிடித்த மீனை பண்டமாற்று செய்தனர். இதனைச் சங்க இலக்கியப் பாடல்கள்,

*அஞ்சில் ஓதி அசைநடைப் பாண்மகள்*
*சில்மீன் சொரிந்து பல்நெல் பெறூஉம் (ஐங்.49)*

திரட்சி குறைந்த, அழகிய கூந்தலும் அசைந்த நடையும் உடையவள் பாண்மகள். அவள் குறைந்த அளவு மீனைக் கொடுத்துப் பெரிய அளவில் நெல்லைப் பெறுவாள்.

*முள்ஞாயிற்றுப் பாண்மகள் இன்கெடிறு சொரிந்த*
*அகன்பெரு வட்டி நிறைய மனையோள்*
*அரிகால் பெரும்பயறு நிறைக்கும் ஊர் (ஐங்.47)*

முள்ளைப் போன்ற கூர்மையான பற்களை உடையவள் பாண்மகள். அவளுடைய, இனிய கெடிறு மீன் நிறைந்த, அகலமான பெரிய கடகப்பெட்டி

நிறைய மனையில் உள்ளவள், அரிகால் வயலில் விதைத்துப் பெற்ற விளைவாகிய பெரும் பயற்றைக் கொடுப்பாள்.

வலைவல் பாண்மகன் வாலெயிற்று மடமகள்
வராஅல் சொரிந்த வட்டியுள் மனையோள்
யாண்டுகழி வெண்ணெல் நிறைக்கும் ஊர (ஐங்.48)

வலைவீசி மீன் பிடித்தலில் வல்லவன் பாண்மகன்; வெண்மையான பற்களையுடைய இளையவள் பாண்மகள்; அவர்கள் இருவரும் வராஅல் மீனை நிறைத்துக் கொண்டுவந்த வட்டியுள், இல்லக் கிழத்தி, ஆண்டு கழிந்த, பழைய வெண்ணெல்லை நிறைய கொடுப்பாள்.

| | | |
|---|---|---|
| கெடிற்று மீன் | - | பெரும்பயறு |
| வரால் மீன் | - | பழம் வெண்ணெல் |
| சில்மீன் | - | பல நெல் |

எனப் பாண்மகள் பண்டமாற்று செய்தமையை அறிந்து கொள்ள முடிகின்றது. பாணர்களின் மீன் பிடித்தல் தொழில் பற்றி, "அவர்களின் வறுமையையும் எழுச்சி பெறும் பொருளாதார நிலைமைக்கேற்ப தம்மை இணைத்துக் கொள்ள முடியாமையையும் வெளிப்படுத்துகின்றன"[46] என்று கா.சிவதம்பி குறிப்பிடுகின்றார். சங்க காலத்தின் பிற்பகுதிகளில் பாணர்கள் பெற்ற மதிப்பிறக்கத்திற்கு இவர்களின் மீன் பிடித் தொழிலும் ஒரு காரணம் என உய்த்தறிய இடம் உள்ளது.

... இழிந்த
கொழுமீன் வல்சி என்றனம், இழும் என (அகம்.110)

என வரும் அகப்பாடலில், இழிந்த மீனால் ஆன உணவு என இடம் பெறும் வரிகள் மூலம் மீன் உணவும் அதோடு தொடர்புடைய பாணர்களும் மதிப்பிறக்கம் பெற்றனர் என கருத முடிகின்றது.

**அகப்பாடல்களில் பாணர்களின் மதிப்பிறக்கம்**

சங்க இலக்கிய அகப்பாடல்கள் என்பது புலவர் பாடிய வெவ்வேறு பாத்திரங்களின் கூற்றுகளாகவே நமக்குக் கிடைக்கின்றன. கலையைத் தொழிலாகக் கொண்ட பாணர்கள் தங்களின் உணவுத் தேவையின் பொருட்டு அரசர்களையும் (தலைவர்களையும்) வள்ளல்களையும் சார்ந்து வாழ வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டனர். தலைவனின் புறச்செயல்பாடுகளில் பங்கு

கொண்ட பாணர்கள் அவர்களின் அகசெயல்பாடுகளிலும் பங்கு கொண்டனர். தலைவனைப் பரத்தையுடன் தொடர்புபடுத்துதல், கோபம் கொண்ட தலைவியை ஆற்றுவித்தல், தலைவியால் வசைபாடப்படுதல் எனப் பாணர் சமூகம் சங்க இலக்கியத்தின் பிற்பகுதியில் சமூக மதிப்பிறக்கம் பெற்றனர்.

புறப்பாடல்களும் அகப்பாடல்களும் பாணர் வாழ்க்கையை வெவ்வேறு வகைகளில் காட்சிப்படுத்தியுள்ளன. ஒரே காலகட்டத்தைச் சார்ந்த பாடல்களில், ஒரு குடியினரின் வாழ்க்கை இவ்வாறு வெவ்வேறு வகைகளில் பதிவாகியுள்ளது என்பது ஆராயத்தக்கது. புறப்பாடல்கள் காட்டும் பாணர் வாழ்க்கை என்பது அவர்களின் புராதன வாழ்க்கையை நினைவு கூர்வதாகவும், அகப்பாடல்கள் காட்டும் வாழ்க்கை என்பது சங்க இலக்கிய காலத்தில் உருமாற்றம் எய்தி மதிப்பிறக்கம் கண்ட பாணர்களின் அக்கால வாழ்க்கையைப் பதிவு செய்யப்பட்டதாகவும் கருத முடிகின்றது.

ஏதில் பெரும்பாணன் தூதாட (கலி.96)

என வரும் அகப்பாடலில் பாணன் தூது வருவது என்பது பாணர் வாழ்க்கைக்கு முரண்பட்ட செயலாகும் எனத் தலைவி கூற்றாய் வருகிறது. ஏதில் என்பது தனது தொழிலுக்குத் தொடர்பில்லாத பாணன் என்ற பொருளில் கையாளப்பட்டுள்ளது.

அகப்பாடலில் காணப்படும் பாணர் வாழ்வியலுக்கும், புறப்பாடலில் காணப்படும் பாணர் வாழ்வியலுக்குமான வேறுபாட்டை விளக்க வந்த செண்பகம் இராமசாமி, "அகப்பாடல்களில் பாணரைப் பற்றிய புதிய மரபு உருவாகிறது. போர்ச் சூழலே நிறைந்த வீரயுகத்தில் காதலும் இயற்கை வருணனையும் கூறும் அகப்பாடல்கள் இலக்கியத் துறையில் ஆயிரக்கணக்கில் உருவாகியிருக்க இயலாது. ஆகவே போர்ச்சூழல் குறைந்து கொண்டிருந்த வீரயுகத்தின் கடைசிக் கட்டத்தைச் சேர்ந்ததே சங்க இலக்கியமாகும். இக்காலத்தே பாணர்களின் மதிப்பு குறைந்து, புலவரின் சிறப்பு உயர்தல் இயல்பாகும். சங்க இலக்கிய அகப்பாடல்கள் காட்டும் பாணர் வாழ்வே அக்காலப் பாணர் வாழ்வை உள்ளபடி விளக்குகிறது"[47] என்று குறிப்பிட்டுள்ள கருத்து பொருத்தமுடையதாகும்.

**பாணர் தூது**

பாணர்கள் அரசர்களிடம் மிகுந்த நெருக்கம் கொண்டிருந்தனர். அவர்களின் புறவாழ்க்கையில் மட்டுமல்லாது அகவாழ்க்கையிலும் தொடர்பு

கொண்டவர்களாக இருந்தனர். தமது அந்தரங்க செய்திகளையும் பாணருடன் பகிர்ந்து கொண்டனர்.

நகுகம் வாராய் பாண! பகுவாய்
அரிபெய் கிண்கிணி ஆர்ப்ப தெருவில் (நற்.250)

என வரும் இப்பாடலில் தலைவன், தலைவியை முயங்கல் விருப்பொடு கூடினமையையும் அவள்மான்பிணையைப் போல வெருவிநின்றமை பற்றியும் பாணனிடம் கூறுகின்றான். இனக்குழுச் சமூகத்தைச் சார்ந்த பாணர்கள் தேர்ந்த சொல்திறம் கொண்டிருந்தனர் என்பதை,

அன்னாய்! இவன் ஓர் இளமா ணாக்கன்
தன்ஊர் மன்றத்து என்னன் கொல்லோ? (குறு.33)

இப்பாணன் ஒரு கல்வி வல்ல இளம் மாணாக்கனாக இருக்கின்றான். நம்மிடமே இவ்வளவு சாதுரியமாகப் பேசும் இவன், தனது சொந்த ஊரிலுள்ள மன்றத்தில், எவ்வளவு திறமையுடன் பேசுவானோ? என வரும் தலைவிக் கூற்றில் பாணனின் சொற்திறம் கூறப்பட்டுள்ளது.

போர்மேற் சென்ற அரசர்களுக்கு தன் நாட்டின் நிலையையும் தலைவியின் நிலையையும் ஒருசேர உரைப்பவர்களாய் இருந்துள்ளனர். நாடுகள் பல கடந்து சென்று போரினை மேற்கொள்ளும் அரசனிடம் தூது உரைக்கும் பணியைப் பாணர்கள் மேற்கொண்டிருந்தனர்.

சொல்லுமதி பாண சொல்லுதோறு இனிய
நாடுஇடை விலங்கிய எம்வயின் நாற்தொறும்
அரும்பனி கலந்த அருள்இல் வாடை
தனிமை எள்ளும் பொழுதின்
பனிமலர்க் கண்ணி கூறியது எமக்கே (ஐங்.479)

பாணனே! நாடுகள் இடையிட்ட வேற்று நாட்டில் வந்து நான் தங்கியுள்ளேன். குளிரோடு கூடிய அருளில்லாத வாடைக் காற்று நாள்தோறும் என்மீது வீசி என் தனிமையை எள்ளி நகையாடுகிறது. இந்த நேரத்தில், குளிர்ந்த மலர் போன்ற கண்களை உடைய தலைவியின் தூதுச் செய்திகள் வாடைக்கு மருந்தாய்ச் சொல்லச் சொல்ல இனிக்கின்றன. எனவே, மேலும் தொடர்ந்து சொல்லுவாயாக என்று இப்பாடல் அடிகள் பாணன் தூது சென்றதை விளக்குகிறது.

பகைநாட்டை அழித்த பின்னும் இங்கேயே தங்கியிருப்பது முறையன்று, தலைவியின் பிரிவுத் துயரம் மிகப் பெரியது. எனவே நீ உடனே புறப்படுவாயாக என்று பாணன் தூது (பரி.19) உரைத்த செய்தி காணக் கிடைக்கின்றது.

தண்ணந் துறைவன் தூதொடும் வந்த
பயன்தெரி பனுவல் பைதீர் பாண (நற்.167)

எனவரும் பாடலில், கடற்கரைத் தலைவனாகிய காதலன் நின்னைத் தூதாக விடுத்துள்ளான். நீயும் அவனுக்குத்தக்கவாறு பேசுகின்றாய் என்று பாணன் தூது வந்தது பற்றித் தலைவி குறிப்பிடுகின்றாள்.

கையறு நெஞ்சிற்கு உராஅத் துணையாகச்
சிறுவரைத் தங்குவை ஆயின்
காண்குவை மன்னால் பாணஎம் தேரே (ஐங்.477)

தலைவியின் துயர் நீங்க நீ அவள் அருகில் இருப்பாயாக என்று தலைவன் பாணனை, தலைவியிடம் தூது அனுப்பிய காட்சியையும் காணமுடிகின்றது.

தூது உரைப்பவர்களின் தகுதிகளாக இருக்க வேண்டிய பண்புகளாக, "கருத்தைத் தொகுத்துச் சுருக்கமாகச் சொல்லத் தெரியவேண்டும். பயனற்றவைகளை விட்டுவிட வேண்டும். எதனையும் உறுதியோடும், திண்மையோடும் நயமாகவும், பயனை விளைவிக்கும் பாங்குடனும் கூறத் தெரிந்திருக்க வேண்டும். கேட்பவர் மனம் மகிழுமாறு சொல்லி, நன்மை விளையுமாறு பேசத் தெரிய வேண்டும்"[48] என வரும் கருத்திற்கு ஏற்ப பாணர்களின் தூது உரைக்கும் திறன் அமைந்துள்ளமையைக் காணமுடிகின்றது.

**தொகுப்புரை**

* பாணர்கள் என்போர் தமிழ்ச் சமூகத்தின் தொடக்க நிலைப் பாடகர்களாக அறியப்பட்டவர்.
* தொன்மையான குடியினராகப் பாணர்கள் காணப்படுகின்றனர்.
* பாணர்கள் தனித்தும், பிற இசைக் கலைஞர்களுடன் இணைந்தும் அரசர்களின் வாழ்த்துப் பாடல்களைப் பாடினர்.
* பாணர்களுள் மண்டைப் பாணர் என்ற தனிப் பிரிவினர் இல்லை என்பதோடு, மண்டை (உண்கலம்) என்னும் சொல் பிற கலைஞர்களுடனும் பிற சூழ்நிலைகளிலும் வந்துள்ளமையை அறிந்து கொள்ள முடிகின்றது.

* பாணன், பாடினி தனக்கென தனித்த ஒப்பனைகளைக் கொண்டு விளங்கினர்.
* மீவியல்பு கொண்ட பாணர்கள் கடவுள் வழிபாட்டிலும், நடுகல் வழிபாட்டிலும் தொடர்புடையவர்களாகக் காணப்பட்டனர்.
* சங்க இலக்கியத்தில் பாணர்களுக்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுக்கப் பட்டமையை முதுவாய்ப் பாணன் என்னும் சொல் உணர்த்துகின்றது.
* பாணர்கள் என்போர் பெரும் சுற்றத்தினராகவும், வறுமை வயப்பட்டவர் களாகவும், அலைகுடிச் சமூகத்தினராகவும் காணப்பட்டனர்.
* பாணர்களின் இசை நுட்பம், பாடும் தன்மை என்பது மரபு வழி பயிற்சியின் மூலம் பெறப்பட்டதாகும்.
* அரசர், வேந்தர்களின் முன்பு பல்வேறு இசைக் கருவிகளை இசைத்தும் பாடல்களைப் பாடியும் வாழ்த்தினர்.
* அரசன் பற்றிய புகழுரை, போர்ச் செயல்கள், நிலவியல் தன்மைகள் போன்றவற்றை மக்கள் மத்தியில் பரப்பும் கருவியாய்ச் செயல்பட்டனர்.
* பாணர்கள் போர்க்களத்தில் வீரர்களின் எழுச்சிக்காகவும், நாட்டு மக்களின் நிலை பற்றி அறிந்து கொள்ளவும் பாடல்களைப் பாடினர்.
* வீரர்களுக்குப் பூச்சூட்டுதல், களத்தினை வாழ்த்துதல், ஆயுதங்களைச் சேகரித்தல் போன்ற சடங்குகளைப் பாணர்கள் மேற்கொண்டனர்.
* பாணர்கள் அரசர்களாகவும், வீரர்களாகவும் விளங்கியுள்ளமையை அறிந்துகொள்ள முடிகின்றது.
* சங்க காலத்தின் முற்பகுதியில் அலைகுடிச் சமூகத்தினராகக் காணப்பட்ட இப்பாணர்கள், பின்னர் மீன்பிடித் தொழிலைச் செய்பவர்களாக காணப்பட்டனர். மீன்பிடித் தொழிலின் காரணமாகவே இப்பாணர்கள் தாழ்ந்தவர்களாய் மதிப்பிறக்கம் பெற்றிருத்தல் வேண்டும்.
* பாடினி பல்வேறு பொருட்களுக்கு ஈடாக மீனைப் பண்டமாற்று செய்துள்ளாள்.
* புறப்பாடல்களில் பெருமதிப்பு கொண்ட பாணர்கள், அகப் பாடல்களில் மதிப்பிறக்கம் பெற்றனர்.
* தலைவன், தலைவியருக்கிடையேயான ஊடலைத் தணிப்பவர்களாகவும் தூது உரைப்பவர்களாகவும் மாறினர்.

## அடிக்குறிப்பு

1. ந.சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப.335.
2. வெ.வரதராசன், தமிழ்ப் பாணர் வாழ்வும் வரலாறும், ப.2.
3. க.த.திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், ப.119.
4. சு.வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப.11.
5. கரு.அழ.குணசேகரன்,பதிற்றுப்பத்து மூலமும் ஆராய்ச்சிப் புத்துரையும், ப.vi.
6. க.கைலசாபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப.138.
7. ச.கு.கணபதி, கட்டுரைக் கலம்பகம், ப.12.
8. மு.அருணாசலம், தமிழ் இசை இலக்கண வரலாறு, ப.7.
9. இரா.இளங்குமரன், பாணர், ப.8.
10. க.சண்முக சுந்தரம், சங்க இலக்கிய வரலாறு, ப.3.
11. ராஜ் கௌதமன், தமிழ்ச் சமூகத்தில் அறமும் ஆற்றலும், ப.27.
12. கே.பழனிவேலு, சங்க இலக்கியம் பாட்டு மரபும் எழுத்து மரபும், ப.31.
13. சேவியர் தனிநாயகம் அடிகள், பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் கல்வி, ப.41.
14. கே.பழனிவேலு, சங்க இலக்கியம் பாட்டு மரபும் எழுத்து மரபும், ப.36.
15. பெ.மாதையன், தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், ப.143.
16. கார்த்திகேசு சிவத்தம்பி, பண்டைய தமிழ்ச் சமூகத்தில் நாடகம், ப.195.
17. க.கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப.90.
18. மேலது, ப.96.
19. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப.79.
20. கரு.அழ.குணசேகரன்,பதிற்றுப்பத்து மூலமும் ஆராய்ச்சிப் புத்துரையும், ப.vi.
21. ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.291.

22. கே.பழனிவேலு, சங்க இலக்கியம் பாட்டு மரபும் எழுத்து மரபும், ப.40.

23. ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.162.

24. கே.பழனிவேலு, சங்க இலக்கியம் பாட்டு மரபும் எழுத்து மரபும், ப.44.

25. பெ.மாதையன், தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், ப.174.

26. ராஜ் கௌதமன், தமிழ்ச் சமூகத்தில் அறமும் ஆற்றலும், ப.75.

27. பெ.மாதையன், தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், ப.109.

28. ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.109.

29. கே.பழனிவேலு, சங்க இலக்கியம் பாட்டு மரபும் எழுத்து மரபும், ப.49.

30. மேலது, ப.48.

31. க.கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப.140.

32. அ.பாண்டுரங்கன், தொகை இயல், ப.188.

33. செண்பகம் இராமசாமி, கிரேக்க லிரிக் கவிதைகளும் சங்க இலக்கியக் கவிதைகளும் ஒப்பீடு, ப.39.

34. கே.பழனிவேலு, சங்க இலக்கியம் பாட்டு மரபும் எழுத்து மரபும், ப.49.

35. கோ.கேசவன், மண்ணும் மனித உறவுகளும், ப.79.

36. அ.அ.மணவாளன், சங்க இலக்கியம், ப.36.

37. ராஜ்கௌதமன், பதிற்றுப்பத்து ஐங்குறுநூறு சில அவதானிப்புகள், ப.154.

38. சேவியர் தனிநாயகம் அடிகள், பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் கல்வி, ப.41.

39. மேலது, ப.43.

40. பெ.மாதையன், சங்க கால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும், ப.100.

41. கரு.அழ.குணசேகரன், பதிற்றுப் பத்து மூலமும் ஆராய்ச்சிப் புத்துரையும், ப.294.

42. மேலது, ப.32.

43. வெ.வரதராசன், தமிழ்ப் பாணர் வாழ்வும் வரலாறும், ப.15.

44. தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு, தமிழ்நாட்டு வரலாறு சங்க காலம், ப.3.

45. கே.பழனிவேலு, சங்க இலக்கியம் பாட்டு மரபும் எழுத்து மரபும், ப.41.

46. கார்த்திகேசு சிவத்தம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் நாடகம், ப.205.

47. செண்பகம் இராமசாமி, கிரேக்க லிரிக் கவிதைகளும் சங்க இலக்கிய கவிதைகளும் ஒப்பீடு, ப.48.

48. இராம.பெரிய கருப்பன், பரிசில் வாழ்க்கை, ப.54.

### பாணர் –புலவர் வேறுபாடு

சங்க இலக்கியப் பாடல்களைப் பாடிய பாடுநர் குழுக்களுக்கிடையே சமூக வேறுபாடு இருப்பதை அறிய முடிகின்றது. பாணர், புலவர் என்ற இரு பிரிவினர் சங்க இலக்கியத்திற்குள் மிக விரிவாகப் பேசப்படுகின்றனர். பாணர் எனப்பட்டோர் மரபுவழிப்பட்ட இனக்குழுச் சமூகத்தைச் சார்ந்த இசைக் கலைஞர்களாகவும், புலவர் என்போர் அரசவைகளில் பாடல் புனைபவர்களாகவும் கருத முடிகின்றது. இவ்விரு மரபினரும் தனித்த இயல்புகளை உடையோராகவும், எதிர்நிலை வாழ்க்கை முரண்பாடுகளைக் கொண்டவர்களாகவும் அறிய முடிகின்றது.

சங்க இலக்கிய பாடல் மரபு என்பது பாணர்களிடமிருந்தே தோற்றம் பெற்றிருக்க வேண்டும். புராதன இனக்குழுச் சமூகத்தைச் சார்ந்த பாணர்கள் தாம் கண்ட நிகழ்வுகளை இசையுடன் பாடினர். இவர்களிடமிருந்தே பாடல்களைப் புனையும் புலவர் மரபு உருவாகியிருத்தல் வேண்டும். புலவருக்கு முந்தியது பாணர்மரபு என்பதனை கா.சிவத்தம்பி, "சங்க இலக்கியம் பற்றிய தரவுகள், செய்திகள் யாவும் புலவர்கள் மூலமாகவே நமக்குக் கையளிக்கப் பட்டுள்ளன. என்றாலும், இப்புலவர்கள் தங்கள் பாடல்களைப் பாணர் பரம்பரையை அடியொற்றியே பாடியிருத்தல் வேண்டும். பாடியிருக்கிறார்கள் என்ற கருத்தும் உண்டு. அதாவது புலவர்களுக்கு முந்தைய பாணர் மரபு"[1] என்று குறிப்பிடுகின்றார். இப்பாணர்களிடமிருந்தே புலவர்கள் கருத்துக்களையும், பாடும் முறைகளையும் கருப்பொருள்களாகக் கொண்டு புதிய பாடல்களைப் புனைந்தனர்.

சங்க இலக்கியப் பாடல்களில் காணப்படும் அகம், புறம் என்று பாகுபடுத்தி புலவர்களால் பாடப்பட்ட பாடல்களுக்கு மூலமாகத் தொன்மை வாய்ந்த பாணர்கள் தோற்றுவாயாக இருந்திருக்க வேண்டும். இக்கருதினையே, "சங்க இலக்கியத் தொகுதிகளில் புலவர் மரபால் படைக்கப்பட்ட அகம், புறம் பற்றிய புனைவுகளால் வாழ்க்கை எதார்த்தங்களில் பழந்தமிழரின் நாகரிக - கலாச்சாரக் கூறுகளைக் காணவியலும். வரலாற்றுக் கட்டத்திற்குள் வந்துவிட்ட சங்ககாலத்திற்குச் சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் தமிழகத்தில் நிலவியதாகத் கூறப்படும் பெருங்கற்கால நாகரிக வாழ்வின் தொடர்ச்சியும், எச்சங்களும் கூடச் சங்கப்பாடல்களில் பதிவாகியுள்ளன. இந்தப் புலவர் மரபின் பதிவுகளுக்கு மூலமாகத் தொன்மை வாய்ந்த வாய்மொழி வழிவந்த பாணர் மரபு

என்ற ஒன்றைச் செயல்படும் கருதுகோளாகக் கூறவியலும்"[2] என்று ராஜ்கௌதமன் குறிப்பிடும் கருத்து நோக்கத்தக்கது.

பாணர், புலவர் என்ற இருவேறு மரபினர் இருந்தமை பற்றி,

பாணர் வருக! பாட்டியர் வருக!
யாணர்ப் புலவரொடு வயிரியர் வருக! என
இருங்கிளை புரக்கும் இரவலர்க்கு எல்லாம்
கொடுஞ்சி நெடுந்தேர் களிற்றொடும் வீசி (மது.749-52)

பாடுவோர் வருக, பாடும் பெண்டிர் வருக, புதிது புதிதாகப் பாடும் புலவரொடு, கூத்தர் வருக என்று கூறி, பெரிய சுற்றத்தினரைப் பாதுகாக்கும் பரிசில் பெறுவார்க்கு எல்லாம், பெரிய தேர்களை, யானைகளுடன் வழங்குவாய் என வரும் வரிகளில் பாணர், புலவர் என்ற இருவேறு மரபினரையும் அரசன் புரந்தான் எனக் கூறப்பட்டுள்ளது.

பொருநர்க்கு ஆயினும், புலவர்க்கு ஆயினும்
அருமறை நாவின் அந்தணர்க்கு ஆயினும் (சிறு.203)

கிணைப் பொருநர்க்கு ஆயினும், அறிவுடையோர்க்கு (புலவர்களுக்கு) ஆயினும், அரிய மறைகளைக் கற்றுணர்ந்த நாவினையுடைய அந்தணர்க்கு ஆயினும் அடையாது திறந்தே இருக்கும் அவன் அரண்மனைக் கதவுகள் என வரும் வரிகளும் பாண் சுற்றத்தினர், புலவர்கள் எனத் தனித்தனியாகச் சுட்டிச் செல்கின்றது. பாணர் புலவர்களை வேறுபடுத்திக் காட்டுகின்றது.

பாணர் தாமரை மலையவும், புலவர்
பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும் (புறம்.12)

என வரும் பாடலில் பாணர்களுக்குப் பொற்றாமரை மலர்களையும், புலவர்களுக்கு யானையோடு தேரினை வழங்கியமை பற்றியும் வரும் பாடலில் பாணர், புலவர் என்ற இருவேறு மரபினருக்கும் வெவ்வேறு பரிசில்களை வழங்கியமையை அறிந்துகொள்ள முடிகின்றது.

பாணர்கள் எப்போதும் கூட்டுக் குழுவினராகவே பேசப்படுகின்றனர். அவர்கள் குழுவாக நிலம் முழுவதும் பயணித்து தங்களைப் புரக்கும் வள்ளல்களைத் தேடித் திரிந்தனர்.

இரும்பாண் ஒக்கல் கடும்பு புரந்ததூஉம் (புறம்.224)

எனச் சங்க இலக்கியப் பாடல்கள் பாணர்களைப் பெரும் சுற்றத்துடனேயே காட்சிப்படுத்துகின்றது. இது இனக்குழு மக்களின் தன்மையாகக் கருதலாம்.

புலவர்கள் தனித்த நிலையிலேயே காட்சிப்படுத்தப்பட்டுள்ளனர். அரசர்கள் தனக்கென தனித்த புலவர்களை மிக நெருக்கமாகக் கொண்டிருந்ததைக் காண முடிகின்றது (புறம்.212).

பாணர்கள் மரபுவழிப்பட்ட பாடல்களைப் பாடுபவர்களாவர்,

பாடுவல் விறலிஓர் வண்ணம்; நீரும்
மண்முழா அமைமின்; பண்யாழ் நிறுமன்;
கண்விடு தூம்பில் களிற்றுஉயிர் தொடுமின்
பதலை ஒருகண் பைஎன இயக்குமின்
மதலை மாக்கோல் கைவலம் தமின் என்று
இறைவன் ஆகலின் சொல்லுபு குறுகி
மூவேழ் துறையும் முறையுளிக் கழிப்பி (புறம்.152)

என வரும் பாடலில், பாணர்கள் தம் சுற்றத்தாருடன் அரச வாழ்த்தினை மரபுவழிப்பட்ட பாடல்களாகப் பாடியும், இசைக்கருவியை ஒலிக்கச் செய்தும் பாடியமையை அறிந்து கொள்ள முடிகின்றது. வாய்மொழிப் பாடல்களைப் பாடும் தன்மையுடையோர் பாணர்களாவர். புலவர் என்போர் செய்யுள்களை இயற்றும் தன்மையுடையோர்களாகக் காட்சிப் படுத்துகின்றனர்.

செறுத்த செய்யுள் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன் (புறம்.53)

விரைந்து பல பொருளையும் அடக்கிய செய்யுளை இயற்றும் செவ்விய நாவையும் மிகுந்த கேள்வியையும் விளங்கிய புகழையும் உடைய கபிலன் என்று புலவர்களைச் செய்யுள் புனைபவர்களாகச் சங்க இலக்கியப் பாடல்கள் காட்சிப்படுத்தியுள்ளன.

பாணர்கள் இனக்குழுத் தலைவர்களிடம் மிகுந்த நெருக்கம் கொண்டவர்களாகக் காணமுடிகின்றது.

வெண்காழ் தாய வண்கால் பந்தர்
இடையன் பொத்திய சிறுதீவிளக்கத்துப்
பாணரொடு இருந்த நாணுடை நெடுந்தகை (புறம்.324)

வலிய தூண் உடைய பந்தலின் கீழ் ஆயன் மூட்டிய சிறிய தீயாகிய விளக்கில் பாணர்களுடன் இருந்த நாணுதல் பண்பமைந்த பெரியோன், வலிமையமைந்த படைவேந்தன் அல்லல் அடையும் போது நானும் அவனொடு அல்லல்படும் மனமறிந்த துணையாக இருப்பவன் எனவரும் பாடலில் இனக்குழுத் தலைவருடன் பாணன் மிகுந்த நெருக்கம் கொண்டிருந்ததையும், யாம் அவன் பாணர், இன்று இக்கருங்கோட்டுச் சீறியாழ் பணையம் வைத்து உனக்குத் தந்தோம். நீயும் உன் விறலி இழை அணியுமாறு கள்ளுடைக் கலம் உடைய யாம் மகிழுமாறும், வேந்தனிடம் சென்று வாய் சிவந்து மீண்டும் வருக எனப் பாணன் கூற்றாக வரும் பாடலிலும் பாணர்க்கும் இனக்குழுத் தலைவற்கும் இருந்த நெருக்கத்தினை அறிந்து கொள்ளலாம் புறம். 316.

புலவர்கள் அரசர்/வேந்தர்களிடம் மிகுந்த நெருக்கம் கொண்டவர்களாகக் காணப்பட்டனர். அறிவுரை, ஆலோசனை போன்றவை புலவர்களால் அரசனுக்கு வழங்கப்பெற்றன. 'புலவர் பாடாது வரைக' (புறம்.72) என்று அரசனும் புலவர்களை முதன்மை படுத்தியமையும் அறிந்து கொள்ள முடிகின்றது. பாணர், புலவர் வேறுபாடு குறித்து, "பாணரை விடப் புலவர்கள் மன்னர்களுக்கு நெருக்கமாக இருந்துள்ளனர். புலவர்கள் மன்னருக்குத் தோழராகவும் தூதராகவும் அறிவுரை கூறுவோராகவும் இருந்துள்ளனர். இத்தகுதிகள் பாணரிடமிருந்து புலவர்களை வேறுபடுத்திக்காட்டுகின்றன"[3] என்று கே.பழனிவேலு குறிப்பிட்டுள்ளார்.

மாசற விசித்த வார்புறு வள்பின்
மைபடு மருங்குல் பொலிய மஞ்ஞை
ஒலிநெடும் பீலி ஒண்பொறி மணித்தார்
பொலம்குழை உழிஞையொடு பொலியச் சூட்டி (புறம்.50)

என வரும் பாடலில் முரசு கட்டில் என அறியாது ஏறிய மோசிக் கீரனைத் தவறு செய்யாது (சினந்து அழியாது), துயில் எழுப்பியமையும், கவரி கொண்டு வீசியமையும் புலவர்க்கும் அரசனுக்குமான மேன்மைபட்ட உறவினைக் காட்டி நிற்கின்றது.

புதிதாகப் பாடல் புனையும் புலவர்களைக் காட்டிலும் பாணர்களுக்கே இனக்குழுச் சமுதாயம் முக்கியத்துவம் கொடுத்தது.

பாணர் ஆரும் அளவை யால்தன்
யாணர் நல்மனைக் கூட்டுமுதல் நின்றனென்,

இமைத்தோர் விழித்த மாத்திரை ஞெரேநர் எனக்
குணக் கெழு திங்கள் கனையிருள் அகற்றப்
பண்டறி வாரா உருவோடு என் அரை (புறம்.376)

என வரும் புறப்பாடலில், நல்லியக் கோடனின் இல்லத்தில் பாணர்கள் உணவு உண்ணும் வரை வெளியில் நின்றிருந்த புதியவர்களைக் (புலவர்கள்) குறிப்பிடும் பாடல் மூலம் இனக்குழுச் சமூகத்தில் புலவர்கள் புதியவர்களாய் இருந்தது பற்றியும், பாணர்களுக்கே முக்கியத்துவம் தரப்பட்டது பற்றியும் அறிந்து கொள்ள முடிகின்றது.

"வாழ்த்துப்பா பாடிவந்த பாணர்களினின்றும் விலகி சிக்கலும் செல்வப்புழக்கமும் மிகுந்த புதிய சமூக நிலைக்கேற்ப புலவர்கள் எழுச்சி பெற்றனர். பொது மக்களுக்குத் தம் கலையால் பொழுதுபோக்களித்தல், கற்பித்தல் எனும் பணிகளைப் பாணர்களே கைக்கொண்டிருந்தனர். ஆனால், இம்மரபுகளையும் புலவர்கள் தமது புதிய தகுதிக்கேற்ப விரிவுபடுத்தினர். பாணர்களின் பணியாக இருந்து வந்த கல்வியைப் புலவர்கள் முறைசார் கல்வியாகத் தகுதிப்படுத்தினர்"[4] என வரும் கருத்தால், பாணர் புலவர் என்ற இருவேறு மரபினர் தனித்தனியாக இயங்கியமையை அறிந்து கொள்ள முடிகின்றது.

**பாணனாய்ப் பாடிய புலவர்கள்**

சங்க இலக்கியப் பாடல்கள் புலவர் மரபாய் அறியபட்ட போதும் புலவர்கள் தம்மைக் கற்பனை பாணராய்க் கருதிக் கொண்டு பாடல்களைப் புனைந்தமையைக் காணமுடிகின்றது. புலவர்கள் பாணனாய்க் கருதிக் கொண்டு பாடல்களைப் புனைந்தது என்பது தொல் பழங்காலத்தில் பாணர்களுக்கு இருந்த முக்கியத்துவத்தை உணர்த்தி நிற்கின்றது.

புலவர்கள் தம்மைப் பாணர்களாய்க் கருதி ஆற்றுப்படை பாடல்களைப் புனைந்தனர் என்பதனை, "பழங்காலச் சமூகத்தில் பாணர்கள் எண்ணிக்கையில் அதிகமானவர்களாகவும் முதன்மைத் தகுதியுடைவர்களாகவும் இருந்தனர். அவர்கள் தமது வாழ்த்துப்பாக்களால் அடையாளங் காணப்பட்டனர். அதனின்றும் சற்றே மாறுபாடாகப் புலவர்கள் வாழ்த்துப்பாக்களை மன்னன் அல்லது குறுநில மன்னனின் மீது இயற்றிய போதும் அவர்கள் பாணன் ஒருவன் வீரனைப் பாடுகிற பாணர் மரபினையே பின்பற்றினர். ஆற்றுப்படைகளை இயற்றியபோதும் புலவர்கள் இச்சூழலைக் கற்பனையாகத் தொடர்ந்தனர்.

பெரும்பொருள் பெற்றுத் திரும்பும் பாணன் ஒருவன் புரவலனைத் தேடிவரும் கூத்தன் அல்லது குழுவிற்கு தான் பொருள் பெற்றவிதம் கூறி ஆற்றுப் படுத்தலாக அமைகின்றன"[5] என்று குறிப்பிட்டுள்ளார். புலவர்கள் பாணனாய்க் கருதியே அரசனை வாழ்த்தியும், ஆலோசனைக் கூறியும் இருந்தமைக்கான பதிவுகளைக் காணமுடிகின்றது.

*அருளாய் ஆகலோ கொடிதே! இருள்வரச்*
*சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்,*
*கார்எதிர் கானம் பாடினேம் ஆக,* (புறம்.144)

அருள் செய்யாது இருப்பது கொடியது; மாலைப் பொழுதில் எம் சிறிய யாழில் இரங்கல் பண்ணைப் பாடினேம்; அன்புக்கு உரியாய், உன் மழை வளம் கொண்ட காட்டைப் பாடிய அளவில் நீலப்பூ போன்ற மையுண்ட கண் அழுதலால் வழிந்த நீர்த்துளி மார்பை நனைக்க வருந்தினாள் என வரும் பாடலில் பரணர் தம்மை பாணனாய்க் கருதிக் கொண்டு பாடல் புனைந்துள்ளார்.

*அன்ன வாறின் அருங்கல வெறுக்கை*
*அவைபெறல் வேண்டேம்; அடுபோர்ப் பேக,*
*சீறியாழ் செவ்வழி பண்ணிநின் வன்புல*
*நன்னாடு பாட என்னை நயந்து*
*பரிசில் நல்குவை ஆயின் குரிசில் நீ*
*நல்கா மையின் நைவரச் சாஅய்*
*அருந்துயர் உழக்கும்நின் திருந்திழை அரிவை*
*கலிமயில் கலாவம் கால்குவித் தன்ன*
*ஞலிமென் கூந்தல் கமழ்புகை கொளீஇத்*
*தண்கமழ் கோதை புனைய*
*வண்பரி நெடுந்தேர் பூண்கநின் மாவே* (புறம்.146)

என வரும் பாடல் அரிசில் கிழார் தம்மை கற்பனையாகப் பாணராய் நினைத்துக் கொண்டு பாடல் புனைந்துள்ளார். அவ்வாறே ஆகட்டும்; உன்னால் தரப்படும் அணிகலம் செல்வம் ஆகியவற்றைப் பெற விரும்பவில்லை; வெல்லும் போர்ப் பேகனே, சிறிய யாழில் மாலைப் பண்ணை இசைத்து உன் மலை நாட்டைப் பாட என்னை விரும்பிப் பரிசில் தருவாய் தலைவனே, நீ அருள் செய்யாமையால் வருந்தித் தளர்ந்து துயரில் கிடக்கும் உன் துணைவி, நீண்ட தோகை காலொடு கவிந்தால் போன்று தழைத்த மெல்லிய கூந்தல்,

நறுமணப் புகை கொள்ளுமாறு செய்து, குளிர்ந்த மணமுடைய மாலை சூடுமாறு; விரைந்து செல்லும் குதிரைகள் நெடிய தேரில் பூட்டப்படுவனவாக என்று பாடியுள்ளார்.

நெடுங்களத்துப் பரணர், சிறுவர்களே, துடிப்பறை அறைபவர்களே, பாடுதல் வல்ல பாணர் மக்களே, தூய வெண்ணிற ஆடையையுடைய பெரியவனை நெருங்கிப் பெரிய பறவைக் கூட்டத்தின் ஆரவாரத்தைத் தடுப்பீராக; யானும் விளரிப் பண்ணைப் பாடிச் சுற்றி வந்து வெண்ணரிகளை நெருங்காமல் விலக்குவேன்; என்னைப் போல வேந்தனும் மிக நடுக்கம் அடைவானாக; வேந்தனுக்காக வேறு காரணம் இல்லாமலும் உயிரைத் தர விரும்புபவனாகிய என் தலைவனுக்கு, அவ்வேந்தன் தன் மார்பில் இருந்த மணிமாலையைச் சூட்டி, என் தலைவன் மார்பில் இருந்த ஒற்றைவட மாலையைத் தான் அணிந்து கொண்டான் என்று (புறம்.291) பாடிய பாடல் தம்மைப் பாணனாய்க் கருதியே பாடியுள்ளார் எனலாம்.

புலவர்கள் பாணனாய் மட்டுமல்லாது பாணர்சுற்றத்தினரான கிணைஞராகவும் தம்மைக் கருதி கொண்டு பாடல்கள் புனைந்துள்ளனர்.

அகல் அள்ளல் புள்ளிரீஇயுந்து
ஆங்கப், பலநல்ல புலன் அணியும்
சீர்சான்ற விழுச்சிறப்பில்
சிறுகண் யானைப் பெறலரும் தித்தன்
செல்லா நல்இசை உறந்தைக் குணாது
நெடுங்கை வேண்மான் அருங்கடிப் பிடவூர்
அறப்பெயர்ச் சாத்தன் கிணையேம் பெரும (புறம்.395)

என வரும் பாடலில், மதுரை நக்கீரர், வளமார்ந்த பெரும்புகழும் சிறிய கண்ணையுடைய யானைகளும் மிக்க பெறுதற்கு அரிய தித்தன் என்பானின் அகலாப் புகழமைந்த உறையூர்க்குக் கிழக்கே, நெடிய கையையுடைய வேண்மான் என்பானின் அரிய காவல் அமைந்த பிடவூரின் அறத்தால் பெற்ற புகழமைந்த சாத்தனின் கிணைஞர் யாம் என்று தன்னைக் கிணைஞனாகக் குறிப்பிடுகின்றார்.

உள்ளிலோர்க்கு வலியாகுவன்
கேளிலோர்க்கு கோளாகுவன்
கழுமிய வென்வேல் வேளே,

வளநீர் வாட்டாற்று எழினி யாதன்
கிணையேம் பெரும (புறம்.396)

நீர் பெருகி வருதலால் குவிந்த மணலை அள்ளித்தூவும் காற்றால் மெல்லிய சிறகுடைய பறவைகள் அகன்று செல்லும்; மலர்களால் பெற்ற மதுவையுடைய மனைகளுக்குரிய கோசர் என்பவர் இனிய கள்ளை அருந்தி மகிழ்ந்து இனிய குரவையாடும் இடத்தில் எழும் பாடல்கள் இசைக்கப்படும்; நீர்வளமிக்க வாட்டாறு என்னும் ஊரின் தலைவன் எழினியாதன், ஊக்கம் இல்லாதவர்க்கு வலிய ஊக்கம் ஆவான்; உறவு இல்லார்க்கு உறவினன் ஆவான்; அவனுக்குரிய கிணைஞன் யாம் என்று மாங்குடி கிழார் தம்மை கிணைஞனாகப் பாடியுள்ள பாடலைக் காணமுடிகின்றது.

புலவர்கள் தம்மை பொருநராகவும் கருதி பாடல்களைப் பாடியுள்ளனர்.

கடற்படை அடற்கொண்டி
மண்டுற்ற மறநோன் தாள்
தண்சோழ நாட்டுப் பொருநன்
அலங்குகளை அணிஇவுளி
நலங்கிள்ளி நசைப்பொருநரேம்
பிறர்ப்பாடிப் பெறல் வேண்டேம் (புறம்.382)

கடலில் படை கொண்டு சென்று பகைவென்று கொண்ட பொருள் நிரம்பிய வீரமும் வலிய முயற்சியும் உடைய வளமான சோழ நாட்டுப் போர்க்களம் பாடும்; யானும் மற்றைப் பொருநரும் ஆகிய நாங்கள் அசையும் பிடரியையும் அணிகளையும் உடைய குதிரைகள் மிக்க நலங்கிள்ளியின் விருப்பத்திற்கு உரியவர்; பிறவேந்தர்களைப் பாடிப் பரிசு பெறுதலை விரும்பேம்; நெய்யால் தாளித்த ஊன் கலந்த பலவகைச் சோற்றுடன் இனிய சுவையுடைய பிற பொருள்களையும் உன் பசி நீங்கத் தருவான் என்று உன் பொருநர் கூறினர் என்று கோவூர் கிழார் தம்மை பொருநராகக் கருதி பாடல் புனைந்துள்ளார்.

புலவர்கள் தம்மைப் பாணராக கருதிக் கொண்டு பாடல்களைப் புனைந்தனர் என்பதனை, "பாணர் மரபினை எடுத்துக்கொண்ட புலவர்கள் எழுத்தறிவு பெற்றிருந்தனராயினும், அவர்கள் தம் பாடல்களைப் பாணர் மரபுகளைப் பின்பற்றியே பாடினர். தொகைநூல்களில் புலவர்கள் தங்களை யாழினை மீட்டிக் கொண்டு பாடும் பாணர்களையும் கிணைப்பறை தடாரிப்

பறை கொண்டு விடியற்காலத்தில் முழக்கிக்கொண்டு பாடும் பொருநராகவும் மெய்ப்பாடு தோன்ற ஆடிப்பாடும் விறலியராகவும் ஏறிட்டுக் கொண்டு பாடியுள்ளார். அப்பாடல்கள் தொகை நூல்களில் இடம் பெற்றுள்ளன. நீண்ட பாடல்களின் தொகுப்பான பத்துப் பாட்டில் இடம் பெற்றுள்ள ஆற்றுப்படை நூல்கள் இவற்றின் வளர்ச்சியாக அமைந்துள்ளன"[6] என்று குறிப்பிட்டுள்ளார்.

பாணர் மரபை உள்வாங்கிய புலவர் மரபு புதிய பாடல்களைப் புனைந்த போதும் தம்மைக் கற்பனையாக பாணர்களாகக் கருதி பாடல்களைப் புனைந்துள்ளனர். இவற்றின் மூலம் பாணர்களின் சமூகத் தகுதியும் செல்வாக்கினையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

**புலவருக்கு முந்தைய பாணர் மரபு**

சங்க இலக்கியப் பாடல்களை ஆழ்ந்து நோக்குகையில் அவற்றின் கருத்து பாணர் மரபின் எச்சங்களாகவும், தொல் மரபுகளைப் புத்தாக்கப்படுத்தும் முயற்சிகளாகவும் உள்ளமையை அறிந்து கொள்ள முடிகின்றது. தொல்குடிச் சமூகத்தினரான பாணர்களின் பாடுபொருட்களைப் பெற்று, அவற்றை உட்செறித்து புதிய சொற்தேர்ச்சிகளுடன் தம் கற்பனைகளையும் இணைத்து புலவர்கள் சங்கப் பாடல்களைப் புனைந்திருக்க வேண்டும் என்பதை உய்த்தறிய இடமுள்ளது. பாணர்மரபு என்னும் சொல் பயன்பாடு குறித்து ராஜ்கௌதமன், "எழுத்து வழி நாகரிகத்தின் வெளிப்பாடான புலவர் மரபிற்குரிய பாடுபொருட்கள் சமகாலத்திலும், எழுத்துடை வரலாற்றுக் காலத்திலும் இருந்தன. அதேபோல் எழுத்துடை வரலாற்றுக்கு முந்தைய (Pre-historical) காலத்திலும் இருந்துள்ளன. இத்தகு வரலாற்றுக்கு முந்தைய கால 'இலக்கிய' மரபினைக் குறிக்க பாணர் மரபு என்ற தொடர் பயன்படுகிறது"[7] என்று குறிப்பிடுகின்றார்.

போர் பற்றிய புலவர் பாடல்கள்,

பாணகேள்மதி யாணரது நிலையே
புரவுத் தொடுத்து உண்குவை ஆயினும் இரவெழுந்து
எவ்வம் கொள்குவை ஆயினும் இரண்டும்
கையுள போலும் கடிதண் மையவே (புறம்.160)

என வரும் பாடலில், பாணனே கேட்பாயாக, நம் வருவராய் கெட்டழிந்த நிலையை; நீ அவன் தந்த கொடை நிலத்தால் உண்பவன் என்றாலும் உயிர் வாழ்தலைக் கருதி இரவலனாகி வருந்துவாய் என்றாலும் இரண்டும் உன் கையில் உள்ளனவே. மிகுதியான ஆன் கூட்டத்தை வென்ற வீரன் பகையழிந்து நிரையை

உலகம் வருந்த வளைந்த பாம்பின் பற்றுதலில் இருந்து மதியை மீட்டது போல பெரும் புகழ் கொண்ட அவ்வீரனின் பெயர் மயில் தோகை சூட்டி அழகு செய்யப்பட்ட நடுகல்லின் மேல் உள்ளது பார்ப்பாயாக என்றும்,

நன்மை நிறைந்த நயவரு பாண
சீறூர் மன்னன் சிறியிலை எஃகம்
வேந்தூர் யானை ஏந்துமுகத் ததுவே
வேந்துடன் எறிந்த வேலே; (புறம்.308)

பாணனே, சிற்றூர் மன்னின் சிறிய இலைவடிவ வேல், பெரிய வேந்தன் ஏறிவந்த யானையின் நெற்றியில்பட்டுத் தங்கியது; பெரிய வேந்தன் எறிந்த வேல் தன் தலைவனின் சந்தனம் அப்பிய மார்பில் தைத்து உருவிச் சென்றது என்று பாணனிடம் கூறுவதாக அமைந்துள்ளது.

போர்க்களத்தில் போர் நடைபெற்ற விதத்தினைப் பாணன் நேரடியாகப் பார்த்தல், 'பாணர் புலிநோக்கு உறழ்நிலை கண்ட' (குறு.328) எனவரும் பாடலும், போர்க்களத்தை வாழ்த்திப் பாடியது பற்றி 'நுண்கோல் கொண்டுகளம் வாழ்த்தும்' (பதி.43) எனவரும் பாடலும் குறிப்பிடுகின்றன. மேலும் போர் பற்றிய புலவர்களின் பாடல்களில் பாணனை முன்னிலைப் படுத்திக் கூறுவதிலிருந்து, முந்து நிலையில் பாணர்களே போர்ச் சூழலில் முதன்மை பெற்றவர்களாகவும், போர்ப் பற்றிய பாடல்களைப் பாடியவர்களாகவும் இருக்க வேண்டுமென கருத முடிகின்றது.

காளைகளையுடைய பெரிய பசுக்கூட்டம் முன்னே போக, அவற்றை மீட்டு வருவாரை நோக்கித் தாம் உடன் போகாது தழைமூடிய பெரிய காட்டில் வலிய வில்வீரர் மறைந்திருத்தலைக் கருதாமல் போதலை விடு; உன் எண்ணம் சிறப்பதாக; தெய்வம் ஏறிய சாமியாடி போலத் தாவித்துள்ளும் பசுக்கூட்டத்தின் மேல் பக்கத்தே விளங்கும் ஒளியுடைய வாளையும் வீரக்கழலையும் உடையவனே (புறம்.259) என வரும் பாடல் மறவன் ஒருவனின் வீரம் பற்றிய புலவரின் பாடலாகும். வீரம் பற்றிய பாடல்களுக்கு முந்து நிலையில் பாணர்களின் குழுப்பாடல்களில் இனக்குழுத் தலைவன், மக்களின் செயலாற்றல் பற்றிய புகழ்மொழிகளே புலவர் காலத்தில் வீரம் என்னும் உயர்தகுதி பெற்றது எனலாம்.

பாணர்களின் வாய்மொழிப் பாடல்களே புலவர்களின் உயர்மொழி பாடல்களாக மாற்றமடைந்தன என்பதனை, "வாய்வழியாக பாணர் மரபில் பல

தலைமுறைகளாகத் தொடர்ந்து கொண்டிருந்தது. 'ஆகோள்' எனும் ஆநிரை கவர்தலும் - மீட்டலும் ஆகிய இனக்குழுக்களின் பாடல் அடிக் கருத்து, வேந்தராட்சியில் மேலெழுந்து புலவர் மரபால் அரசவையில் பாடப்படுவதற்கான திணை - துறை சம்பிரதாயமாக மாற்றப்பட்டதை அவதானிக்கலாம்"[8] என்று குறிப்பிடுகின்றார். பாணர் மரபில் பாடப்பட்ட தொன்மை வாய்ந்த பாடுபொருள்களைப் புலவர் மரபு உட்செறித்துக் கொண்டது எனலாம்.

அரசனைப் புகழ்ந்து பாடும் புலவர்களின் அரச வாழ்த்துப் பாடல்கள், பாணர் தம் குழுக்களுக்கு உணவுக் கொடை அளித்து புரக்கும் தலைவனை, உறுப்பினர்களை வாழ்த்திப் பாடும் பாடல்களை அடியொற்றியவையே எனலாம். ஊரும் பேரும் கூறாமல் கொடுத்த உணவுக் கொடை பற்றிய பாணர் பாடலும் (புறம்.150), அரசன் முன்னிலையில் பல்வேறு இசைக்கருவிகளைக் கொண்டு வாழ்த்திப் பாடிய (புறம்.152) பாணரின் வாழ்த்திசைப் பாடலின் தன்மைகளையும் சங்க பாடல்களின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

பாணர், புலவர்களின் பாடும் முறை குறித்து, "பழங்காலச் சமூகத்தில் பாணர்கள் எண்ணிக்கையில் அதிக மானவர்களாகவும் முதன்மைத் தகுதியுடைவர்களாகவும் இருந்தனர். அவர்கள் தமது வாழ்த்துப் பாக்களால் அடையாளங் காணப்பட்டனர். அதனின்றும் சற்றே மாறுபாடாகப் புலவர்கள் வாழ்த்துப் பாக்களை மன்னன் அல்லது குறுநில மன்னனின் மீது இயற்றிய போதும் அவர்கள் பாணன் ஒருவன் வீரனைப் பாடுகிற பாணர் மரபினையே பின்பற்றினர்"[9] என்று குறிப்பிட்டுள்ளார்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை, கோவூர் கிழார் என்னும் புலவர் பாணர்களின் வாழ்த்துப்பா மரபுப்படி,

> தேந் தீந்தொடைச் சீறியாழ்ப் பாண
> கயத்துவாழ் யாமை காழ்கோத் தன்ன
> நுண்கோற் றகைத்த தெண்கண் மாக்கிணை
> இனிய காண்கிவப் பணிகெனக் கூறி
> வினவ லானா முதுவா யிரவல
> தைஇத் திங்கட் டண்கயம் போல
> கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்
> அடுதீ யல்லது சுடுதீ யறியா
> திருமருந்து விளைக்கு நன்னாட்டுப் பொருநன்

கிள்ளி வளவ னல்லிசை யுள்ளி
நாற்ற நாட்டத் தறுகாற் பறவை
சிறுவெள் ளாம்பன் ஞாங்க ரூதும்
கைவள் ளீகைப் பண்ணன் சிறுகுடிப்
பாதிரி கமழு மோதி யொண்ணுதல்
இன்னகை விறலியொடு மென்மெல வியலிச்
செல்வை யாயிற் செல்வை யாகுவை
விறகொய் மாக்கள் பொன்பெற்றன்னதோர்
தலைப்பா டன்றவ னீகை
நினைக்க வேண்டா வாழ்கவன் றாளே (புறம்.70)

என வரும் பாடல் மூலம் அறியலாம். பாணர்களின் வாழ்த்துப்பாக்களை கைக்கொண்ட புலவர்கள் அவற்றை சொற்தேர்ச்சியுடனும் உவமைகளுடனும் தொடர்புபடுத்தி புதிய பாடல்களாய்ப் புனைந்தனர். "சங்க இலக்கியங்கள் அப்படியே வாய்பாட்டு மரபின் வெளிப்பாடுகள் எனக் கொள்ளாமல் அவை தொகையாக்க காலத்தில் தகுமொழி வழக்கில் மொழி மாற்றம் செய்யப் பட்டிருக்கும் என்பதற்கும் சாத்தியப்பாடுகள் உள்ளன"[10] எனவரும் கருத்தின் மூலம் மேலும் தெளியலாம்.

புலவர்களின் கையறுநிலைப் பாடல்கள்,

"ஒருவர் இறந்தால் வருந்திப் பாடுதலும், வாழ்வு பற்றிய அவலங்களைக் கவிஞர் எடுத்துரைப்பதும் கையறு நிலையாயின"[11] என்று கையறுநிலைப் பாடல்கள் குறித்து தமிழண்ணல் குறிப்பிடுகின்றார்.

உயரிசை வெறுப்பத் தோன்றிய பெயரே
மடம்சால் மஞ்ஞை அணிமயிர் சூட்டி
இடம்பிறர் கொள்ளாச் சிறுவழிப்
படம்செய் பந்தர்க் கல்மிசை யதுவே (புறம்.260)

பாணர்களே ஆநிரைப் போரில் வீரன் இறந்து பட்டான். உயர்ந்த புகழ் மிகத் தோன்றிய அவ்வீரன் பெயர், மென்மையமைந்த மயில்தோகை சூட்டிப் பிறரால் இடம் பெறுதற்கு அரிய இடத்தில் வேய்ந்து அழகு செய்யப் பந்தலின் கீழ் நடப்பட்ட கல்லின் மேலே உள்ளது எனவரும் பாடலும்,

கறவை தந்து, பகைவர் ஓட்டிய
நெடுந்தகை கழிந்தமை அறியாது
இன்றும் வரும்கொல் பாணரது கடும்பே (புறம்.264)

பரவிய கல்லாங் காட்டின் மேட்டில், மரல் நாரைக் கிழித்துத் தொடுக்கப் பட்ட சிவந்த பூவால் ஆகிய கண்ணியுடன், அழகிய மயில் தோகை சூட்டி, பெயரை எழுதி இப்பொழுது நடுகல் நிறுத்தினர்; கன்றுடன் பசுவையும் மீட்டு வந்து பகைவரை ஓடச் செய்த பெருந்தகையாளன் இறந்தமை அறியாது பாணர் சுற்றம் இன்றும் வரும் போலும் என்பவை போன்று வரும் கையறுநிலைப் பாடல்களில் பாணர்களை முன்னிறுத்திப்பாடுவதும், தம்மைப் புரந்த வள்ளலின் இறப்பிற்கு, தம்மை புரந்த வள்ளல் இறந்தபோது யாழை முறித்துப் போட்டும் (அகம்.115), பூச்சூடாமலும் (புறம்.242) இருந்த பாணர், மனம் மிக வருந்தி பாடிய பாட்டுக்களே அடிப்படையாய் அமைந்திருக்கும் என உய்த்தறிய இடமுள்ளது.

களர்ப்படு கூவல் தோண்டி நாளும்
புலைத்தி கழீஇய தூவெள் அறுவை
தாதுஎரு மறுகின் மாசுண இருந்து
பலர்குறை செய்த மலர்தார் அண்ணற்கு
ஒருவரும் இல்லை மாதோ செருவத்துச்
சிறப்புடைச் செங்கண் புகையவோர்
தோல்கொண்டு மறைக்கும் சால்புடை யோனே (புறம்.311)

எனவரும் புலவர் பாடிய பாடல் பாண்பாட்டு என்னும் துறையில் அமைந்துள்ளது (சங்க இலக்கியத்தில் பாண்பாட்டு துறை பாடல்கள் புறம்.260,261,283,284,311). பாண்பாட்டு என்னும் துறையானது, போரில் இறந்துபட்ட வீரர்க்குப் பாணர் சாப்பண் பாடித் தம் கடன் கழித்தல் எனும் விளக்கம் பெறுகின்றது.

தம் குழுத் தலைவன், உறுப்பினன் இறந்த போது அவர்களுக்குச் சடங்கு தன்மையில் பாணரால் பாடப்பட்ட பாடல் மரபினை அடியொற்றி புலவர்களால் பாடப்பட்ட பாடல்களே பாண்பாட்டு என்னும் துறையில் அமைந்துள்ளது. தொல் சமூகத்தில் பாணர்களால் பாடப்பட்ட பாடல்கள், சங்க இலக்கியத்தில் புலவர்களால் புதியதாகப் புனையப்பட்டவைக்களாக மாற்றமடைந்தன.

பாணர் பாடல்கள் புலவர் பாடல்களாக மாற்றமடைந்தது குறித்து, "சமூகத்தில் நிகழ்ந்த படிநிலை அமைப்புகள்; அறிவு, சமூகத் தகுதி பற்றிய கண்ணோட்டம் போன்றவை பாண்பாடல்களின் அழிவுக்குக் காரணமாகியுள்ளன. எழுத்தைக் கற்ற, தொன்மைச் சார்புடைய புலவர் மரபினர் பாண்பாடல்களைப்

பதிவு செய்யும் போது இயற்பாடல் மரபில் பதிவு செய்திருக்கலாம். இனக்குழுச் சமூகத்தில் பாண் மரபை நிலைநிறுத்தும் முயற்சியில் இப்பாடல்கள் பதிவு செய்யப் பட்டிருக்கலாம். இயற்பாடல் மரபில் பதிவு செய்யப் பட்டதால். பாண்பாடல்களை முழுமையாகப் பெற இயலவில்லை. புலவர்களின் பாடல்களாக அவை மாற்றப்பட்டுள்ளன"[12] என்று கே.பழனிவேலு குறிப்பிடுகின்றார். இனக்குழுச் சமூகத்தில் மதிப்பு மிக்கவர்களாய்க் கருதப்பெற்ற பாணர்கள் பாடிய பாடல்கள், சங்க இலக்கிய காலத்தில் அரசர்களிடம் கல்வி கற்ற புலவர்கள் பாடுதலே சிறப்பு என்று கருதியமையால் புலவர்களால் பாடப்பெற்றன.

புலவர்களின் பாடல்களில், "இறந்த வேந்தனின் புகழையும், பண்பையும் காதலித்து உரைக்கும் இயல்பு பல கையறுநிலைப் பாடல்களில் காணப்படுகின்றன"[13] என்று கதிர்மகாதேவன் குறிப்பிடுகின்றார்.

தொல்குடிச் சமூகத்து இனக்குழு கலைஞர்களான பாணர்களின் மரபு வழிப்பட்ட பாடல்களை உட்செறிந்து புலவர்கள் பாடல்களைப் புனைந்துள்ளனர். நிலம் முழுவதும் பயணித்து தங்களைப் புரப்பவர்களைப் போற்றியும், அவர்கள் இறப்புக்காய் வருந்தியும் பாடிய பாடல்களைப் புலவர்கள் புதுமெருகேற்றிப் பாடினர் என்று உய்த்தறிய இடம் உள்ளது.

**பாணர் – புலவர் மதிப்பீடுகள்**

இனக்குழுச் சமூக வாழ்க்கை முடிவுற்று அரசர், வேந்தர்களின் முடியாட்சி தோன்றிய காலகட்டமே சங்க இலக்கிய காலமாகும். இனக்குழுச் சமூகத்தில் பாணர்கள் பாடுதலே சிறப்பு என்றிருந்த நிலை, முடியாட்சிக் காலத்தில் புலவர்களால் பாடப்படுதலே பெரும் புகழ் என்று மாறியது. சங்க இலக்கியப் பாடல்கள் பாணனைத் தொல்குடிச் சமூகத்து வாய்மொழிப் பாடகன் என்றும், புலவனைக் கல்வி, அறிவு ஆகியவற்றுடன் தொடர்புபடுத்தியும் கூறுகின்றன. புலவர்களின் ஏற்றம் குறித்து, "சங்க காலம் இனக்குழு வாழ்வுமுறைகள் மாறுதலுக்கு உட்பட்ட காலம். நிலவுடைமையாக மாறுகிற இக்காலகட்டத்தில் எழுத்து இலக்கிய மரபு உருவாகின்றது. அரசின் தோற்றுவாய்க் காலமான அக்காலத்தில் இலக்கிய உருவாக்கம் அரசு உருவாக்கத்தின் ஒரு அங்கமாக அமைகின்றது. அரசு சார்ந்தவர்களான புலவர்களின் இருப்பு நிலைகள் மாறுகின்றன."[14] என்று பெ.மாதையன் குறிப்பிடுகின்றார்.

சங்க இலக்கியப் பாடல்கள் பாணர்களுக்கான அடைமொழிகளாக,

| | |
|---|---|
| பசித்த பாணர் | (புறம்.327) |
| சீறியாழ்ப் பாணர் | (புறம்.70) |
| முதுவாய்ப் பாணர் | (புறம்.319) |
| புலவுவாய்ப் பாணன் | (பெரு.22) |

என்று வழங்குகின்றன. பாணர்கள் வறியவர்களாய்த் தம்மை புரக்கும் வள்ளல்களைத் தேடி அலைபவர்களாய் இருந்தனர் என்பதைக் குறிக்க பசித்த என்னும் அடைமொழியும், யாழ் என்னும் இசைக் கருவியைக் கொண்டு ஆட்சியாளர் / மக்களை மகிழ்விப்பவர்கள் என்பதைக் குறிக்க சீறியாழ்ப் பாணன் என்னும் அடைமொழியையும் குறித்தனர். பாணர்கள் தொல்குடிச் சமூகத்தினர் என்பதைக் குறிக்க முதுவாய் என்னும் சொல்லும், புலவுவாய்ப்பாணன் என்பது முடியாட்சி காலத்தில் புலவர்களால் பாணர்களை மதிப்பிறக்கமாகப் பயன்படுத்திய சொல்லாக அறியமுடிகின்றது. புலவுவாய் (பெரு.269) பெரு.119) எஃகம் - பகைவர்களைக் குத்தியதால் புலால் நாற்றம் வீசும் வேல்; புலவுநுணை - புலால் நாற்றமுடைய அம்பு, புலவுக்கடல் (பெரு.409) - புலால் நாற்றம் வீசும் கடல்.

என வழங்கப்பெறும் அடைமொழிகளைக் கொண்டு பாணர்களுக்கு முடியாட்சி காலத்தில் வழங்கப் பெற்ற மதிப்புகளை அறிந்துகொள்ள முடிகின்றது.

"புலவன் என்ற சொல்லுக்குப் பொருள் அறிவுடையோரென்பது, புலம் - அறிவு"[15]. புலமை என்ற சொல்லுக்கு அறிவு என்பது பொருள். (புரையுநர் இல்லாப் புலமையோய் (திரு.280) "புலவோர் என்பது அறிவுப் பரப்பை உடையவர்கள் என்பது கருத்து."[16]

புலவர் என்னும் சொல் கல்வி, அறிவு, சொல் தேர்ச்சி ஆகியவற்றுடன் இணைத்துக் கூறப்பட்டுள்ளது. "புலன் என்பது முழுக்க முழுக்க வாய்மொழி மரபு அல்லாத, பாணர் மரபு அல்லாத மேனிலையினதாகக் கருதப்பட்டே ஆளப்பட்டுள்ளது"[17] என பெ.மாதையன் குறிப்பிடுகின்றார்.

புலவர்களுக்கான அடைமொழிகளாக அவர்களின் செந்நா (கல்வி) பற்றியும், அவர்களின் மொழி அறிவு பற்றியும் பேசப்பட்டுள்ளது.

| | |
|---|---|
| உயர்மொழிப் புலவீர் | (புறம்.394) |

நுணங்குநுண் பனுவல் புலவன் (அகம்.345)

நாநவில் புலவர் (புறம்.282)

அஞ்சொல் நுண்தேர்ச்சிப் புலவர் (புறம்.235)

நுணங்கு செந்நா (புறம்.211)

எம்சிறு செந்நா (புறம்.148)

செந்நாப் புலவீர் (புறம்.140)

பொய்யாச் செந்நா (புறம்.168)

அலங்கு செந்நா (புறம்.22)

புலவர் வாய் சிறப்பு எய்தி (புறம்.53)

தொல்லியற் புலவ (பரி.3)

என்று பல்வேறு அடைமொழிகளைப் புலவர்களுக்கு வழங்கப் பெற்றமையை அறிந்துகொள்ள முடிகிறது.

மரபு வழிப்பட்ட பாணர்களைக் காட்டிலும், புலவர்கள் உயர்ந்தவர்கள் என்பதைக் காட்டவே கல்வி, மொழி ஆகியவற்றுடன் தொடர்புடைய அடைமொழிகளைப் புலவர்களுக்கு முன்பு சேர்த்திருக்க வேண்டும். மரபுவழிப்பட்ட வாய்மொழிப் பாடல்களைப் பாடும் பாணர்களின் பாடல்களை விட கல்வி கற்ற புலவர்கள் இயற்றும் பாடலே சிறப்புடையது என்பதைக் குறிக்கவே,

செறுத்த செய்யுட் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன் (புறம்.53)

என்ற பாடல், விரைந்து பல பொருளையும் அடக்கிய செய்யுளை இயற்றும் செவ்விய நாவையும் மிகுந்த கேள்வியையும் விளங்கிய புகழையும் உடைய கபிலன் என்று, புலவர்களைக் கல்வி அறிவோடும் செய்யுள் இயற்றுவதில் வல்லவர்கள் என்றும் குறிப்பிடுகின்றது. புலவர்களின் தன்மை குறித்து கைலாசபதி, "செய்யுட்களின் நுண்ணாய்வும், புலவர்களைப் பற்றிக் குறிக்கும் இடங்களும், அவர்கள் சமூகத்தில் எத்தகு உயர்மதிப்புப் பெற்றிருந்தனர் எனக் காட்டுகின்றது"[18] என்று குறிப்பிடுகின்றார்.

இனக்குழுச் சமூகத்தைச் சார்ந்த மரபிசைக் கலைஞர்களான பாணர்களைக் காட்டிலும் புலவர்களுக்கு அரசர், வேந்தர்கள் முக்கியத்துவம் அளித்தனர். கல்வி கற்ற புலவர்களால் பாடப்படுவதே பெருமை என்றும் அழியாப் புகழ் தரும் என்றும் நம்பினர். தலையாலங்கானத்துப் செருவென்ற நெடுஞ்செழியன்,

ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவன் ஆக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைக என் நிலவரை (புறம்.72)

என வரும் பாடல், என் வஞ்சினத்தை நான் நிறைவேற்றத் தவறினால் மாங்குடி மருதன் தலைவனாக உலகம் புகழும் புலவர்கள் தங்கள் பாடல்களுக்கு நான் உரியவன் அல்லன் என்று கூறி என் நில எல்லையை நீங்குவாராக என்று புலவர்களுக்கே முதன்மைஇடம் அளித்துள்ளமையை அறிந்து கொள்ள முடிகின்றது.

சங்க காலச் சமூகத்தில் புலவர்களின் இடம் குறித்து பெ.மாதையன், "இனக்குழுச் சமுதாயத்தின் பொதுமைப்பண்புகள் மறைந்து உடைமைச் சமுதாயத்தின் தனியுடைமைப் பண்புகள் வளர்ந்து, உடைமை பாதுகாப்பிற்கான அரசு எனும் அமைப்பும், பல்வேறுபட்ட தொழில் பிரிவினரும், வருணமும், வர்க்கமும் உருவான சமுதாய சூழலில் அரசின் நலன்களைப் பாதுகாப்பதற்கு உரியவராக அந்தணர்கள் இருத்தலைப் போல் அரசின் சமுதாய உறவுகளை நிலைநிறுத்துபவர்களாகப் புலவர்கள் இருந்துள்ளனர்"[19] எனக் குறிப்பிடுகின்றார்.

அரசனைப் புகழ்ந்து பாடிய புலவர்கள், கற்றறிந்த புலவர்களால் பாடப்படுதலே பெறும் பேறு என்பதைப் பாடலுள் இணைத்துப் பாடினர்.

புலவர் பாடும் புகழுடையோர், விசும்பின்
வலவன் ஏவா வான ஊர்தி எய்துப (புறம்.27)

எனும் பாடல், புலவர்களால் பாடப்படும் புகழை உடையவர் தாம் செய்யும் நல்வினை முடித்து, இயக்குவோன் இல்லா வானவூர்த்தியையும் பெறுவர் என்று குறிப்பிடுகின்றது.

ஆடுகொளக் குறைந்த தும்பைப் புலவர்
பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே! (புறம்.21)

புலவர் பாடும் போர்த்துறைகள் எல்லாம் கொண்ட வெற்றி வேந்தனே என்று அரசனின் வெற்றிகளைப் புலவர்கள் பாடுதல் குறித்து,

சேண்விளங்கு நல்இசை நிறீஇ
நாநவில் புலவர் வாயு ளானே (புறம்.282)

அரசனுடைய நிலைத்த புகழ் என்பது புலவர்கள் அவனைப் பாடுதலேயாகும் என்னும் கருத்தைச் சங்க இலக்கியப் பாடல்கள் வெளிப்படுத்தி நிற்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

புலவர்கள் பற்றிய புதிய கற்பனைகளை / உவமைகளைச் சங்க இலக்கியப் பாடல்கள் வெளிப்படுத்துகின்றன.

இவரே, புலன் உழுது உண்மார் (புறம்.46)

இவரே, அறிவால் உழவுசெய்து கொடையுணவுண்டு வாழும் புலவர் என்று புலவரை அறிவால் உழவு செய்பவர்கள் என்றும்,

இசைநுவல் வித்தின் நசைஏர் உழவர்க்கு (மலை.60)

எனவரும் அடி புலவரைச் சொல்ஏர் உழவன் என்றும் குறிப்பிடுகின்றது.

முதுமொழி நீராப், புலன்நா உழவர்
புதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் புனல் ஊர (கலி.68)

எனவரும் பாடல், புலவர்கள் தமது அறிவு மிக்க நாவன்மை என்னும் உழவால் புதிய கவிதைப் பயிரைப் படைக்கின்றனர், எனவரும் பாடல் அடிகளில், கற்றறிந்த புலவர்கள் புதுவகையான உவமைகளைக் கையாண்டனர். மரபு வழிப்பட்ட பாணர்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டவும், புலவர்களின் பாடல் புனையும் திறம், உழவர்களின் உழவுத் தொழிலுக்குச் சமமானது என்பதை அரசனுக்கு உணர்த்தவும் இத்தகைய உவமைகளைக் கையாண்டனர்.

புலவர்களின் பாடல் புனையும் திறம்மிகுந்த உழைப்பைக் கொண்டது என்பதை அரசனுக்கு உணர்த்தி, புலவர்களின் மதிப்பு மேலும் உயர்த்தப்பட்டது.

**பாணர் – புலவர் முரண்பாடு**

பாணர் நேரடியாக அரசனைப் புகழ்ந்த புறப்பாடல்கள் எதுவும் கிடைக்கப் பெறவில்லை. பாணர் அரசனைப் புகழ்ந்ததாகப் படர்க்கையில் கூறும் புலவர் பாடல்களே கிடைத்துள்ளன. பாணர்களின் இருப்பும், அவர்களின் சமூகச் செயல்பாடுகளும் புலவர் பாடல்களின் வாயிலாகவே

அறிந்து கொள்ள முடிகின்றது. இனக்குழுச் சமூகத்துப் பாணர்களை விடவும் புலவர்களுக்கே அரசன் முக்கியத்துவம் தரவேண்டுமென வற்புறுத்தினர். அரசர்/ வேந்தர்களிடம் பாணர்களுக்கு இருந்த முக்கியத்துவத்தைக் கல்வியென்னும் உயர்தகுதி பெற்ற புலவர்கள் இழக்கச் செய்தனர்.

நிலமிசைப் பரந்த மக்கட் கெல்லாம்
புலன்அழுக் கற்ற அந்த ணாளன்
இரந்துசெல் மாக்கட்கு இனியிடன் இன்றிப்
பரந்திசை நிற்க பாடினான் (புறம்.126)

மண்ணில் பரவியுள்ள மக்களுக்கெல்லாம் புலமைக் குறை இல்லாத அந்தணனாகிய கபிலன் (புலவன்), இரந்து செல்லும் இரவலர்களுக்கு (பாணர்) இனி இடம் இல்லையாகப் பெருகிய புகழ் நிலைக்கப் பாடினான் என வரும் பாடல், செய்யுள் இயற்றும் புலவர்கள், பாணர்களை இரண்டாம் நிலைக்குத் தள்ளினர் என கருத இடம் தருகின்றது.

புலவர்கள் பெற்ற பரிசில்கள் குறித்து, "அவர்கள் (புலவர்) பாணர்களின்றும் விரிந்த பார்வை கொண்டிருந்தனர். அதனால் பாணர்கள் பெற்று வந்த பரிசில்களை விடவும் உயர்ந்த, அளவுக்கு அதிகமான பரிசுகளையும் சமூகத் தகுதியையும் புலவர்கள் பெற்றனர்"[20] என்று சேவியர் தனிநாயகம் குறிப்பிடுகின்றார். புலவர்கள் அரசர்களிடம் தங்கள் கருத்துக்கு, பாடலுக்கு முக்கியத்துவம் தரவேண்டும் என்றும் வலியுறுத்தினர். பாரியின் மகள்களை மணக்க வேண்டுமென கபிலர் மன்னர் இருங்கோவேளைப் பாடிய போது, உன் தந்தையின் உரிமைச் செல்வத்தை நிரம்பப் பெற்ற வளமான கண்ணியை உடையவனே, உம்மைப் போலும் அறிவுடைய உம்மவன் ஒருவன் புகழ்மிக்க பாவலனாகிய கழாத்தலை என்னும் பெயருடைய புலவரை இகழ்ந்ததன் பயனாம் என்று புலவனை இகழ்ந்த பயனால், அரையம் என்னும் நகரம் அழிந்தது யானும் புலவன்; என் வேண்டுகையை இகழ்தலால் உனக்குக் கேடு வராதிருக்க என்பராய் வெல்க நின்வேல் என்று (புறம்.202) கூறும் போது புலவர்களின் கருத்தை அரசன் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்னும் கருத்து இடம் பெறுதலைக் காண முடிகின்றது. மேலும்,

'யானே, பரிசிலன் மன்னும் அந்தணன்;' (புறம்.200) என்று தான் அந்தணப் புலவன் இப்பரிசில் கொடு என அதிகாரமாய்க் கேட்பதையும் காண முடிகின்றது.

*ஒருதிசை ஒருவனை உள்ளி நாற்றிசைப்*
*பலரும் வருவர் பரிசில் மாக்கள்*
*வரிசை அறிதலோ அரிதே; பெரிதும்*
*ஈதல் எளிதே மாவண் தோன்றல்*
*அதுநற்கு அறிந்தனை ஆயின்*
*பொதுநோக்கு ஒழிமதி புலவர் மாட்டே* (புறம்.121)

ஒரு திசையில் இருக்கும் ஒருவனை நினைத்து நான்கு திசைகளில் இருந்தும் பரிசு விரும்புவார் பலரும் வருவர்; அவர்கள் புலமைத் தகுதியை அறிவது அரிதாகும்; ஆனால் கொடை வழங்குவது எளிதாகும்; பெருவளமையுடைய காரியே, அதனை நீ நன்கு அறிந்தனை என்றால் புலவர்களால் பொதுப் பார்வை பார்த்தலை விடுவாயாக என வரும் பாடல் பரிசில் மாக்களின் தகுதியை அறிந்து பரிசில் வழங்க வேண்டும் எனக் குறிப்பிடுகின்றது. உடைமைகள் அனைத்தும் பொதுத்துய்ப்பிற்கானதாய் இருந்த இனக்குழு நிலையிலிருந்து வேந்தர்களின் முடியாட்சி காலம் தோன்றிய பிறகு தகுதியறிந்து கொடை வழங்க வேண்டுமென்ற குரல்கள் தோன்றுகின்றன.

சங்க இலக்கியத்தில் காணப்படும் கொடை குறித்து பெ.மாதையன், "இனக்குழுச் சமுதாய எச்சங்களாய் நின்ற விருந்தோம்பலும் கொடைமையும்; எல்லோரையும் விருந்தினராய் ஏற்றல், யாவர்க்கும் கொடை வழங்குதல் எனும் நிலையில் எல்லோர்க்கும் பொதுவானவையாய் இருந்த நிலை வேந்தரின் உடைமைச் சமுதாயத்தில் மாற்றமடைகிறது வரிசை அறிதல் எனும் பண்பு மன்னர்களிடம் வேண்டப்படுவதுடன் அறிவுறுத்தவும் வலியுறுத்தவும் படுகிறது"[21] என்று குறிப்பிடுகின்றார்.

*அறிவுமடம் படுதலும் அறிவுநன்கு உடைமையும்*
*வரிசை அறிதலும் வரையாது கொடுத்தலும்*
*பரிசில் வாழ்க்கைப் பரிசிலர் ஏத்தும்* (சிறு.216-18)

அறியாமையுடையாரிடத்துத் தானும் அறியாமையுடையான் போன்றிருத்தலும், அறிவுடையாரிடத்து தனது அறிவு நன்குடைமையைக் காட்டலும், வருவோர் தகுதியைத் தெளிவாக அறிதலும், சிறப்பில்லாதோருக்குக் கொடேன் என்று வரைந்து கொள்ளாது வந்தோர்க்குத் தக ஈதலும் ஆகிய நிலைகளைப் பாராட்டிப் பரிசில் வாழ்க்கையுடையோர் புகழ்வர் என வரும் வரிகளில் அறிவு, அறிவின்மை என்பது கல்வியுடையோர், கல்வியில்லாதவர்

எனப் புலவர் பாணருக்கான வரிசை (தகுதி) அறிந்து பரிசில் வழங்குபவன் என்றும்,

மடவர் மெல்லியர் செல்லினும்
கடவன் பாரி கைவண் மையே (புறம்.160)

என வரும் பாடலில், பாரியின் கொடைத் தன்மையைப் புகழ்ந்த கபிலர் மடவர் (அறிவில்லாதவர்) சென்றாலும் கொடை வழங்கக் கூடியவன் என்ற சொல் கல்வியறிவில்லாதவரையே குறித்து நிற்கின்றது எனலாம். எனவே, அரசனுடைய சிறப்பு என்பது அவன் வரிசை (தகுதி) அறிந்து கொடை வழங்கும் பண்பே என்று பாணர்களைப் புறந்தள்ளும் புலவர்களின் கருத்தினை அறிந்து கொள்ள முடிகின்றது.

மேலும் புலவர்கள் அரசனைப் புகழும் போது, புலவர்கள் எல்லாம் அரசனை நோக்கியே வாழ்வதாகவும் (புறம்.42) தலைமுறை தலைமுறையாக அரசர்களையே நம்பி வாழ்வதாகவும் (புறம்.38) அரசனை நோக்கி, நின் முன்னோர் எல்லாம் அந்தணர்கள் (புலவர்கள்) வெறுப்பன எதுவும் செய்திலர் என்றும் (புறம்.43) அரசன் குற்றமற்ற கேள்வி அறிவுடையோர்க்குப் புகலிடமானவன் (புறம்.221) என்றும் அரசர்களிடம் புலவர் மரபு தங்களை முன்நிறுத்திக் கொள்கிறது. தன்னை வந்து காணாமல் கொடுத்த இப்பரிசிலைப் பெற்றுக் கொள்வதற்கு யான் ஒரு வாணிகப் பரிசிலன் அல்லன் (புறம்.208) என்று பாணர்களைக் காட்டிலும் தங்களைக் கூடுதல் தகுதி படைத்தவர்களாகவே புலவர் மரபு முன்னிறுத்துகின்றது. 'கல்லாவாய்ப் பாணன்' (கலி.70) என்று பாணர்களை இரண்டாம் நிலைக்குத் தள்ளி, புலவர் மரபு மேல்நிலையாக்கம் பெற்றது.

இனக்குழுச் சமூகத்தில் மதிப்புமிக்க பாணர்கள், வேந்தர்களின் முடியாட்சி காலத்தில் புலவர்களின் தலையீட்டால் வறுமை நிலைக்கு ஆட்பட்டனர். உடும்பைத் தோல் உரித்தாற் போல எலும்பு எழும்பிய விலாவையுடைய சுற்றத்தின், வாட்டும் பசியை நீக்குபவரைக் காணாமல், கேட்பவர் பலராயினும் சிலரே விரும்பிக் கேட்டும் கலைத்திறத்தை எண்ணி மிகுநோவுற்ற பாணன் (புறம்.68) என்று பாணர்களின் வறுமை காட்டப்படுகிறது.

புலவர்களால் பாடப்படுவதே பெருமை, சிறப்பு வாய்ந்தது என்று எண்ணிய அரசர்களுடன் புலவர்கள் நெருக்கம் அதிகரித்தச் சூழலில் அவர்களின் சமூகத்தகுதி உயர்வடைந்தது. அவர்களின் வாழ்க்கை நிலை,

புலவுநாற்றத்த பைந்தடி
பூநாற்றத்த புகைகொளீஇ, ஊன்துவை
கறிசோறு உண்டு வருந்துதொழில் அல்லது
பிறிதுதொழில் அறியா; ஆகலின் நன்றும் (புறம்.14)

புலால் மணத்தையுடைய கொழுத்த ஊனைப் பூமணம் பொருந்திய புகையூட்டி ஆக்கிய கறியையும் சோற்றையும் உண்டு வருந்துதல் அல்லது வேறு வருந்துதல் அறியாதன; ஆதலால் மெல்லிய ஆயின என்றும்,

ஊன் கொண்ட வெண்மண்டை
ஆன்பயத்தான் முற்றழிப்பவும்,
வெய்துண்ட வியர்ப்பு அல்லது
செய்தொழிலான் வியர்ப்பு அறியாமை (புறம்.386)

என வரும் பாடலில், நீர் நிரம்பிய பொய்கையில் பெய்யும் மழைத் துளி போல நெய்யில் வறுக்கப்பட்ட வறுவல்களைத் தின்னவும், சூட்டுக் கோலால் குத்திச் சூடுபடுத்திய ஊனை உண்ணவும், ஊன் வைத்திருந்த வெண்ணிறக் கலம் ஆவின் பாலால் நிரம்பி வழியவும், சூட்டுடன் உண்டமையால் உண்டாகும் வியர்வை அல்லாமல் செய்கின்ற தொழிலால் வியர்வை உண்டாகா வகையில் தந்தான் எம் தந்தை போல்வான் என்று வரும் பாடலில் புலவர்களின் உயர்ந்த வாழ்க்கை முறைகளை அறிந்துகொள்ள முடிகின்றது.

பாணர்கள் ஆடல், பாடல் முதலிய கலைகளில் வல்ல தொழில் சார்ந்தோராக இருந்த நிலையில் புலவர்கள் மூளை உழைப்பை உடையோராய், தொழில் சாராதோராய், அறிவுப் புலம் சார்ந்தவர்களாய் உயர்ந்த நிலையில் இருந்துள்ளனர். அரசரிடம் மிகுதியான நெருக்கம் உடையோராய்ப் புலவர்கள் இருந்துள்ளனர்.

பாணர்களின் வறுமைகுறித்து பெ.மாதையன், "சங்க காலத்தில் பாணரும் புலவரும் தலைவர்களையும் அரசர்களையும் நம்பி அவர்களைச் சார்ந்து வாழ்ந்தவர்களாகவே உள்ளனர். இவர்கள் கலை, அறிவு எனும் இரண்டையும் வருவாய்க்கான ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்துள்ளனர். பாணர் குழுக்களாக இருந்து கலையையே தொழிலாக மேற்கொண்டவர்களாக வாழ்ந்த நிலையினராக உள்ளனர். இவர்களின் உழைப்பு பிறரை நம்பியே செய்யப்படுவது எனும் நிலையிலான சார்புநிலையால் அறியப்படும் இனக்குழுச் சிதைவால் நிலவுடைமைச் சமுதாயத்தை நோக்கிச் செல்லத் தொடங்குகின்றனர். பாணர்

உள்ளிட்ட கலைஞர், இந்த மாறுதல் காலகட்டத்தில் இனக்குழுவின் அழிவால் பாணர் போன்ற கலைஞர்கள் வறுமைச் சூழலுக்கு ஆட்பட்டனர்"[22] என்று குறிப்பிடுகின்றார்.

**பாணர் – புலவர் ஆற்றுப்படை**

பொருள் (கொடை) பெற்ற ஒருவன், வறியவனாய்க் காணப்படும் தன்னை ஒத்தக் கலைஞனுக்கு வழி கூறி கொடையாளனிடம் அனுப்புவது ஆற்றுப்படை என்னும் துறையாகும். பாடாண் திணையுள் ஒரு துறையாகிய ஆற்றுப்படையின் இலக்கணமாக,

> கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
> ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றி
> பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
> சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும் (தொல்.பொருள்.புற.36)

என, வழிகாட்டுவதற்கு (ஆற்றுப்படுத்துவதற்கு) உரியவராகக் கூத்தர், பாணர், பொருநர், விறலி ஆகிய நால்வருமே உரியவர்கள் என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது.

கலையைத் தொழிலாகக் கொண்ட பாணர்கள் குறித்து சுப்பிரமணியன், "குழு வளர்ச்சி பெறும் பொழுது வேலைப் பிரிவினைத் தோன்றுகிறது. அப்பொழுது ஆடல் பாடல்களில் வல்லவர்களுக்குக் கூத்தும் பாட்டும் தொழிலாகி விடுகிறது. இந்நிலையிலேயே பாணர், கூத்தர், பொருநர், விறலியர் போன்ற கலையைத் தொழிலாகக் கொண்டவர்களைக் கொண்டு ஒரு சமுதாய பிரிவு தோன்றியது நாளடைவில் இவர்கள் கலையை வளர்த்தனர்; தங்கள் வாழ்க்கையை, அதனைக் கொண்டு நடத்தினர்"[23] எனக் கூறுகின்றார். இனக்குழுச் சமூகத்தில் வழங்குதல் என்பது பொதுத்துய்ப்பாய் இருக்க, முடியாட்சி காலத்தில் வழங்குதல் என்பது கொடை என்னும் பெயரினை ஏற்றது. தொல்குடிச் சமூகத்தினரான இசைக் கலைஞர்களைப் பாதுகாக்கும் பொருட்டு கொடை வழங்கப்பெற்றது.

சங்க இலக்கியப் பாடல்துறைகளில் பாணாற்றுப்படை (புறம்.68, 69, 70,138, 141, 155, 180, 67. பத்துப்பாட்டில் பெரும்பாண், சிறுபாண், விறலியாற்றுப்படை புறம். 64,103, 105, 133,பதி.40, 49, 57, 60, 78, 87) பொருநராற்றுப்படை (பத்துப்பாட்டு), கூத்தராற்றுப்படை (மலைபடுகடாம்) என வரும் கலைஞர்களின் ஆற்றுப்படையுடன், புலவராற்றுப்படை (புறம்.48,49,141) என்ற பெயரிலும் துறை வகுக்கப்பட்டுள்ளன.

ஆற்றுப்படை என்னும் துறை இனக்குழுச் சமூகத்துக் கலைஞர்களுக்கே உரியதாகும். தொல்காப்பியமும் ஆற்றுப்படைக்கு உரியவராகக் கூத்தன், பாணன், பொருநன், விறலி ஆகியோரைக் குறிப்பிடுகின்றாரே தவிர புலவனை அங்கு குறிப்பிடவில்லை. கொடையாளன் இறந்த போது மாறோகத்து நப்பசலையார்,

துடிய பாண பாடுவல் விறலி
என் ஆகுவிர் கொல் அளியிர்; நுமக்கும்
இவண்உறை வாழ்க்கையோ அரிதே (புறம்.280)

என வரும் பாடலில், கொடை வழங்கும் தலைவன் இறந்த போது, துடியனே, பாணனே, விறலியே நீங்கள் என்ன ஆவிர்களோ, வருந்தத் தக்கவர் நீங்கள்; உங்களுக்கு இங்கே வாழும் வாழ்க்கை கடினமானதாம் என்று இரங்கித் தவித்த போதும் புலவரைக் குறிப்பிடவில்லை என்பது கருதத்தக்கது. சங்க இலக்கியத்தில் பாணாற்றுப்படை பாடல் ஒன்றை நோக்கும் பொழுது,

கையது கடன்நிறை யாழே; மெய்யது
புரவலர் இன்மையிற் பசியே; அரையது
வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅர்
ஓம்பி உடுத்த உயவல் பாண (புறம்.69)

என வரும் பாடலில், கையிலே இசை நலம் நிறைந்த யாழ்; உடலிலே உதவுவார் இல்லாமையால் பசி; இடுப்பிலே தைத்தலால் வேறு நூல் புகுந்த வேர்வையால் நனைந்த கிழிந்த ஆடை; அதனைப் பேணி உடுத்த வறிய பாணனே, எழுச்சி இல்லாதவன் உடல்போலப் பெரிதும் பொலிவற்ற பெரிய சுற்றத்தை உடையவனே; நாடெல்லாம் வளைந்து வந்து மெல்லென என்னை வினவுவாய் எனின் கூறுவன். வேந்தரது வலிய யானை புண்பட்டு வருந்தும் கொடி எடுக்கப்பட்ட பாசறையின் குருதிப் பரப்பிலே யானையைக் கொன்று புலால் நாறும் களத்தை ஏற்படுத்திய போரிடும் படையை உடையவன்; அவன் உயர்நிலை மாடங்களையுடைய உறையூரில் உள்ளான். அவன் போரிடுவார் பொருட்டு எடுக்கப்பட்ட வேலை உடையவன் பகைவர் நாடு புகுதலும் உரியவன்; தகுதிமிக்க நெடிய மாலையையும் எரியும் தழல்போலும் நிறத்தையுடைய பொன்னால் செய்யப்பட்ட அணிகலன்களையும் உடையவன்; அக்கிள்ளிவளவனை அடுத்துச் செல்வாய் எனின் அவன் நெடிய வாயிலில் நெடும் பொழுது காத்திருக்க மாட்டாய்; நண்பகற் போதில் அவன் கொடை வழங்கும் நேரத்தில் நின் கண்ணார அவன் கொடைத்திறம் காண்பாய்.

அவனைக் கண்டபின்பு பூவில் புகுந்து பாடும் வண்டு புகுந்து இசைக்காத பொற்றாமரைப் பூவைச் சூடாது இருத்தல் அதனினும் இல்லை; அதனால் அங்குச் செல்வாயாக, என்று பாணனை முன்னிறுத்தி அவன் வறுமையை எடுத்துக் கூறி, தலைவனின் போர்ச் சிறப்பு, நகர்ச் சிறப்பு கொடை வழங்கும் தன்மை ஆகியவற்றைக் கூறி ஆற்றுப்படுத்தப்படுகின்றான்.

பாணர்கள் கொடை வேண்டிய தினம் குறித்து, "இனக்குழுச் சமுதாய எச்சங்கள் அழிந்து பொதுமைப் பண்பு குறைந்து தனியுடைமைப் பண்புகள் மேலோங்கிய நிலையில் சீறூர் மன்னர்களும் தண்ணடை பெற்றுப் படைத்தலைவர்களாய் உயர்ந்த நிலையில், வறுமை நிலைக்கு ஆட்பட்ட பாணர் வேந்தர், குறுநில மன்னர் பலரிடமும் பரிசில் வேண்டிச் சென்றுள்ள நிலையை ஆற்றுப்படை இலக்கியங்கள் காட்டுகின்றன."[24] என்று பெ.மாதையன் கூறுகின்றார்.

புலவர் ஆற்றுப்படை என்னும் துறையில் அமைந்த பாடல்,

கோதை மார்பில் கோதை யானும்
கோதையைப் புணர்ந்தோர் கோதை யானும்
மாக்கழி மலர்ந்த நெய்த லானும்
கள்நா றும்மே கானலம் தொண்டி
அஃதுஎம் ஊரே; அவன்எம் இறைவன்;
அன்னோற் படத்தி ஆயின் நீயும்
எம்மும் உள்ளுமோ முதுவாய் இரவல
அமர்மேம் படூஉம் காலைநின்
புகழ்மேம் படுநனைக் கண்டனம் எனவே (புறம்.48)

என வரும் பாடல், கோக்கோதையுடைய மார்பில் சூடிய மாலை யானும், அக்கோதையைக் கூடிய மகளிர் சூடிய மாலையானும், கருநிறக் கழியிடங்களில் மலர்ந்த நெய்தல் மலர்களாலும் தேன்மணம் பெருகும் கடற்கரைத் தொண்டிமாநகர்; அவ்வூரே எம் ஊர்; அக்கோக்கோதையே எம் தலைவன்; அவனை நோக்கிச் செல்லுவாய் எனின் நீயும் எம்மையும் நினைப்பாயோ? நினைப்பாயாக! பழமையான வாய்மை அமைந்த இரவலனே! நீ போரில் மேம்பட்ட போது உன் புகழை மேம்படுத்திப் பாடுபவனைக் கண்டேம் யாம் எனச் சொல்லி, என வரும் பாடல் புலவராற்றுப்படை எனக் குறிக்கப் பெற்றிருப்பினும், பாடலுள் வரும் முதுவாய் இரவலன் எனும் சொல் பாணனையே குறித்து நிற்கின்றது எனலாம்.

மேலும் இரவலன் எனும் சொல் 'காரென் ஒக்கல் கடுப்பசி இரவல' என்று பாணனைக் குறித்து நிற்பதைக் காணலாம். எனவே பாணனை ஆற்றுப்படுத்திப் பாடியுள்ள மேற்கண்ட பாடல் பாணாற்றுப்படை என்றே கொள்ள இடம் தருகின்றது.

நாடன் என்கோ? ஊரன் என்கோ?
பாடிமிழ் பனிக்கடல் சேர்ப்பன் என்கோ?
யாங்ஙனம் மொழிகோ ஓங்குவாள் கோதையை?
புனவர் தட்டை புடைப்பின் அயலது
இறங்குகதிர் அலமரு கழனியும்
பிறங்குநீர்ச் சேர்ப்பினும் புள்ஒருங்கு எழுமே (புறம்.49)

மலை நிலத்தவன் ஆதலால், நாடன் என்பேனா? வயல் நிலத்தவன் ஆதலால், ஊரன் என்பேனா? ஒலிமிக்க குளிர்ந்த கடலை உடைமையால், சேர்ப்பன் என்பேனா? எப்படிக் கூறுவேன், உயர்ந்த வாளையுடைய கோக்கோதையை! தினைக்காவல் காப்பார் தம் தட்டைப் பறையைத் தட்டினால் நெற்கதிர் சுழலும் வயலிலும், பெருகிய நீருடைய கடற்கரையிலும் உள்ள பறவைகள் எல்லாமும் ஒன்றாக எழும்புமே? எனவரும் பாடல் துறை புலவர் ஆற்றுப்படை; இயல் மொழியும் ஆம் என்று வகுக்கப்பட்டுள்ளது.

இயன்மொழி என்பது, ஒருவர் இயல்பைக் கூறுதலும், அவர் முன்னோர் செய்தியை அவர் மேல் ஏற்றிக் கூறுதலும் ஆகும் என்று வகுக்கப்பட்டுள்ளது. மேற்கண்ட பாடலில் ஆற்றுப்படுத்தும் செய்தி எதுவும் இடம் பெறாமல் கோக்கோதை மார்பனுடைய இயல்புகளைச் சுட்டி உள்ளமையால், இது இயன்மொழி என்னும் துறையில் இடம் பெற்றிருத்தல் வேண்டும்.

பாணன் சூடிய பசும்பொன் தாமரை
மாண்இழை விறலி மாலையொடு விளங்கக்
கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட்டு அசைஇ
ஊரீர் போலச் சுரத்திடை இருந்தனிர்
யாரீ ரோஎன வினவல் ஆனாக்
கார்என் ஒக்கல் கடும்பசி இரவல!
வென்வேல் அண்ணற் காணா ஊங்கே
நின்னினும் புல்லியேம் மன்னே; என்றும்
உடாஅ போரா ஆகுதல் அறிந்தும்

*படாஅம் மஞ்ஞைக்கு ஈத்த எம்கோ*
*கடாஅ யானைக் கலிமான் பேகன்*
*எத்துணை ஆயினும் ஈத்தல் நன்றுஎன*
*மறுமை நோக்கின்றோ அன்றே*
*பிறர், வறுமை நோக்கின்று அவன் கைவண் மையே (புறம்.141)*

பாணன் சூடிய கலப்பில்லாப் பொன்னால் செய்யப்பட்ட தாமரைப்பூ சிறந்த பொன்னரி மாலையுடன் விளங்க, விரைந்த குதிரைகளை அவிழ்த்து விட்டு இளைப்பாறிக் கொண்டு ஊரில் இருப்பவர் போல வழியில் இருப்பவரே, நீவீர் யாரோ என வினவுதல் நீங்காதவனே! வறிய சுற்றத்தையும் கடும்பசியையும் உடைய இரவலனே, வெல்லும் வேலுடைய வேந்தனைக் காணும் முன்னர், உன்னினும் வறியவராகவே இருந்தோம்; இப்பொழுது இவ்வாய்ப்பு பெற்றோம்! எப்பொழுதும் உடுத்துதலோ போர்த்துதலோ செய்யாமை அறிந்தும், போர்வையை மயிலுக்கு அளித்த எம் தலைவன்; மதமிக்க யானையையும் எழுச்சியையுடைய குதிரையையும் உடைய பேகன் எவ்வளவு ஆயினும் ஈவது நன்று என வர இருக்கும் மறுமையை எண்ணாமல் பிறர் வறுமையை நோக்கிக் கொடுக்கும் கொடை என வரும் பாடல் துறை பாணாற்றுப்படை, புலவராற்றுப்படையுமாம் என வகுக்கப்பட்டுள்ளது.

'காரென் ஒக்கல் கடும்பசி இரவல' என்னும் தொடரில், மிகப் பெரிய சுற்றத்தைக் கொண்டவர்கள் பாணர்களே. பாணர்களைச் சங்கப் பாடல்கள் பசித்தவர் என்றே அடையாளப்படுத்தியுள்ளது. இரவலன் என்னும் சொல் பாணனைக் குறிக்கும் என்று முன்னரே அறிந்து கொண்டோம். எனவே மேற்கண்ட பாடல் பாணாற்றுப்படை என்றே கொள்ள வேண்டும் என்பது கருத்து.

சங்க இலக்கியப் பாடல்களுக்கு திணை, துறை வகுக்கப் பெற்றமை குறித்து அம்மன்கிளி முருகதாஸ், "புறத்திணை நூல்களில் திணை, துறைகள் அப்பாடல்களை இயற்றிய காலப்பகுதியின் பின்னரே வகுக்கப்பட்டன"[25] என்று குறிப்பிட்டுள்ளார்.

எனவே சங்க இலக்கியப் பாடல்களில் காணப்படும் புலவராற்றுப்படை என்னும் துறையில் பாடல்கள் அமைக்கப்படவில்லை என்பதும் திணை, துறை வகுத்தோரால் அது புலவராற்றுப்படை எனவும் குறிக்கப் பெற்றிருக்க வேண்டும் எனவும் உய்த்தறிய இடம் உள்ளது.

**கொடை கருதிப் பாடிய பாடல்கள்**

சங்க இலக்கியப் பாடல்களில், புலவர்கள் தம் வறுமையை எடுத்துக் கூறி அரசனிடம் கொடை கருதிப் பாடிய பாடல்களும் இடம் பெற்றுள்ளன. அவ்வாறான பாடல்களைப் பரிசில் கடாநிலை, பரிசில் விடை, பரிசில் துறை என்ற துறைகளாகப் பாகுபடுத்தி உள்ளனர். இத்துறைகள் குறித்து அம்மன்கிளி முருகதாஸ், "இவை முற்றிலும் புலவர் அல்லது பாணர் சார்ந்தவை ஆகும். உண்மையில் இவை ஆட்சியாளரின் கொடை பற்றியனவே"[26] என்று குறிப்பிடுகின்றார். பரிசில் கடாநிலை என்பது யான் பரிசில் பெற்றிலேன் எனத் தனது எண்ணத்தை வெளிப்படுத்திக் கூறுதலாகும். பரிசில் விடை என்பது அரசனை நோக்கிக் கூறும் பாடலாகும். பரிசில் துறை என்பது புரவலனிடம் தாம் நினைத்து வந்த பரிசில் இது எனக் கூறுதலாகும்.

மேலும் கொடை கருதிப் பாடிய துறைகள் குறித்து பெ.மாதையன், "ஒவ்வொரு புறத்துறைக்குப் பின்னாலும் ஒரு சமுதாய மாற்றம் இருப்பதைப் போல் அரசனிடம் பரிசில் பெறுதல் தொடர்பான பரிசில் கடாநிலை, பரிசில்விடை, பரிசிற்றுறை, பரிசினிலை எனும் பரிசிலோடு தொடர்புடைய பலதுறைகளும் சமுதாய மாற்றத்தைக் காட்டுவதோடு புலவர், அரசர் மனநிலைகளையும் உறவுநிலைகளையும் காட்டுவனவாய் உள்ளன"[27] என்று குறிப்பிடுகின்றார்.

சங்க இலக்கியப் பாடல்களில் பரிசில் கடாநிலை துறையில் அமைந்த பாடல்களாக (புறம்.11,101, 136, 158, 159, 160, 164, 169, 196, 197, 198, 199, 209, 210, 211, 266) என்னும் பாடல்களைக் காணமுடிகின்றன.

இழைபெற்ற பாடினிக்குக்
குரல்புணர்சீர்க் கொளைவல் பாண்மகனும்மே
என வாங்கு
ஒள்ளழல் புரிந்த தாமரை
வெள்ளி நாரால் பூப்பெற் றிசினே (புறம்.11)

ஆடல் மகளுக்கு முதல் இடமாகிய குரலில் பொருந்தும் பாடலில் தேர்ந்த பாணனும் விளங்கிய பொன்னால் ஆக்கப்பட்டதும் வெள்ளி நாரால் தொடுக்கப்பட்டதும் ஆகிய தாமரைப் பூவைப் பெற்றனர். யான் அது போல் பெறவில்லை என்று தன் வேட்கையைப் பதிவு செய்கின்றார். ஏழு வள்ளல்களின் தன்மையைக் கூறி அவர்கள் மறைந்த பின்னும் இரந்து வந்தவர் துயரம்

தீர்க்கின்றாய் என்று புறம்.158 ஆம் பாடலில் பரிசில் வேண்டுதலைக் காணமுடிகின்றது.

ஒருநாள் செல்லலம்; இருநாள் செல்லலம்
பலநாள் பயின்று பலரொடு செல்லினும்
தலைநாள் போன்ற விரும்பினள் மாதோ. (புறம்.101)

என வரும் பாடலில், யாம் ஒரு நாள் போகவில்லை; இரு நாள் போகவில்லை; பல நாள்கள் பலரோடு தொடர்ந்து போனாலும் முதல் நாள் போலவே விருப்பம் உடையவன். அழகிய அணிகலம் அணிந்த யானையையும் வலிய தேரையும் உடைய அதியமான், பரிசில் பெறும் காலம் நீண்டாலும் நீளாவிடினும் யானை தன் கொம்புகளிடையே கொண்ட கவளம் வாய்க்குள் போவது போலப் பரிசு பெறுவது உறுதியாம் என்று பரிசில் வேண்டுவதையும் வறுமையுற்ற புலவர்கள் தம் வறுமையைக் கூறி பரிசில் வேண்டும் பாடல்களும் இத்துறையில் இடம் பெற்றுள்ளன.

பசந்த மேனியொடு படரட வருந்தி
மருங்கில் கொண்ட பல்குறு மாக்கள்
பிசைந்துதின வாடிய முலையள் பெரிது அழிந்து
குப்பைக் கீரை கொய்கண் அகைத்த (புறம்.159)

பச்சை உடலொடு துயரம் வாட்ட வருந்தி இடுப்பில் கொண்ட பலசிறு மக்கள் பிசைந்து தின்னத் தளர்ந்த மார்புடையவளாய்ப் பெருந்துயர் அடைந்து, அடுத்தடுத்துப் பறித்தலால் குப்பைக் கீரையின் இளந்தளிரைப் பறித்து உப்பு இடவும் வழியின்றி நீரே உலையாக ஏற்றிக் காய்ச்சி மோரில்லாமல் சோற்றுப் பருக்கையை மறந்து கீரையைத் தின்று அழுக்கேறிக் கிழிந்த உடையினராய் இல்லறவாழ்வைப் பழித்து உண்ணாதவள் ஆகிய என் விரும்பத்தக்க மனையாள்; ஆகிய இருவர் நெஞ்சமும் மகிழ வேண்டும் என்று தம் வறுமையைக் கூறி பரிசில் வேண்டுகிறார்.

“வரிசை அறிதல் எனும் செயலால் புறக்கணிக்கப்பட்ட புலவர்களின் குரல்களாய் இவை உள்ளன. ஊன், துவை, கறிசோறு ஆகியவற்றை உண்டு வருந்தும் செயல் அல்லது வேறு செயலறியாத வேந்தர் நாட்டுப் பாடுநர் கை மெல்லியவாய் உள்ளன (புறம்.14) எனக் கபிலர் காட்டிய நிலைக்கு மாறாய் இப்புலவர்களின் நிலை உள்ளது”[28] என்று பெ.மாதையன் குறிப்பிடுகின்றார். தொடக்க காலத்தில் தம்மைக் கற்பனை பாணராய்க் கருதி கொண்டு தம்

வறுமையைப் பாடிய புலவர்கள் பின்னர் நேரடியாகவே வறுமையை வெளிப்படுத்தினர். அத்தகைய பாடல்களே மேற்சுட்டிய துறைகளாக வகுக்கப்பட்டன.

பரிசில் பெற்றவனாயினும் பெறாதவனாயினும் அரசனைப் பாடித் திரும்பும் பாணன், புலவர் பாடிய பாடல்கள் பரிசில் விடை என்னும் துறையில் அமைத்தனர் (புறம். 104, 152, 162, 165, 397, 399).

வரிசை அறிதலில் தன்னும் தூக்கி
இருங்கடறு வளைஇய குன்றத்து அன்னதோர்
பெருங்களிறு நல்கி யோனே; (புறம். 140)

அகன்று பரந்த பலா மரங்களையுடைய நாஞ்சில் மலைத்தலைவன் மெய்யாகவே மடையன்; செவ்விய நாவையுடைய புலவர்கள், வளையல் அணிந்த கையை உடைய விறலியர் தோட்டத்தில் பறித்த கீரைக்கு இடு பொருளாக நாங்கள் சில அரிசியை வேண்டினோம். அவன் பரிசிலர்க்கு வழங்கும் தகுதி அறிதலால் எம் வறுமையைப் பாராமல் தன் மேம்பாட்டை ஆராய்ந்து இடம் சூழக் கொண்ட மலைபோன்றதொரு யானையை அளித்தான் என்று பரிசில் பெற்றுத் திரும்பும் விறலி கூற்றாகப் பாடல் இடம் பெற்றுள்ளது.

இரவலர் புரவலை நீயும் அல்லை;
புரவலர் இரவலர்க்கு இல்லையும் அல்லர்;
இரவலர் உண்மையும் காண்இனி; இரவலர்க்கு
ஈவோர் உண்மையும் காண் இனி (புறம். 162)

என வரும் பாடல் இரவலர்க்கு ஈந்து காப்பவன் நீ ஒருவனே அல்லை; இரவலரைக் காப்பார் இல்லாமல் போனாரும் இல்லை; இரவலர் உள்ளமையையும் காண்க; இரவலர்க்கு கொடுப்பவர் உள்ளமையும் காண்க. உன் ஊரில் உன் காவல்மரம் அசைய தந்து யான் கட்டியுள்ள உயர்ந்த பெரிய யானை, யான் உனக்குத் தரும் பரிசில். விரைந்த குதிரைகளையுடைய தலைவனே யான் சொல்லுகின்றேன் என்று பரிசில் பெறாத புலவர் அரசனை நோக்கிக் கூறும் பாடல் அமைந்துள்ளது.

புரவலனிடம் பரிசிலர் தாம் நினைத்து வந்த பேறு இது என்று பாடிய பாடல்கள் பரிசில் துறைப் பாடல்களாகக் காணப்படுகின்றன. (புறம். 126, 135, 148, 152, 154, 161, 168, 200- 208, 379) பாணர்களைப் போன்று எமக்கும் பரிசில் வேண்டும் என அரசனைக் கேட்பதாகவும் தம்மை கற்பனை பாணராகக் கருதி கொண்டு பாடல்களைப் புனைந்துள்ளமையையும் காண முடிகின்றது.

அள்ளல் யாமைக் கூன்புறத்து உரிஞ்சும்
நெல்அமல் புரவின் இலங்கை கிழவோன்
வில்லி யாதன் கிணையேம் பெரும,
குறுந்தாள் ஏற்றைக் கொழுங்கண் நல்விளர்
நறுநெய் உருக்கி நாட்சோறு ஈயா (புறம். 379)

என வரும் பாடல் அவன் அடிநிழலில் வாழும் வாழ்வை யானே பெறுவேனாக; என் நாவால் இசைத்துப் பாடும் பாடலை அவனே பெறுவானாக; நெல்லை அறுவடை செய்யும் தொழிலர் தம் அரிவாள் கூர் மழுங்கினால் மேலும் வலுவோடு அரிவதற்குத் தீட்டும்கல் போலச் சேற்றில் வாழும் ஆமையின் வளைந்த முதுகில் தீட்டும் நெல்வயல் நிரம்பிய மாவிலங்கை என்னும் ஊர்க்குத் தலைவனான வில்லியாதன் என்பானின் கிணைப் பறையாளர் யாம்; பெருமானே எங்கள் தலைவனான அவன், குட்டையான கால்களையுடைய பன்றியின் கொழுத்த வெண்ணிற ஊனை, நல்ல நெய்யுருக்குப் பெய்து காலை உணவுடன் கொடுத்து எம் பசியைப் போக்க வல்லவன்; என்று விடியலில் வழக்கமாக வந்து உன்னைப் பாடும் பொருநன் எனக்குச் சொன்னான்; அதனைக் கேட்டது முதல் ஆர்வம் மிக்கு வானம் தழுவிய உயர்ந்த மலை பின்னே நிற்க, குற்றமற்ற தாயிடம் பால்பருக விரும்பும் குழந்தையைப் போலப் பரிசுபெறும் ஆர்வத்தால் நின்னிடம் வந்தேன் என்று நின் பாணனுக்கு வழங்கும் பரிசில் போல எனக்கும் பரிசில் கொடு என்று புலவர் பாடுகின்றார்.

கொடுவரி வழங்கும் கோடுயர் நெடுவரை
அருவிடர்ச் சிறுநெறி ஏறலின் வருந்தித்
தடவரல் கொண்ட தகைமெல் ஒதுக்கின்
வளைக்கை விறலி என்பின்னள் ஆக (புறம். 135)

புலி உலாவும் முடி உயர்ந்த நெடிய மலையின் ஏறுதற்கு அரிய வெடிப்பின் சிறுவழியில் ஏறுதலால் வருந்திப் பெருந்துயர் கொண்டு மெல்லென நடக்கும் வளையல் அணிந்த கையை உடைய விறலி என்பின்னே வருபவள் ஆயினாள். பொன் உருக்குப் போன்ற புரிக்கட்டு அமைந்த நரம்பினையுடைய இசை நிரம்பிய பாடல் இடம் தொறும் கேட்டு எதிர் ஒலி செய்ய படுமலைப் பாலை நிலை பெற்ற பயன்மிக்க சிறிய யாழைத் தளர்ந்த மனத்தொடு ஒரு பக்கம் அணைத்துக் கொண்டு புகழ்தற்கு அமைந்த நின் சிறப்புகளை நினைத்து எம் தந்தை போன்றவனே யான் வந்தேன் என்று ஏணிச்சேரி முடமோசியார் தம்மை பாணனாய்க் கருதி கொண்டு பாடலைப் புனைந்துள்ளார்.

**பாணர் – புலவர் பாடல்களின் செல்நெறிகள்**

சங்க இலக்கியப் பாடல்களில் பாணர்கள் பாடியவை, புலவர்கள் பாடியவை எனத் தனிதனியே பிரித்தறிவது மிகவும் கடினமான செயலாகும். நமக்குக் கிடைத்துள்ள சங்க இலக்கியப் பாடல்களை உற்று நோக்குகையில் பாணர்களின் கையளிப்பு மரபாகவே புலவர்களிடம் வந்து சேர்ந்திருக்க வேண்டும் என்பதைக் கருத இயலுகிறது. பாணர்கள் நேரடியாகப் பாடிய சங்க இலக்கியப் பாடல்கள் இவை என்று சுட்ட முடியாத போதும், பாணர்களின் செயல்கள் இவை இவை என்று புலவர் மரபு சுட்டியதைக் கொண்டும் புலவர்கள் தம்மை கற்பனை பாணராய்க் கருதி பாடிய போதும் பாணர்களின் தன்மைகளை அறிந்து கொள்ள முடிகின்றது. பாணர்களை முன்னோடிகளாகக் கொண்டே புலவர்கள் தங்கள் பாடல்களைப் புனைந்தனர் என்று கருத முடிகின்றது.

பாணர்கள் மரபு வழிப்பட்ட அனுபவத்தால், "புலவர் மரபிற்கு முன்பே பூர்வ இனக்குழு குடிகளின் நாகரிகத்துக்கு ஏற்றதாக, அதன் பாலியல் மற்றும் உணவு சேகரிப்பு, நுகர்வு, சேமிப்பு, தொடர்ச்சி சார்ந்த லௌகீக நடவடிக்கை களைப் பாணர் மரபு என ஒன்று பதிவு செய்திருப்பதை ஒரு கருதுகோளாக, காரணமாக முன் மொழியலாம். அந்தப் பாணர் மரபு, உணவு மற்றும் பாலியல் நுகர்ச்சித் தேடலைத் தனது நாகரிகமாகக் கொண்டியங்கிய இனக்குழு வாழ்வின் நிலைபேற்றுக்கு இன்றியமையாத உலகியல் அறிவினை, அந்த இனக்குழுவின் அறிவுக் களஞ்சியமாகத் தெரிந்து வைத்திருந்தது. இதனை இன்னும் சற்று விவரிக்கலாம். பாலியல் உணர்ச்சி அதன் வெளிப்பாடு, அதன் இலக்கு அதன் நுகர்ச்சி, களிப்பு, அதன் பயன், அதன் எச்சத்தின் தொடர்ச்சி குறித்த குழுப்பாடல்கள், இரசப் பாடல்கள், சடங்கு வகை மந்திரங்கள் ஆகிய வற்றைப் பாணர் மரபு தனது குடியின் தொழிலாகக் கொண்டு வாய்மொழி மரபாகச் சேமித்து வைத்தது. அடுத்ததாகக் குழு வாழ்வின் உயிரியல் தேவையை நிறை வேற்றுதற்கு உரிய இரை/உணவு, பாலியல் போலன்றி தங்கள் உடல்களுக்கு, அதாவது அகத்திற்கு வெளியே, புறத்தில் இறைந்து கிடந்ததை வெகு நுட்பமாக அவதானித்துப் பாணர் மரபு பதிவு செய்தது. உணவு தேடுவது அதன் சரியான இருப்பிடத்தை காலம், பருவம், நிலம் ஆகியவற்றுக்கு ஏற்றவாறு அறிந்து அடையாளப் படுத்துவது உணவாகக் கண்டறியப்பட்ட பறவைகள், விலங்குகள், மீன்கள், பூச்சி புழு இனங்கள், செடி கொடிகள், பூக்கள் காய் கனிகள், தானியங்கள், கிழங்குகள் இவற்றை அடைவதிலுள்ள தடைகள், இவற்றைக்

கண்டறிய உதவும் இயற்கை மற்றும் செயற்கை உத்திகள், கருவிகள் ஆகியவற்றை வாய்மொழி மரபாகப் பாணர் மரபு இனக்குழு வாழ்வின் உலகியல் அறிவாகப் பதிவு செய்தது" [29] என்று ராஜ்கௌதமன் குறிப்பிடுகின்றார்.

தொன்மையான இனக்குழுச் சமூகத்தில் முடியாட்சிக்கு முந்தைய தொல் குடியில், பாணர்கள் மிகுந்த செல்வாக்கு பெற்றவர்களாகவும் வழிபாடு, சடங்கு தொடர்பான நிகழ்ச்சிகளில் பங்கு பெற்றவர்களாகவும் இருந்துள்ளனர். பின்னர் வேந்தர்களின் காலத்தில் புலவர்கள் மதிப்பு மிக்கவர்களாகக் கருதப்பட்ட நிலையில் பாணர்கள் பரிசில்களை வேண்டித் திரியும் வாழ்க்கையை மேற்கொண்டனர்.

வீரத்தைப் பாடும் பாடினிக்கு, முதல் இடமாகிய குரலில் பொருந்தும் பாடலைப் பாணன் பாடினான் (புறம்.11) வாரால் வலித்துக் கட்டி முழங்கும் தண்ணுமையுடைய ஆடல்மகள் பாடல் உச்சத்தில் பாடினால் (புறம்.15) பாடல் துறை இருபத்தொன்றையும் பாணன் முறையாகப் பாடினான் (புறம். 152) எனப் பாணர்களின் பாடும் முறைகளும் மரபு வழிப்பட்ட தன்மையையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

நாட்காலையில் மகிழ்வுடைய நின் திருவோலக்கம் பாணர் சுற்றம் சூழ்ந்திருத்தல் (புறம். 29) போர்க்களத்திற்குச் சென்று அரசன் பற்றிய வீரப்பாடல்களைப் பாடுதல் (புறம். 64), ஊர் மன்றத்தைப் பொருந்திப் பாடல்களைப் பாடுதல் (புறம். 128) குளிர்ந்த பனி பெய்யும் விடியற் பொழுதில் தடாரி ஒலிக்குமாறு பெரிய வாயிலில் நின்று பாடுதல் (புறம். 383) எனப் பாணர்கள் பல்வேறு நிலைகளில் பாடியமையையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

பாண் மரபுப் பாடல்களைக் கருப் பொருளாகக் கொண்டு புலவர்கள் அவற்றிற்கு புதுமெருகேற்றி முடியாட்சிக் காலத்தில் அரசர்களுக்கு வாழ்த்துப் பாடல்களாகவும் ஆலோசனைப் பாடல்களாகவும் பாடினர். புலவர்கள் சொல் தேர்ச்சி, புதுவகை உவமைகளைக் கொண்டு தம் பாடல் திறனை வெளிப் படுத்தினர். பாணர்களின் பாடல்கள் மரபு வழிப்பட்ட தன்மையில் அமைந்தது என்பதை உயத்துணர முடிகின்றது.

போர்க்காலங்களில் அரசனுக்கும் வீரர்களுக்கும் உற்சாக மூட்டும் வீரப்பாடல்களைப் பாடிய பாணர்களின் மரபைப் பின்பற்றிய புலவர்கள், பகைநாட்டை அழித்தலின் சிறப்பு, போர்க்களத்தின் காட்சி போன்றவற்றை புதிய சொற்தேர்ச்சியுடன் பாடினர். உன் வாள்கள், வெற்றிதரப் போரிட்டதால்

குருதிக்கறை பட்டன; அதனால் அவை சிவந்த வானத்தின் அழகு போன்றன. கால்கள் களவெற்றி கொள்வதற்கு அதிர அலைந்ததால் கழலின் தொங்கல்கள் கழன்று கொல்லும் காளையின் கொம்புகள் போன்றன; கேடயங்கள் அம்புகள் தைத்த துறைகளால், தவறாமல் அம்பெய்ய அமைத்த இலக்குகள் போன்றன. குதிரைகள், பகைவரை அழிக்கும் பொழுது வாய்த்ததால் வாயின் இடப்புறமும் வலப்புறமும் கடிவாளம் சிதைக்கச் சிவந்த வாயுடையனவாய், மான் முதலியவற்றின் கழுத்தைக் கவ்விக் குருதி குடித்த புலி போன்றன (புறம். 4) என்று புலவர் அரசனின் போர்ச்சிறப்பை உவமையுடன் வெளிப்படுத்துகின்றார்.

பாணர், புலவர் பாடுபொருள் குறித்து அம்மன்கிளி முருகதாஸ், "புலவர் பாடிய பாடல்களையும் பாணர் பாடிய பாடல்களையும் நோக்கும் போது புலவரின் பாடல்களில் வேந்தர் மன்னருடனான நெருக்கமான உறவைக் காணமுடியும். அதாவது மன்னனை, வேந்தனைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் புலவனுக்கு இருந்திருக்கின்றது. ஆனால் பாணர் கூடுதலாக மன்னனுடைய புகழையே பாடினர் போலுள்ளது"[30] என்று குறிப்பிடுகின்றார்.

அரசர்களின் போர்ச் செயல்களைப் பாடும் புலவர்கள் தம்மை முன்னிறுத்திப் பாடுதலைக் காணமுடிகின்றது. தும்பைப் புலவர் பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே (புறம். 21), பாடுநர் வஞ்சி பாட (புறம். 33), பாடிமிழ் முரசின் இயல்தேர்த் தந்தை, வாடா வஞ்சி பாடினேன் ஆக (புறம். 394) போன்ற புறப்பாடல்களில் வாய்மொழிப் பாடல்களைப் பாடும் பாணர்களைக் காட்டிலும், கற்றறிந்த புலவர்களே அரசனின் போர்ச் செயலைப் பாட முடியும் என்பதைக் குறிக்க வாடா வஞ்சி என்று குறித்தனர்.

புலவர்கள் அரசனுக்கு ஆலோசனையும் கூறினர், வெற்றியுடைய வேந்தனே நீர் இல்லாமல் வாழ முடியாத உடலுக்கு, உணவு கொடுத்தோர் எவரோ அவர் உயிரைக் கொடுத்தவர்; உடல் உணவையே முதலாக உடையது; உணவு என்று சொல்லப்படுவது நிலமும் நீருமே யாம். நீரையும் நிலத்தையும் இணைத்தவர் உடலையும் உயிரையும் தந்தவர். விளைவுக்காக வானத்தைப் பார்க்கும் புன்செய் நிலம் எவ்வளவு விரிந்த பரப்புடையது ஆயினும் அதனைப் பொருந்தி ஆட்சி புரியும் வேந்தன் முயற்சிக்குப் பயன்படாது; ஆதலால் போர் வல்ல செழியனே, என் சொல்லைத் தள்ளிவிடாது உடனே நிலம் வளைந்து செல்லும் பகுதியில் நீர்நிலை பெருகுமாறு அணைகட்டித் தடுத்தவர் தாம் இங்கே விரும்புபவற்றை எல்லாம் தடுத்து நிறுத்திக் கொண்டவர் ஆவர் (புறம். 18) என்று புலவர் அரசனுக்கு நீர் தேக்கும் பயனை எடுத்துரைக்கின்றார்.

வரிவசூலித்தலின் முறை பற்றி புலவர் அரசனுக்கு, விளைந்தநெல்லை அறுத்துச் சமைத்துக் கவளமாக உருட்டித் தந்தால் ஒரு சிறிய நிலத்து விளைவும் யானைக்குப் பலநாள்களுக்குப் பயன்படும்; ஆனால், நூறுபங்கு பெரிய நிலமாக இருப்பினும் யானை தானே புகுந்து வயலில் உண்டால் அதன் வாய்க்குள் செல்வதினும் காலில் மிதிபட்டுக் கெட்டுப்போவது மிகுதியாம். அதுபோல் அறிவுடைய ஆள்வோன் செய்யும் முறையறிந்து வரிகொள்வான் எனின், நாடு கோடிப் பொருளைத் தேடிச் சிறந்து விளங்கும்; ஆள்வோன் முறையறியான் ஆகி நாள் தோறும் தகுதி இல்லா ஆரவாரக் கூட்டத்தொடு இரக்கம் இல்லாமல் எடுக்கும் பொருளை விரும்பினால், யானை தானே உண்ணப் புகுந்த நிலம் போலத் தானும் நுகரப் பெறானாய் உலகமும் கெடும் (புறம். 184) என்று குறிப்பிடுகின்றார்.

பாணர்களின் பாடல்கள் மரபு வழிப்பட்டதாகவும், ஆள்பவர்களைப் போற்றியும் அமைய, புலவர்களின் பாடல்கள் பாணர் பாடல்களை அடியொற்றி அரச வாழ்த்தாகவும் ஆலோசனைப் பாடல்களாகவும் தங்களை முன்னிறுத்தியும் அமைகின்றது.

**புலவர்களின் வாழ்த்துப் பாடல்கள்**

இனக்குழுச் சமூகத்துப் பாணர் மரபுப் பாடல்களைப் பின்பற்றிய புலவர்கள் அரசனை நோக்கி வாழ்த்துப் பாடல்களையும், புகழ்ச்சிப் பாடல்களையும் இயற்றினர். வேந்தர்களின் முடியாட்சி காலத்தில் புலவர்கள் மிகுந்த மதிப்பு பெற்றனர். நிலவுடைமை தோன்றி அரசுகள் நிலைபேறு பெறத் தொடங்கிய சங்க காலத்தைய கவிதைகள் முழுக்க முழுக்க அரசரையே அரசர் சார்ந்த மேட்டுக் குடியினரையே மையப்படுத்தியனவாக உள்ளன.

பாணர்களின் மரபுவழிப்பட்ட பாடல்களை உட்செறிந்த புலவர் மரபு, அரசர்களை வாழ்த்திப் பாடும் போது பாணர்களின் வாழ்த்து முறைகளையே பின்பற்றியுள்ளனர். அரசர்களை வாழ்த்திப் பாடும் புலவர்களின் பாடல்கள் ஒன்று போலவே அமைந்திருப்பது இதனை விளக்கி நிற்கின்றது.

முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே (புறம். 9)

கொண்டல் மாமழை பொழிந்த
நுண்பஃ றுளியினும் வழிய பலவே (புறம். 34)

*மிக்குவரும் இன்நீர்க் காவிரி*
*எக்கர் இட்ட மணலினும் பலவே* (புறம். 43)

*கடுவளி தொகுப்ப ஈண்டிய*
*வடுவாழ் எக்கர் மணலினும் பலவே* (புறம். 55)

*யாண்டும் நாளும் பெருஇ ஈண்டுதிரைப்*
*பெருங்கடல் நீரினும் அக்கடல் மணலினும்* (புறம். 198)

என வரும் வாழ்த்துப் பாடல்கள், அரசர்கள் நீண்ட காலம் வாழவேண்டும் என்பதை ஆற்று மணலுக்கு உவமையாக்கிக் கூறுகின்றனர். புலவர்களின் இத்தகைய ஒன்றுபட்ட உவமைகள் பாணர் மரபினரிடமிருந்தே பெறப் பட்டிருக்க வேண்டும் என்பதை உய்த்துணர முடிகின்றது.

"கலையறிவுக்காக மதிக்கப்பெற்ற பாணர் முதலான கலைஞர்களைப் போலன்றிப் புலவர்கள் புலமை அடிப்படையிலேயே மதிக்கப் பெற்றுள்ளனர். அரசர்களுக்கான பிரச்சாரகர்களாக இருந்து அவர்களின் புகழை நாடெங்கும் பரப்பிய பாவலர்களாகப் புலவர்கள் இருந்துள்ளனர்"[31] என்று புலவர்கள் மதிக்கப் பெற்றமைக்கான காரணத்தை பெ.மாதையன் குறிப்பிடுகின்றார்.

பாணர்களின் மரபைக் கைக்கொண்ட புலவர்கள், அரசர்களை வாழ்த்திப் பாடும் போதும், வீரத்தைப் புகழும் போதும் புதுவகையான உவமைகளைக் கையாண்டனர்.

*அன்னன் ஆகலின் எந்தை உள்அடி*
*முள்ளும் நோவ உறாற்க தில்ல* (புறம். 171)

எம் தந்தை போல்வானாகிய அவன் உள்ளடியில் முள்ளும் நோவுமாறு தைக்கா திருப்பதாக! கொடுப்போர் அரிய இவ்வுலகத்தில் உயிர்வாழ்வோர் வாழ அவன் முயற்சி வாழ்வதாக என்று சிறு துன்பமும் அரசனுக்கு நேராதிருக்க வேண்டுமென்று வாழ்த்துகின்றார்.

*வாஅள் வாய்த்த வடுவாழ் யாக்கையொடு*
*கேள்விக்கு இனியை; கட்டுஇன் னாயே;* (புறம். 167)

நீ போரைக் கண்டால் அப்போரை வென்று பகைவர் படையைத் தடுத்து நிற்கிறாய்; அதனால் வாளால் உண்டாகிய தழும்புபட்ட உடலொடு கேட்பதற்கு இனியன் ஆகவும், காண்பதற்கு இனிமை இல்லாதவனாகவும் உள்ளாய் என்று அரசனின் வீரத்தைப் புகழ்கின்றார்.

மருந்துகொள் மரத்தின் வாள்வடு மயங்கி
வடுவின்று வடிந்த யாக்கையன் (புறம். 180)

மருந்து வெட்டி எடுக்கப்பட்ட மரத்தைப் போல் தழும்பு உடலெல்லாம் கொண்டவனும் பழி இல்லாத புகழாளனுமாகிய அரசனே என்று அரசனின் போர்ச் சிறப்பைப் புகழ்ந்து பாடுகின்றார்.

புலவர்கள் அரசனை வாழ்த்திப் பாடுவதோடு மட்டும் அமையாமல் தமக்கு உரிய மதிப்பளிக்காதவர்களையும், பரிசில் கொடாதவர்களையும் வசை பாடினர். தம்மால் தரமுடிந்த பொருளை முடியும் எனக் கொடுத்தலும், தரமுடியாப் பொருளை முடியாது என மறுத்தலும் ஆகிய இரண்டும் முயற்சிப் பகுதியொடு கூடிய உறவினதாகும். தர முடியாததை முடியும் என்பதும் முடிந்ததை முடியாது என மறுப்பதும் ஆகிய இரண்டும் இரவலரை வாட்டுவது அல்லாமல் புரவலர் புகழைக் குறைக்கும் வழியும் ஆகும். இப்பொழுது நிகழ்ந்ததும் இவ்வகைப்பட்டதாம்; எந்த அளவிலும் எம் முன்னோர் காணாத ஒன்றனை யாம் கண்டோம், அதனால் நோயில்லாமல் நின் மக்கள் வாழ்வாராக (புறம். 196) என்று ஆவூர் மூலங்கிழார் தனக்குப் பரிசில் தராத அரசனை நின் மக்கள் வாழ்வாராக என்று எதிரிடையாக வசைபாடுதலைக் காண முடிகின்றது.

நோவா நோன்வயிற் றிரங்கி
வாயா வன்கனிக்கு உலமரு வோரே (புறம். 207)

என வரும் பாடல், எம் நெஞ்சமே இப்பொழுது எழுவாயாக; யாம் புறப்படுவோம்; விருப்பு மிகுந்து பருகுவது போன்ற ஆர்வம் இல்லாத இடத்து பக்கத்திலே பார்த்தும் பாராதவர் போல உள்ள மகிழ்வு இல்லாதவராய் முகம் திருப்பித் தரும் பரிசிலை முயற்சியற்றோர் விரும்பாமல் இரார். வரும் போதே வருக என்று எதிர் கொண்டு அழைக்க வேண்டும் தகுதி உடையோர்க்கு உலகம் விரிந்தது; பேணுவோரும் பலர்; ஆதலால் வலிமை பொருந்திய அரிமாவைப் போன்று உள்ளத்தின் எழுச்சி குறையாது எவரும் அறிய தம்மை கண்டு இரக்கம் காட்டாதவனிடத்து வருந்தி நின்று கன்றிப் போன கனிக்கு அலைபவர் எவரோ, யாம் அல்லேம் என்று கூறிச் செல்வதைக் காண முடிகின்றது.

பாணர்களைப் போலன்றி புலவர்கள் அரசர்களுடன் மிக உரிமை கொண்டாடினர். தகுந்த மதிப்பும் உரிமையும் தராத போது புலவர்கள் அரசனை வசை பாடினர்.

**தொகுப்புரை**

* சங்க இலக்கியத்தில் பாணர், புலவர் என்ற இருவேறு பாடுநர் குழுக்களைக் காணமுடிகின்றது.

* பாணர்களிடமிருந்து மரபுவழிப்பட்ட பாடும் முறையை உட்செறித்த புலவர் மரபு அவற்றைப் புதிய பாடல்களாய்ப் புனைந்தனர்.

* பாணர்கள் இனக்குழுத் தலைவர்களிடம் நெருக்கம் கொண்டவர் களாகவும் புலவர்கள் வேந்தர்களிடம் நெருக்கம் கொண்டவர்களாகவும் திகழ்ந்தனர்.

* பாணர் மரபை உள்வாங்கிய புலவர் மரபு புதிய பாடல்களைப் புனைந்த போதும் தம்மை கற்பனையாகப் பாணனாகக் கருதி பாடல்களைப் புனைந்துள்ளனர்.

* புலவருக்கு முந்தைய பாணர் மரபு போர்ச்சூழலிலும் பங்கு பெற்று பாடல்களைப் புனைந்துள்ளனர்.

* பாணர்கள் மரபுவழிப்பட்ட தன்மை உடையவர்களாகவும், புலவர்கள் கல்வி, கேள்வியுடன் தொடர்பு உடையவர்களாகவும் உள்ளனர்.

* புலவர்கள் அரசர்களிடம் பாணர்களைக் காட்டிலும் தங்களுக்கே அதிக முக்கியத்துவம் தரவேண்டுமென்பதை வலியுறுத்தினர்.

* புலவராற்றப்படை என வரும் துறையில் அமைந்த புறநானூற்றுப் பாடல்கள் புலவர்களை ஆற்றுப்படுத்தாமல் பாணர்களையே ஆற்றுப்படுத்துகின்றன.

* புலவர்கள் கொடை கருதி பாடிய பாடல்கள் பரிசில்துறை, பரிசில் விடை, பரிசில் கடாநிலை என்னும் துறையில் அமைந்துள்ளன.

* பாணர் பாடல்கள் அரசர், வேந்தர்களின் புகழைப் பாடுவதாகவும், புலவர் பாடல்கள் அரசர்களுக்கு ஆலோசனைக் கூறுதல், அவர்களைக் கட்டுப்படுத்தல் போன்றவைகளாகவும் காணப்படுகின்றன.

* அரசனை வாழ்த்திப் பாடும் புலவர்களின் பாடல்கள், பாணர்களிடமிருந்து பெற்றதாகக் கருத முடிகின்றது.

* பாணர்களைக் காட்டிலும் புலவர்களுக்கு வழங்கப்பட்ட கூடுதல் மதிப்பானது அவர்களின் கல்வி, சொற்தேர்ச்சி போன்றவற்றின் காரணமாக அளிக்கப்பட்டது.

* அகம், புறம் என்று பாகுபடுத்தி பாடும் புலவர்களின் பாடல்களுக்குத் தோற்றுவாயாகத் தொன்மைவாய்ந்த பாணர்களின் பாடல்களே இருந்திருக்க வேண்டும்.

* தங்களைப் புரந்த வள்ளல்கள் இறந்த போது மிகுந்த துயரமுற்று கையறு நிலைப் பாடல்களைப் பாடினர்.

* புலவர்கள் பற்றிய புதுவகை உவமைகளைச் சங்க இலக்கியப் பாடல்கள் வெளிப்படுத்துகின்றன.

**அடிக்குறிப்பு**

1. கார்த்திகேசு சிவத்தம்பி, சங்க இலக்கியம் கவிதையும் கருத்தும், ப.100.
2. ராஜ் கௌதமன், ஆகோள் பூசலும் பெருங்கற்கால நாகரிகமும், ப.7.
3. கே.பழனிவேலு, சங்க இலக்கியம் பாட்டு மரபும் எழுத்து மரபும், ப.82.
4. சேவியர் தனிநாயகம் அடிகள், பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் கல்வி, ப.53.
5. மேலது, ப.44.
6. அ.பாண்டுரங்கன், தொகை இயல், ப.196.
7. ராஜ் கௌதமன், ஆகோள் பூசலும் பெருங்கற்கால நாகரிகமும், ப.50.
8. மேலது, ப.10.
9. சேவியர் தனிநாயகம் அடிகள், பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் கல்வி, ப.44.
10. பெ.மாதையன், தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், ப.6.
11. தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, ப.183.
12. கே.பழனிவேலு, சங்க இலக்கியம் பாட்டு மரபும் எழுத்து மரபும், ப.86.
13. கதிர் மகாதேவன், ஒப்பியல் நோக்கில் சங்ககாலம்,ப.119.
14. பெ.மாதையன், தமிழ்ச் செவ்வியல் படைப்புகள், கவிதையியல், சமுதாயவியல் நோக்கு, ப.114.
15. கே.பழனிவேலு, சங்க இலக்கியம் பாட்டு மரபும் எழுத்து மரபும், ப.54.
16. கார்த்திகேசு சிவத்தம்பி, தமிழின் கவிதையியல், ப.16.
17. பெ.மாதையன், தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், ப.146.
18. க.கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப.162.
19. பெ.மாதையன், சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும், ப.95.
20. சேவியர் தனிநாயகம் அடிகள், பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் கல்வி, ப.53.

21. பெ.மாதையன், சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும், ப.111.

22. பெ.மாதையன், தமிழச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், ப.184.

23. கா.சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம், ப.75.

24. பெ.மாதையன், சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும், ப.99.

25. அம்மன் கிளி முருகதாஸ், சங்கக் கவிதையாக்கம் மரபும் மாற்றமும், ப.146.

26. மேலது, ப.176.

27. பெ.மாதையன், சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும், ப.113.

28. மேலது.ப.115.

29. ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.291.

30. அம்மன் கிளி முருகதாஸ், சங்கக் கவிதையாக்கம் மரபும் மாற்றமும், ப.207.

31. பெ.மாதையன், தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், ப.151.

**இனக்குழுத் தலைவன்**

சங்க இலக்கியப் பாடல்கள் இனக்குழுச் சமூகத்து வாழ்வியலையும், முடியாட்சி காலத்து வேந்தர்களின் வாழ்வியலையும் வெளிப்படுத்தி நிற்கின்றது. இனக்குழுச் சமூகத்து வாழ்வியலில் உடைமைகள் அனைத்தும் பொதுத் துய்ப்பிற்கு உரியதாகவும், வேந்தர்களின் காலத்தில் உடைமைகள் தனியொருவற்கு உரியதாகவும் மாற்றமடைந்தது. இனக்குழு வாழ்க்கை முடிவுற்று வேந்தர்களின் முடியாட்சி காலம் உருவாகிய காலகட்டமாகச் சங்க இலக்கிய காலத்தை அறிந்து கொள்ள முடிகின்றது. பெ.மாதையன், "சங்க காலம் திணைநிலை வாழ்வு நெறிகள் பின்னடைவு பெற்று இனக்குழுச் சமுதாய மனப்பாங்குகள் மாற்றமடைந்து நிலவுடைமைப் பண்புகள் தோன்றிய காலம் என்பதால் அது தனியுடைமைகளின் தோற்றுவாய்க் காலமாக உள்ளது"[1] எனக் கூறிய கருத்து மேற்சுட்டிய கருத்திற்கு அரண் சேர்ப்பதாக உள்ளது.

பல்வேறு வகையான இனக்குழு குடி மரபினர் இருந்தனர் என்பதைச் சங்கப் பாடல்களின் வழி அறிந்து கொள்ள முடிகின்றது. "சங்க காலத்தில் இனக்குழு அமைப்புடைய சிறுகுடிகளுக்குத் தனித்தனி தலைவன் இருந்துள்ளான். இச்சிறு குடிகள் அந்தந்த இனக்குழுத் தலைவர்களின் பெயர்களால் அழைக்கப் பெற்றதைச் சங்க இலக்கியங்கள் நன்றாகவே பதிவு செய்துள்ளன. வாணன் சிறுகுடி, பண்ணன் சிறுகுடி, அருமன் சிறுகுடி எனப் பல்வேறு சிறுகுடிகள் இருந்துள்ளமையை எண்ணற்ற சான்றுகள் மூலம் அறிய முடிகின்றது"[2] என வரும் கருத்தைக் கொண்டு இதனை மேலும் விளங்கிக் கொள்ளலாம்.

இனக்குழுச் சமூகத்தில் வேட்டைக்குத் தலைமையேற்ற வீரர் / வேடர்களே இனக்குழுத் தலைவர் என்னும் தகுதி கொண்டு தன்னை நாடிவரும் இரவலர்களுக்குப் பரிசில்களை வழங்கிப் பாதுகாத்தனர். வல்வில் ஓரி கொல்லிமலை கிழவனாக உருவெடுத்த ஒரு வேட்டைக்குழுத் தலைவன் ஒரு முறை எய்த அம்பால் நான்கு விலங்குகளை வீழ்த்தியதாக, அவனுடைய வில்லாற்றலை மிகைபடப் புகழ்ந்த புலவன், கொலைவள் யார் கொலோ? கொலைவன் மற்று இவன், விலைவன் போலான் வெறுக்கைநன் குடையன் (புறம். 152) வேடர் சமூக வழக்கப்படி விலைக்கு விற்றுப் பிழைப்பகற்காக ஓரி வேட்டையாடவில்லை; வேட்டை அவனுக்கு இப்போது ஒரு விளையாட்டு;

பொழுது போக்கு மலைநாட்டுக்கு உரிய அரசனாகச் செல்வம் மிக்கவனாக உயர்ந்து விட்டான்.

வேட்டைச் சமூக வாழ்வின் வழக்கப்படி வேடனாக நள்ளி காடுகளில் மான் வேட்டையாடினான். காட்டில் எதிர்ப்பட்ட இரவலர் கூட்டத்தின் பசி போக்கியதைப் புலவன் பதிவு செய்துள்ளான்.

*மார்பில் பூண்ட வயங்குகாழ் ஆரம்*
*மடைசெறி முன்கைக் கடகமோடு ஈத்தனன்*
*எந்நா டோ என நாடும் சொல்லான்*
*யாரீரோ வெனப் பேரும் சொல்லான்* (புறம். 150)

குளிர்காலத்துப் பருந்தின் கரிய சிறகு போன்ற கந்தையுடை உடுத்திய யான், பலா மரத்தின் அடியைச் சார்ந்து என்னையும் மறந்து இருந்தேன். வேற்று நாட்டுக்கு வந்த என் பெருவருத்தத்தையும் தளர்ச்சியையும் கண்டு, மான் கூட்டத்தை அழித்து, குருதி தோய்ந்த அழகிய வீரக்கழல் அணிந்த காலையும் ஒளிமிக்க நீலமணி அணிந்த உச்சியையும் உடைய செல்வச் செழுமை வாய்ந்த வில் வேட்டுவன், ஒருவன் வந்தான். அவனைப் பார்த்து வணங்கினேனாய் நான் எழுந்திருந்தலைக் கையால் அசைத்து இருக்கச் செய்தான். வெண்ணெய் போன்ற தசைத் தடியைத் தன்னை விட்டுக் காட்டுவழியில் வழிதவறிப் போன இளையவர் விரைந்து வந்து அடைவதற்கு முன், விரைவாகத் தான் உண்டாக்கிய தீயால் சுட்டுச் சுற்றத்துடன் உண்ணுக என்று தந்தான். அதனை நாங்கள் அமிழ்தெனச் சுவைத்து உண்டு பசிதீர்த்தோம்; மரம் செறிந்த நல்ல மலைச் சாரலில் வீழ்ந்த அருவி நீரைக் குளிரக் குடித்தோம். அவனிடம் விடை கொள்ளத் தொடங்கினோம்; விரைவாக வந்து, பெறுவதற்கு அரிய சிறந்த அணிகலம் வேறு இல்லை. காட்டு நாட்டினேம் என்று சொல்லித் தன் மார்பில் அணிந்திருந்த சிறந்த முத்துமாலையை, மூட்டில் அணிந்த கைக் கடகத்தோடு தந்தான். உன் நாடு எதுவோ என யாம் கேட்க நாடு சொன்னான் அல்லன். நீர் யாரோ எனக் கேட்கப் பேரையும் சொன்னான் அல்லன். இனக்குழுத் தலைவனான நள்ளி எவ்வித எதிர்பார்ப்புமின்றி கலை மரபினரான பாணர்களுக்கு உணவுக் கொடை வழங்கிப் பாதுகாத்தல் பற்றி அறிந்து கொள்ள முடிகின்றது.

இனக்குழுத் தலைவன், சீறூர் மன்னன், வேந்தன் என்னும் சமூகப் படிநிலைகளைச் சங்கப் பாடல்களின் வாயிலாக அறிந்துகொள்ள முடிகின்றது. சங்க காலச் சமூக அமைப்பு பற்றி ராஜ்கௌதமன் "வேடன் - வேந்தன் சமூக

ஏறுவரிசையானது வேடனில் தொடங்கி வீரன், மறவன், நெடுந்தகை, சீறூர் மன்னன், புன்புலத்தலைவன், மலைநாடன், மலைக்கிழவன், வேளிர், வள்ளல் எனப் படிப்படியாக நிலக்கிழமை முறையை நோக்கி வளர்ந்து இறுதியில் நானிலத்தலைமை பூண்டு வெண்குடை நிழற்றிய வேந்தரின் ஒருமை அரசாட்சி முறையாக நிலைபெற்ற சமூக வரலாற்றை ஒருவாறு அனுமானிக்கலாம். இந்த வேடன் - வேந்தன் சமூக ஏறுவரிசையை நேரடியாகவோ, மறைமுகமாகவோ சார்ந்து வாழ்ந்தவர்களே சமுகத்தின் மற்ற பிரிவினர் எனலாம். கைவினைப் பொருளுற்பத்தி, நிலம் சார்ந்த உணவு உற்பத்தி கலை சார்ந்த இன்ப உற்பத்தி, புலம் சார்ந்த அறிவு உற்பத்தி ஆகியவற்றோடு பிணிப்புற்றிருந்த கொல்லர், குயவர், தச்சர், துணி வெளுக்கும் புலைத்தி, நெசவாளர், பருத்திப் பெண்டிர் / பரதவர், உமணர், குறவர், எயினர், ஆயர், உழவர், பாணர், பொருநர், கூத்தர், கிணைவர், கோடியர், வயிரியர், துடியர், கடம்பர், பறையர், மற்றும் புலவர் முதலானவர்களின் உற்பத்தியின் மீது கட்டப்பட்ட வீரம், போர் சார்ந்த வேடன் - வேந்தன் ஏறுவரிசையே அக்காலச் சமூகத்தின் மையமான ஏறு வரிசையாகும்"[3] என்று குறிப்பிடுகின்றார்.

இனக்குழுத் தலைவர்கள் பொருளாதாரமற்றவர்களாகவே இருத்தலைக் காணமுடிகின்றது. தம்மிடம் வரும் பாணர்களுக்குக் கொடை வழங்கச் சீறூர் மன்னர்களிடம் வேண்டியும், ஊரில் உள்ள செல்வந்தர்களிடம் இரந்து நிற்றலையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

அவன்எம் இறைவன்; யாம் அவன் பாணர்;
நெருநை வந்த விருந்திற்கு மற்றுத்தன்
இரும்புடைப் பழவாள் வைத்தனன்; இன்றிக்
கருங்கோட்டுச் சீறியாழ் பணையம்; இது கொண்டு (புறம்.316)

எனவரும் பாடலில், தூறு செடிகளுடன் குப்பை கூட்டப்படாத முற்றத்தில் காலையில் பருகிய கள் மயக்கத்தால் உறங்குபவன் எம் தலைவன்; யாம் அவன் பாணர்; நேற்று அவனிடம் வந்த புதியவரைப் பேணுதற்குத் தன் பெரிய பழமையான வாளை ஈடுவைத்தான்; இன்று கரிய தண்டையுடைய இச்சிறிய யாழ் பணயமாகும். இதனால் யான் சென்றால் ஈவதற்கு ஒன்றும் இல்லாத வனாக இருப்பான் என்று எண்ணாமல் நீயும் உன் பாடினியுடன் சென்றால் விருந்துண்டு வரலாம் என்று இனக்குழுத்தலைவனின் இயல்பு காட்டப் பட்டுள்ளது.

நிரப்பாது கொடுக்கும் செல்வமும் இலனே;
இல்லென மறுக்கும் சிறுமையும் இலனே;
இறையுறு விழுமம் தாங்கி அமரகத்து
இரும்புதலைக் கொண்ட விழுப்புண் நோய்தீர்ந்து
மருந்துகொள் மரத்தின் வாய்வடு மயங்கி
வடுவின்று வடிந்த யாக்கையன் கொடையெதிர்ந்து
ஈர்ந்தை யேனே பாண்பசிப் பகைஞன் (புறம். 180)

நாள்தோறும் தொடர்ந்து கொடுக்கும் செல்வம் உடையவனும் அல்லன்; இல்லை என்று கேட்பவர்க்குத் தானும் இல்லை எனச் சொல்லும் இழிவு உடையவனும் அல்லன்; இறையாண்மைக்கு ஏற்பட்ட துயரத்தைப் போக்க போர்க்களத்தில் சென்று பெற்ற புண்ணின் வலி நீங்கி, வெட்டி எடுக்கப்பட்ட மரத்தைப் போல தழும்பு உடையவனும் பாணர் பசிநோய்க்கு மருந்து ஆனவனும் உள்ளான். உன் வறுமை நீங்க அவனிடம் சென்றால், அவன் தன்னூரில் உள்ள வலிய கையையுடைய கொல்லனிடம் இரந்து வேண்டுவான் என்று செல்வம் இல்லாத நிலையிலும் பாணர்களைப் புரந்தமையைக் காணமுடிகின்றது.

பாணர்கள் என்பார், வேந்தர்களின் முடியாட்சி காலத்திற்கு முற்பட்டவர் களாகவே அறிய முடிகின்றது. எனவே தான் இனக்குழுத் தலைவர்களிடம் மிகுந்த நெருக்கம் கொண்டிருந்தனர். பாணர்கள் சமூக மதிப்பு மிக்க காலத்தில் அரசு என்னும் நிறுவனம் வளர்ச்சி பெற்றிருக்கவில்லை. இனக்குழுத் தலைவர்கள் பொருளாதாரமின்றி காணப்பட்டதால் அவர்கள் இயல்பான மக்களைப் போன்றே அறியப்பட்டனர். இனக்குழு மக்களின் தன்மைக் குறித்து கே.பழனிவேலு, "பேரரசர்கள் இனக்குழு மக்களைப் போன்று நீண்டதொரு மரபு அற்றவர்கள். இவர்கள் பழைய மரபுகளைப் பற்றிக் கவலைப்பாடமல் ஆட்சியமைப்பினை மட்டும் மனத்தில் கொண்டு செயல்பட்டுள்ளனர். பேரரசுகளின் இந்நிலைக்கு மாறாக இனக்குழு மக்கள் மரபுப் பிடிப்புள்ளவர்களாகக் காணப்படுகின்றனர்"[4] என்று குறிப்பிடுகின்றார்.

இடையன் பொத்திய சிறுதீவிளக்கத்துப்
பாணரொடு இருந்த நாணுடை நெடுந்தகை,
வலம்படு நானை வேந்தற்கு
உலந்துழி உலக்கும் நெஞ்சறி துணையே (புறம். 324)

என வரும் பாடலில், ஊகம் புல்லால் வேயப்பட்ட அழகிய குடிகளையுடைய சிறிய ஊர், அவ்வூரில் குமிழம் பழத்தை உண்ணும் வெள்ளாடுகள் பின்வாய் வழியாகத் தள்ளிய வெண்ணிறக் கொட்டை போன்ற பிழுக்கைகள் பரவிய வலிய தூண் உடைய பந்தலின் கீழ் ஆயன் மூட்டிய சிறிய தீயாகிய விளக்கில் பாணர்களுடன் இருந்த நாணுதல் பண்பமைந்த இனக்குழுத்தலைவன் எனவரும் போது, இனக்குழுத் தலைவர்களுடன் பாணர்கள் மிக நெருக்கமாய் இருந்தமையை அறிந்து கொள்ள முடிகின்றது.

பசித்த பாணர் உண்டுகடை தப்பலின் (புறம்.327) எனவரும் பாடல், பிணையல் அடியாமல் இளைஞர் தம் காலால் மிதித்து எடுத்த சிறிது அளவாக விளைந்த வரகினை; வளைத்துக் கொண்ட கடன்காரர்க்குக் கொடுத்தான்; மிஞ்சியதைப் பசித்து வந்த பாணர் உண்ணத் தந்தான்; அதன்மேல் சுற்றத்தார் தம் வறுமை சொல்லி வரத் தன் ஊரில் உள்ள உதவும் இயல்பு இல்லாரிடத்தும் அவர்க்குத்தகக் கூறி வரகினைக் கேட்டுத் தருவான் என்று இனக்குழுத் தலைவனின் இயல்பு காட்டப்பட்டுள்ளது. “இனக்குழுத் தலைவன், அக்குழு மக்களைப் போலச் சாதாரண நிலையிலேயே வாழ்ந்தான். அவனுக்கெனத் தனிச் சலுகைகள் கிடையாது. மக்களோடு சேர்ந்து உழைப்பில் பங்குகொண்டு, உணவு தேடியும், உணவைப் பங்கு வைத்து உண்டும்வாழ்ந்தான்”[5] என்று இனக்குழு மக்களின் தன்மைக் குறித்து கூறிய கருத்து மேற்கண்ட கருத்திற்கு வலுசேர்க்கின்றது.

இனகுழுச் சமூகத் தலைவர்கள் தம்மிடம் பொருட்கள் ஏதுமில்லாத போதும் பாணர்களைப் போற்றுதலைக் கடமையாகக் கொண்டனர். இனக்குழுத் தலைவர்கள் பொருளாதாரமற்ற சூழலில் வேந்துவிடு தொழிலை மேற்கொண்டு அதில் வரும் பொருட்களைத் தம்மிடம் வரும் பாணர்களுக்கு வழங்கிப் போற்றியுள்ளனர். “இனக்குழுச் சமுதாயத்தில் இருந்த குழுவினர் பறையன், துடியன், பாணன், கடம்பன் எனக் கலை மரபினராகவே இருந்துள்ளனர் (புறம்.335) இவர்கள் இனக்குழுத் தலைவனின் ஆதரவிலேயே வாழ்ந்துள்ளனர். புன்செய் வேளாண்மையை அடிப்படை பொருளாதாரமாகக் கொண்டிருந்த இந்த இனக்குழுச் சமுதாயம் பற்றாக்குறை உடைய சமுதாயமாக இருந்துள்ளது. பற்றாக்குறை காலங்களில் இனக்குழுத் தலைவர்களான சீறூர் மன்னர்கள் அதைப் போக்குவதற்கான தொழிலாக, வழியாக வேந்துவிடு தொழிலை மேற்கொண்டுள்ளனர். வேந்துவிடு தொழிலால் கிடைத்த உணவுப்பொருட்களும் பரிசுப் பொருட்களும் சமுதாய பொதுத்துய்ப்பிற்கும் மீள்வழங்குகைக்கும்

உரியனவாக இருந்துள்ளனவேயன்றி தனிஉடைமைகளாக இருக்கவில்லை. பாணர் போன்றோர்க்குத் தானியங்களும் பரிசுப் பொருட்களும் வழங்கப் பட்டிருக்கின்றன"[6] என வரும் கருத்தினைக் கொண்டு இனக்குழுத் தலைவர்களின் தன்மைகளை மேலும் நன்கு விளங்கிக் கொள்ளமுடிகின்றது.

தொல்பழங்குடிச் சமூகத்தினரான பாணர்களை, இனக்குழுத் தலைவர்கள் பொருட்கள் ஏதுமில்லாத போதும் உணவுக் கொடை வழங்கிப் பாதுகாத்தனர். பாணர்களுடன் மிகுந்த நெருக்கம் கொண்டவர்களாகவும் அறியப்பட்டனர்.

**வேந்தர்கள்**

சங்க இலக்கியப் புறப்பாடல்கள் அரசர்களையும் வள்ளல்களையும் புகழ்ந்து பாடுவனவாகவே காணப்படுகின்றன. இனக்குழுத் தலைவன், சீறூர் மன்னன், வேந்தர் என்னும் படிநிலை அமைப்புகளாய்க் காணப்பட்ட பழந்தமிழ்ச் சமூகத்து அமைப்பில் பாணர்களைப் புரத்தல் என்னும் புராதன சடங்குகளை மேற்கொண்ட அரசர்கள், புலவர்களுக்கு முக்கியத்துவம் கொடுத்த அரசர்கள் எனப் பலநிலைகளில் அரசர்களின் தன்மைகளைக் காண முடிகின்றது. பாணர், புலவர் என்பார் அரசர்களின் புகழைப் பரப்பியவர்களாகவே அடையாளம் காணமுடிகின்றது. கா. சிவத்தம்பி, "தமிழ் வீரயுகப் பாடலின் ஒரு அம்சத்தைக் கவனிப்பது இவ்விடத்துப் பயனுள்ளது. பெரும்பாலும் அக்காலத்துக்குரிய எல்லா பாடல்களும் அரசரின் முன்னால் நேரடியாகப் பாடப்பட்டனவாக அல்லது அந்தக்காலப்பிரிவில் யாக்கப்பட்டனவாக உள்ளன"[7] என்று சங்கப் பாடல்களின் தன்மைகளைப் பற்றி குறிப்பிடுகின்றார்.

சங்க இலக்கியப் பாடல்கள் பல்வேறு அதிகாரம், ஆளும் படிநிலைகள் இருந்தமையைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. அதிகாரப் படிநிலைகளைப் பற்றி குறப்பிடும் அன்புச்செல்வன், "சங்க இலக்கியம் காட்டும் 'வேந்தர் முறை' பண்டைத் தமிழகத்தில் வளர்ச்சி பெற்ற அரச உருவாக்கத்தைக் காட்டுகிறது. இந்நிலையில் பண்டைத் தமிழகத்தில் சீறூர் மன்னர், முதுகுடி மன்னர், குறுநில மன்னர், வேந்தர் எனும் நான்கு பெரும் படிநிலைகள் உருவாக்கம் பெற்றுள்ளன. பரவலாக இனங்காணப்படும் இந்நான்கு படிநிலைகளின் அசைவியக்கத்தில் பல நுட்பமான பன்மியப் போக்குகள் உள்ளன"[8] என்று குறிப்பிட்டுள்ளார். இனக்குழுத் தலைவர்கள் பாணர்களைப் போற்றி பாதுகாத்தலைப் போன்றே அரசர்களும் பாணர்களைப் பாதுகாத்தனர். பாணர்களால் புகழப் படுவதே பேறு என்ற நிலை தொடக்க காலத்தில் இருந்தது, பின்னர் கற்றறிந்த

புலவர்களால் புகழப்படுவதே சிறப்பு என்ற நிலை அரசர்களின் காலத்தில் உருவாயிற்று.

சங்க இலக்கியப் பாடல்கள் அரசர், அரசு சார்ந்த இலக்கியங்களாகவே அறியப்படுகின்றன. அகம், புறம் என்ற இருபிரிவுகளிலும் அரசர் குறித்த பெயர்களே மிகுதியும் அறியப்படுகின்றன. குடிச்சிறப்பு, போர்கள், வீரம், கொடை போன்றவை அரசர்களின் தன்மையை வேறுபடுத்தி நிற்கும் காரணிகளாகும். சங்க இலக்கியத்தில் அரசர் பெயர்களாக, "மன்னன் (மன்னர்), மன்னவன், அரசன் (அரசர்), அரசு, இறை, இறைவன், காலவன் (காவலர்), கிழவன், குருசில் (குரிசில்), கொற்றவர், கோ, கோன், கோலன், வேந்தன் (வேந்தர்), வேந்து எனும் இப்பெயர்களுடன் தலைவன் எனும் பொதுப்பெயரும் ஆடு, ஆடவர் எனும் பெயர்களும் மன்னர் குறித்த பெயர்களாகச் சங்க இலக்கியத்தில் ஆளப்பட்டுள்ளன"[9] என்று பெ.மாதையன் குறிப்பிட்டுள்ளார்.

பாணர்களைப் பாதுகாத்தல் என்பது சமூகக் கடமையாகக் கருதப் பட்டதுடன், அரசர்களுக்கு கூடுதல் தகுதியை ஏற்படுத்தியது.

ஆரெயில் அவர்கட் டாகவும் நுமதுஎனப்
பாண்கடன் இறுக்கும் வள்ளியோய்,
பூண்கடன் எந்தைநீ இரவலர் புரவே (புறம். 203)

எனவரும் பாடல், பொழிந்து விட்டோம் என்று மழை பெய்யாது போயினும், முன்னே விளைந்து விட்டோம் என்று நிலம் விளையாது போயினும் உயிர்களுக்கு எல்லாம் வாழ்வு இல்லை. பாணர்களைப் பாதுகாக்கும் வண்மையாளன்; இரவலர்களைப் பாதுகாத்தலே எம் தந்தை போன்றவனே நீ கொள்ளும் கடமையாடும் என்று சோழன் இளஞ்சேட் சென்னிக்குப் பாணர்களைப் பாதுகாத்தல் கடமை என அறிவுறுத்தப்படுகின்றது.

வைகுதொழில் மடியும் மடியா விழவின்
யாணர் நன்னாட்டுள்ளும் பாணர்
பைதல் சுற்றத்துப் பசிப்பகையாகிக்
கோழி யோனே; கோப்பெருஞ் சோழன் (புறம். 212)

உம் தலைவன் யார் என்று வினவினால், எம் தலைவன் கோப்பெருஞ் சோழன். அவன், உழவர்க்கென வடிக்கப்பட்ட முதிர்ந்த கள்ளை ஆமை இறைச்சியுடன் ஆசைதீர உண்டு ஆரால் மீனின் வாட்டலைக் கன்னத்தில் அடக்கித் தாம் கொண்ட தொழிலைச் செய்யாது மகிழ்ந்து மயங்கிக்கிடக்கும்

வளமான சோழநாட்டில் பாணர்களின் வறுமைச் சுற்றித்திற்கு அமைந்த பசியைத் தீர்ப்பவன் ஆகியவன் என்று கோப்பெருஞ் சோழன் பாணர்களின் பசி தீர்த்தவனாகக் காட்டப்படுகின்றான்.

தீஞ்செறிதசும்பு தொலைச்சினன்
பாணுவப்பச் பசிதீர்த்தனன்
மயக்குடைய மொழிவிடுத்தனன்
ஆங்குச், செய்ப எல்லாம் செய்தனன் (புறம். 239)

நம்பி நெடுஞ்செழியனைப் பேரெயில் முறுவலார் பாடிய போது, பாணர்கள் மகிழப் பசிதீர்த்தவன்; பசப்புச் சொற்களைச் சொல்லி அறியாதவன் இவ்வாறு செய்ய வேண்டுவன எல்லாம் செய்தவன் இவன். ஆதலால் இப்புகழாளன் தலையை இட்டுப் புதைப்பினும் புதைக்க; சுட்டு எரிப்பினும் எரிக்க; ஆனபடி ஆகட்டும் என்று பாண்கடன் தீர்த்தல் பற்றிப் பாடுகின்றார்.

யான்வாழும் நாளும் பண்ணன் வாழிய;
பாணர் காண்கிவன் கடும்பினது இடும்பை;
யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந் தன்ன
ஊணொலி அரவம் தானும் கேட்டும் (புறம். 173)

சோழன் குளமுற்றத்துஞ்சிய கிள்ளிவளவன், சிறுகுடிகிழான் பண்ணனைப் புகழ்ந்து பாடிய போது, பாணனை முன்னிறுத்திப் பாடியமை கொண்டு புராதன காலத்தில் பாணர்களுக்கிருந்த சமூகத் தகுதியை எடுத்துக் காட்டுகின்றது.

தொண்டைமான் இளந்திரையன் பாணர்களைப் போற்றியவிதம் குறித்து,

இரும்பேர் ஒக்கலொடு ஒருங்குஉடன் உடீஇ
கொடுவாள் கதுவிய வடுஆழ் நோன்கை
வல்லோன் அட்ட பல்ஊன் கொடுங்குறை
அரிசெத்து உணங்கிய பெருஞ்செந் நெல்லின் (பெரு. 43- 47)

பாணர்களைக் கண்டவுடன் முதலில் அவர்களின் அழுக்கடைந்த பாசிபோன்ற கந்தல் ஆடையை நீக்கி மென்மையான வெண்புகை போன்ற நூலால் செய்யப் பட்ட ஆடையைப் பாணனும், அவனுடைய சுற்றத்தினர் அனைவரும் அணியும்படி கொடுத்தான் என்று கடியலூர் உருத்திரங்கண்ணார் குறிப்பிடும் வரிகள் பாணர்களைப் போற்றிப் பாதுகாத்தல் அரசனின் முக்கியக் கடமையாகக் கருதப்பட்டமையை அறிய துணைசெய்கின்றது.

இனக்குழுச் சமூக அமைப்பில் மிகுந்த முக்கியத்துவம் பெற்ற பாணர்கள் நிலவுடைமைச் சமூகத்து வேந்தர்களின் காலத்தில் சமூக மதிப்பிறக்கம் பெற்றனர். தம் இசைத் திறனாலும் ஆடல் பாடல்களினாலும் அரசர்களுக்கு மகிழ்வூட்டலை ஏற்படுத்தினர். பாணர்களின் மதிப்பிறக்கம் பற்றிக் குறிப்பிடும் கா.சிவத்தம்பி, "பாணர் மரபு தனது செயற்பாட்டைப் பொறுத்த மட்டில் அத்தியாவசியமானதாக இருந்த காலத்தை அல்லாது, தனது முக்கியத்துவத்தை இழந்து கொண்டிருந்த காலத்தினையே நம்மிடையேயுள்ள சங்க இலக்கியம் வெளிப்படுத்துகிறது. பாணர்கள் நகைவர் ஆகக் குறிப்பிடப் பட்டு மகிழ்ச்சியை ஏற்படுத்துபவராக உள்ளனர். இன்னொருமுறையில் சொன்னால் மகிழ்வூட்டலை அளிப்பவர்கள் ஆகின்றனர்"[10] என்று கூறுவது மேற்கண்ட கருத்திற்கு அரண் சேர்ப்பதாக அமைகின்றது. இனக்குழுச் சமுதாயத்தில் பாணர்களைப் போற்றிப் பாதுகாத்தல் என்னும் செயல்பாடு நிலவுடைமைச் சமூகத்து வேந்தர்களின் காலத்தில் கொடை வழங்குதல் என்னும் சடங்காக மாற்றமடைந்தது.

**வேந்தர்களைக் காட்டிலும் இனக்குழுத் தலைவர்களைப் போற்றுதல்**

சங்க இலக்கியப் பாடல்கள் ஒரு குறிப்பிட்ட காலத்தில் பாடப்பட்ட பாடல்கள் அன்று. பல்வேறு காலங்களில் பாடப்பட்ட பாடல்களின் தொகுப்பாகும். இனக்குழுத் தலைவர், சீறூர் மன்னர், வேந்தர்களின் சமூக இயங்கியலைச் சங்கப் பாடல்களின் வழி அறிந்துகொள்ள முடிகின்றது. புராதனச் சமூகத்தில் மிகுத்த முக்கியத்துவம் பெற்ற பாணர்களை இனக்குழுத் தலைவர்கள் போற்றிய முறைக்கும், வேந்தர்கள் போற்றிய முறைக்குமான வேறுபாட்டைக் காணமுடிகின்றது. சங்க காலச் சமூகம் பற்றி பெ.மாதையன், "சங்க காலம் இனக்குழு வாழ்வு முறைகளின் எச்சங்களைத் தாங்கிய சீறூர் மன்னர் சமுதாயத்தை (புறம். 285-335) ஒருபுறமும் நிலவுடைமைப் பண்புகளின் ஆளுமையை உடையதாகிய அரசு எனும் அமைப்பு உருவாகத் தலைப்பட்ட வேந்தர் சமுதாயம் மறுபுறமும் இருக்க இவ்விரண்டுக்கும் இடைப்பட்டதாய் இனக்குழுச் சமுதாய எச்சமாய், பகுத்துண்ட இனக்குழுப் பண்பின் எச்சமாய் இருந்த கொடைப் பண்பையும் நிலவுடைமைச் சமுதாயப் பண்பான நாடும் அரசும் உருவாகத் தலைப்பட்ட நிலவுடைமைப் பண்பும் கொண்டதான இடைநிலைப்பட்ட சமுதாயமான குறுநிலமன்னர் குறிப்பாகக் கடையெழுவள்ளல்கள் வாழ்ந்த சமுதாயமும் நிலவிய காலமாக இருந்துள்ளது"[11] எனக் குறிப்பிடும் கருத்து மேற்சுட்டிய கருத்திற்கு அரண் சேர்ப்பதாக அமைகின்றது.

வேந்தர்கள் கற்றறிந்த புலவர் மரபிற்கே முக்கியத்துவம் கொடுத்து அவர்களைப் போற்றிப் புரந்தனர். இனக்குழுத் தலைவர்கள் புராதனச் சமூகத்து கலை மரபினரான பாணர்களுக்கு முக்கியத்துவம் கொடுத்தனர். பாணர்களுக்கு இனக்குழுத் தலைவர்கள் வரவேற்று கொடை வழங்கிய முறைக்கும், வேந்தர்கள் வரவேற்று கொடை வழங்கிய முறைக்குமான வேறுபாட்டைக் காணமுடிகின்றது. வரிசையறிதல் என்னும் தகுதி கொண்டு பார்ப்பதாலும், வேந்தர்களின் அரண்மனைகளில் நெடுநாள் நின்று பாடுவதாலும் பாணர், புலவர் வேந்தர்களின் பரிசில்களைக் காட்டிலும், செல்வ வளமற்ற இனக்குழுத் தலைவர்கள் வழங்கும் உணவுக் கொடையே சிறந்தது என்று பாடல்களைப் பாடியுள்ளனர்.

பெருஞ்செல்வமுடைய வேந்தர்களாயினும், இரவலர்கள் இனக்குழுத் தலைவர்களையே நாடிச் செல்வர் என்று,

திரைபொரு முந்நீர்க் கரைநணிச் செலினும்
அறியுநர்க் காணின் வேட்கை நீக்கும்
சின்னீர் வினவுவர் மாந்தர் அதுபோல்
அரசர் உழையர் ஆகவும் புரைதபு
வள்ளியோர்ப் படர்குவர் புலவர் அதனால் (புறம். 154)

அலைமோதும் கடற்கரையை அடுத்துச் சென்றாலும் அவ்விடம் அறிந்தாரைக் கண்டால், நீர் வேட்கையை நீக்கும் சிறிதாகிய ஊற்று நீரைக் கேட்பர் மாந்தர்; அதுபோல் அரசரே எனினும் பக்கத்தில் இருப்பாராயினும் குற்றமற்ற வள்ளல் தன்மையுடையரைத் தேடியே புலவர், பாணர் ஆகியோர் செல்வார்கள் என்னும் கருத்து காணப்படுகின்றது.

இனக்குழுத் தலைவர்கள் சமுதாய நலம் பேணுபவர்களாகவும் வரையறை இல்லா கொடை வழங்குபவர்களாகவும், எல்லாருக்குமான பொதுத்துய்ப்பை விரும்புபவர்களாகவும் உள்ளனர். இனக்குழு மக்களின் கொடை பண்பு குறித்து பெ.மாதையன், "இனக்குழுப் பண்பாகிய சமுதாய நலம் பேணும் பண்பே மேலோங்கியிருந்தது. சீறூர்த் தலைவியர் சமுதாய உறவுடையவர்களாக இருந்து வேளாண்மையை மேற்கொண்டு விருந்து பேணுதலை உயிர்ப் பண்பாகக் கொண்டிருந்தனர்"[12] என்று குறிப்பிடுகின்றார்.

வேந்தர்கள் குறிப்பிட்ட புலவர்களுடன் நெருக்கம் கொண்டவர்களாய்க் காணப்பட்டனர். இரவலர்களுக்கு அவர்களைக் காணாமலேயே கொடையை வழங்கினர். எனவே, பல்வேறு பரிசில்களை வழங்கும் வேந்தர்களின்

கொடையைக் காட்டிலும், பொருளாதாரமற்ற இனக்குழுத் தலைவர்களின் உணவுக் கொடையே சிறந்தது என்று போற்றினர். இனக்குழுத் தலைவர்களின் கொடை வரையறையற்றதாக அனைவருக்கும் உரியதாகவும் காணப்பட்டது.

ஒளிறுவாள் மன்னர் ஒண்சுடர் நெடுநகர்
வெளிறுகண் போகப் பன்னாள் திரங்கிப்
பாடிப் பெற்ற பொன்னணி யானை
..........
..........
வருநர்க்கு வரையாது தருவனர் சொரிய
இரும்பனங் குடையின் மிசையும்
பெரும்புலர் வைகறைச் சீர்சாலாதே. (புறம். 177)

என வரும் பாடல், ஒளி செய்யும் வாளையுடைய மன்னரின் விளங்கும் அரண்மனையில், கண் வெளிறி ஒளி குறையுமாறு பலநாள்நின்று பாடிப் பொன்னணிகலம் அணிந்த யானையைப் பரிசெனப் பெறுவர். விருந்து வேண்டி வருவார்க்கு எல்லாம் முள்ளம் பன்றியின் கொழுமையான தசைத் துண்டங் கலந்த சோற்றுத் திரளையை விருந்தாக வருவார்க்கு எல்லாம் உவப்பாகக் கொடுப்பர். அதனைப் பெரிய பனைக் குடையில் கொண்டு உண்பர். இனக்குழுத் தலைவனின் இத்தகைய விடியற்காலைச் சிறப்புக்கு மன்னர்களின் யானைக் கொடை ஒப்பாகாது என்று குறிப்பிடுகின்றனர். மேலும்,

பெயல்பெய் தன்ன செல்வத் தாங்கண்
ஈயா மன்னர் புறங்கடைத் தோன்றிச்
.......
இருங்கோள் ஈராப் பூட்கைக்
கரும்பன் ஊரன் காதன் மகனே (புறம். 381)

என்னும் பாடல், புதர்கள் மிக்க முட்காட்டில் மழை பெய்தால் போன்ற செல்வத்தையுடைய இரவலர்க்கு உதவாத வேந்தர் முன்னர் நின்று தடாரிப் பறையை முழக்கிப் பாடுவதை விட, இனக்குழுத் தலைவர்களைப் பாடுதலே சிறப்புடையதாகும் என்று புறத்திணை நன்னாகனார் குறிப்பிடுகின்றார். இனக்குழுச் சமூகத்தில் பொதுத் துய்ப்பை விரும்பி, கூட்டுண்ணுதலைச் சமூகச் செயல்பாடாய்க் கொண்ட சீறூர் மன்னர், வரையறை இல்லாக் கொடையை மேற்கொண்ட குறுநில மன்னர் ஆகியோரின் சமூக நலம்பேணும் பண்பு

உயர்ந்ததாகக் கருதப்பட்ட நிலையில் அவர்களை ஈயும் மன்னர்களாகவும், வேந்தர்களை ஈயா மன்னர்களாகவும் எதிர்நிலையில் சுட்டினர்.

வேந்தர்கள் சுவையான உணவைப் பிறர்க்குத் தராமல் தாமே உண்ணும் சுயநலத்தினராகவும் (புறம். 127) இனக்குழுத் தலைவர்கள் ஊரோடு பசித்தவர்களாகவும், ஊர்ப் பசியைப் போக்கவே வேந்துவிடு தொழிலை மேற்கொண்டவர்களாகவும் காட்சிப்படுத்தப்பட்டுள்ளனர். பொதுத்துய்ப்பை அடிப்படையாகக் கொண்ட இனக்குழுச் சமூகமே மீள வேண்டப்படுவதாயிற்று. எம்மால் வியக்கப்பட்டோர் வேந்தர் அல்லர்; முன்னைக் கீரையுடன் வரகுச் சோற்றைத் தரும் சீறூர் மன்னராகவே இருந்துள்ளனர். காரணம், அவர்களே உணர்ச்சி மிக்கவர்களாகவும், சமூக நலம் பேணுபவர்களாகவும் இருந்துள்ளனர். பெருஞ்செல்வ பெருக்கத்தால் உணர்ச்சி இல்லாத வேந்தர்களின் உடைமையை / கொடையை நாங்கள் எண்ணுவதில்லை (புறம். 197) என்று வேந்தர்களைக் காட்டிலும் இனக்குழுத் தலைவர்களின் கொடையையே போற்றினர்.

"பேரரசிற்கும் இனக்குழுவிற்கும் நிகழ்ந்த போராட்டத்தில் பல புலவர்கள் இனக்குழுத் தலைவர்களின் சார்பாகச் செயல்பட்டுள்ளனர். இனக்குழுத் தலைவர்களை மட்டுமே புகழ்ந்து பாடல் பாடுபவர்களாகவும், பெரு மன்னரைப் பாடாதவராகவும் இருந்துள்ளனர்"[13] எனக் குறிப்பிடும் கே.பழனிவேலுவின் கருத்து இங்கு நோக்கத்தக்கது.

**நாள்மகிழிருக்கை**

இனக்குழுத் தலைவர்களின் காலம் முதல் வேந்தர்களின் காலம் வரையிலும் நாள்மகிழிருக்கை என்னும் அரசச் சடங்கு தொடர்ந்து இடையறாமல் நடைபெற்று வந்துள்ளது. இனக்குழுத் தலைவன் பலருடன் கூடிப் பேசி மக்களின் குறைதீர்க்கும் செயலே நாள்மகிழிருக்கை என்னும் பெயரால் அழைக்கப் பெற்றது. வேந்தர்களின் காலத்தில் நாளோலக்கம், திருவோலக்கம் என்னும் பெயரால் அழைக்கப்படினும் இச்செயலானது தொடர்ந்து நடைபெற்று வந்துள்ளது. இனக்குழுச் சமுதாய அமைப்பில் நாள்மகிழிருக்கை அவர்களின் தேவையை ஆராய்ந்தது. அங்கு பாணர்கள் பாராட்டப் பெற்றனர். நாள்மகிழிருக்கையின் தன்மைக் குறித்து சுப்பிரமணியன், "இனக்குழுச் சமுதாயத்தில் ஒவ்வொரு நாளும் விடிந்ததும், அன்றைய அவர்கள் தேவையான உணவு பெறுதலைக் குறித்துக் கூடிப்பேசி வழி தேடுதல் இயல்பாகும். ஏனெனில், இவர்கள் உணவுப் பொருள்களை உற்பத்தி செய்து சேமித்து வைப்பவர்களல்லர்"[14] என்று குறிப்பிட்டுள்ளார்.

இனக்குழுச் சமூகத்தில் முக்கியத்துவம் பெற்ற நாள்மகிழிருக்கை என்னும் அமைப்பானது. வேந்தர்களின் முடியாட்சி காலத்திலும் தொடர்தது. "அப்பழக்கம் வேளிர், வேந்தர், செல்வந்தர்களால் பின்னர் மேற்கொள்ளப்பட்டது. ஆகவே, அவர்களும் நாள்மகிழிருக்கையை மேற்கொண்டனர். அப்போது அவர்கள் கலைஞர்களைப் பாராட்டினர்; பரிசில் அளித்தனர்; கலை நிகழ்ச்சிகளைக் கண்டும் கேட்டும் மகிழ்ந்தனர்"[15] என்று சுப்பிரமணியன் இக்கருத்தை மேலும் விளக்குகின்றார். நாளவையில் பாணர்கள் மிகுந்திருந்ததினால் பாணர் நாளவை என்றே அழைத்தனர்.

*பரிசிலர் வெறுக்கை! பாணர் நாளவை!*
*வாள்நுதல் கணவ! மன்னர் ஏறே*
*மைஅற விளங்கிய வடுஆழ் மார்பின்*
*வசைஇல் செல்வ! வான வரம்ப! (பதி.38)*

என வரும் வரிகளில், பரிசில் மாக்களின் வாழ்வாக உள்ளவனே! பாணர் முதலியோர் இருக்கும் திருவோலக்கம் உடையவனே! ஒளிமிக்க நெற்றியினைக் கொண்ட அரசமா தேவிக்குக் கணவனே! வீரர்தம் ஆண் சிங்கமே! குற்றமற்ற வீரத்தழும்புகள் பொருந்திய மார்பினையும் அத்தகைய வீரச் செல்வத்தையும் கொண்டு விளங்குபவனே! வான வரம்பனே! என்று புகழும் வரிகளில் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் 'பாணர் நாளவை' கொண்டிருந்தமையை அறிந்துகொள்ள முடிகின்றது.

"பாணன் அக்கால அரசவையில் முக்கிய பங்கினை வகித்தான். அவன் அரசரின் நாள் மகிழிருக்கையில் அவசியமான உறுப்பினராக விருந்தான்"[16] என்று கா.சிவத்தம்பி பாணர் நாளவையில் இருந்தது பற்றிக் குறிப்பிடுகின்றார்.

இனக்குழுத் தலைவன் பாணர்களுடன் இருந்தது பற்றி,

*வெண்காழ் தாய வண்கால் பந்தர்*
*இடையன் பொத்திய சிறுதீவிளக்கத்துப்*
*பாணரொடு இருந்த நாணுடை நெடுந்தகை (புறம். 324)*

சிறிய குடிசையில் ஆயர்கள் மூட்டிய சிறிய தீயாகிய விளக்கில் பாணர்களுடன் இருந்த நாணுதல் பண்பமைந்த பெரியோன் என்று ஆலந்தூர் கிழார் பாணர்கள் இனக்குழுத்தலைவனுடன் நெருக்கமாய் இருந்தது பற்றிக் குறிப்பிடுகின்றார்.

நாட்கள் உண்டு நாள்மகிழ் மகிழின்
யார்க்கும் எளிதே தேரீ தல்லே
தொலையா நல்லிசை விளங்கு மலையன்
மகிழா தீத்த இழையணி நெடுந்தேர்
பயன்கெழு முள்மீர் மீமிசைப்
பட்ட மாரி உறையினும் பலவே (புறம். 123)

காலையில் மது உண்டு நாளோலக்கத்தில் இருந்து தேர்க்கொடை வழங்குவது எவர்க்கும் எளிதாம். நீங்காப்புகழ் உடைய மலையமான் மது உண்ணாது நாளோலக்கத்தில் மகிழாது கொடுத்த அழகமைந்த நெடிய தேர்கள் பயன் பொருந்திய முள்ளூர் மலைமேல் பொழிந்த மழைத் துளிகளினும் பலவாம் என்று திருமுடிக்காரி நாளோலக்கத்தில் தேர்க்கொடை வழங்கியமை பற்றிக் குறிப்பிடுகின்றார்.

நாளவை என்ற சொல் குறித்து சுப்பிரமணியன், "கலைஞர் அரசரைக் காலையன்றிப் பகல், மாலை, இரவு ஆகிய நேரங்களிலும் கண்டனர்; தம் துயர் நீங்கப்பெற்றனர். ஆயினும் ஞாயிறு எழுங்காலம் நாட்காலமாகும். அந்நேரத்துக்குக் கூடும் இருக்கையையே நாண் மகிழிருக்கை, நாளவை என்றனர்"[17] என்று குறிப்பிடுகின்றார். அத்தகைய நாளவையில் பாணர்கள் மகிழுமாறு பல்வேறு வகையான பரிசில்களை அவர்கள் மகிழும் வண்ணம் அளித்தனர். பாணர்கள் அரசர்கள் முன்பு தங்கள் கலையினை நிகழ்த்தினர்.

பாணர் ஆர்ப்ப, பலகலம் உதவி
நாளவை இருந்த நனைமகிழ் திதியன்
வேளிரொடு பொரீஇய கழிந்த
வாள்வாய் அன்ன வறுஞ்சுரம் இறந்தே (அகம். 331)

என்று மாமூலனார், திதியன் என்பான் பாணர்கள் ஆரவாரிக்கும் படி அவர்களுக்கு அணிகள் பலவும் தந்து நாளோலக்கம் கொண்டிருந்தான் என்று குறிப்பிடுகின்றார்.

பாண்முற் றுகநின் நாள்மகிழ் இருக்கை;
பாண்முற்று ஒழிந்த பின்றை மகளிர்
தோள்முற் றுகநின் சாந்துபுலர் அகலம் (புறம். 29)

என வரும் பாடலில், நாட்காலையில் மகிழ்வுடைய நின் திருவோலக்கம், பாணர் சுற்றம் சூழ்ந்திருப்பதாக, அப்பாணர் சூழ்ந்திருத்தல் நீங்கிய பின்பு, உன்

உரிமை மகளிரின் தோள் உன் சந்தனம் மணக்கும் மார்பைத் தழுவுவதாக என்று குறிப்பிடுகின்றார்.

இரந்து வந்த இரவலர்கள், நன்கு வாழும்படி கொடுத்தும், மேலும் இரப்பவர்களுக்குக் கொடைப்பண்பு மாறாமல் குதிரைகளை மிகுதியாகக் கொடுத்தும் விளங்குகின்றாய். அவ்வாறு கொடுத்துப் பாசறையில் இருக்கும் உனது திருவோலக்க இருப்பினைக் கண்டு செல்பவனாக வந்தேன். (பதி. 76) என்று நாள் மகிழ்ருக்கையில் பாணர்களின் முக்கியத்துவம் குறித்தும் அவர்களுக்கு வழங்கப்பட்ட பரிசில்களையும் காணமுடிகின்றது.

**ஈகை**

ஈகை என்னும் சொல் குறித்தும் அதன் செயல்பாடு குறித்தும் சங்க இலக்கியப் பாடல்கள் மிகப்பரவலாகப் பேசியுள்ளன. ஈகை என்ற அறச்செயல் இணையற்ற இருவருக்கு இடையில் நிகழ்த்தப்படுகின்றது. கொடுப்பவன் உயர்ந்தவன், பெறுபவன் தாழ்ந்தவன்; இத்தகைய பரிமாற்றத்தின் போது அவ்விருவருக்கும் இடையில் நடைபெறும் உயர்வு, தாழ்வு என்ற எதிர்மறை செயல்பாடுகளை அறிந்து கொள்ள முடிகின்றது. தொல்காப்பியர் ஈ, தா, கொடு என்னும் வினைச்சொற்கள் ஒவ்வொன்றும் வெவ்வேறு சமூகத் தகுதிகளைக் குறிப்பிடுவதாகக் கூறுகின்றார்.

அவற்றுள்,

ஈ என் கிளவி இழிந்தோன் கூற்றே
தா என் கிளவி ஒப்போன் கூற்றே
கொடு என் கிளவி உயர்ந்தோன் கூற்றே (தொல். சொல். எச். 49)

என்று கூறும் தொல்காப்பியம், ஈ, தா, கொடு என்ற சொற்களை இழிந்தோன், ஒப்போன், உயர்ந்தோன் என்ற வரிசை முறையில் கூறியுள்ளது. சமூகப் படிநிலைகளின் வெளிப்பாடுகளே இந்த வரிசை முறைகளாகும்.

தொல்பழஞ் சமூகத்தில் கூட்டுண்ணல், பகுத்துண்ணல் என்ற முறைகளே பின்னர் வேந்தர்களின் காலத்தில் ஈகை, கொடை என்னும் பெயரில் வழங்கப் பெற்றது. கொடை என்னும் செயல் ஒரு தன்மை கொண்டதாய் சங்க இலக்கியத்தில் காணப்படவில்லை. கொடைக்கு முந்தைய தன்மை குறித்து ராஜ்கௌதமன், "இனக்குழுக் குடிகளின் வாழ்வில் உள்ளவன் X பெறுபவன் (இரப்பவன்) என்ற உறவுக்கும், அதில் பரிமாறப்படுகிற ஈகைப் பொருளுக்கும்

இடமில்லை என்றே கூறலாம். ஈகைக்கு முந்தைய சமூகக் குழுக்களில் ‘பாதீடு’ என்னும் பகுத்துண்ணல், கூட்டுண்ணல் குழுச்சமூக இணக்கத்தைப் பரிபாலித்து வந்தது”[18] என்று குறிப்பிடுகின்றார். வேந்தர்களின் காலத்தில் கொடை அவர்களின் தரத்தை உயர்த்திக் கொள்ளும் குறியீடாக மாறியது. ஈகை, கொடை பற்றிய கருத்துக்கள் புலவர்களாலும் பாணர்களாலும் ஆள்பவர்களிடம் விதந்து கூறப்பட்டது. ஈகை பற்றிய புகழ்மொழிகளையும், எதிர்மறை கருத்துக்களையும் அரசர்கள் மத்தியில் எடுத்துக் கூறப்பட்டது.

கொடை என்னும் செயலின் தன்மை குறித்து, “கொடையளித்தல் அதைத் தொடர்ந்து நன்றியறிதல் முதலிய உறவுகள் உதிரியாகக் கிடந்த தனி மனிதர்களை இணைத்துச் சமூகமாகக் கூடிவாழும் பண்பை உருவாக்குவதில் மிகப்பெரிய வரலாற்றுப் பாத்திரத்தை வகித்துள்ளன என்பது உண்மை. ஆனால், எதற்கும் பக்க விளைவு உண்டு என்பதற்கு ஏற்ப ஒருவர் மற்றொருவரை எளிதாக அதிகாரம் கொள்வதற்கும், அதிகாரத்திற்கு ஆட்படுபவர் தானே சம்மதித்து அந்த அதிகாரத்தை இயல்பாக ஏற்றுக் கொள்ளுகிற மன அமைப்பை உருவாக்குவதற்கும் இவைகள் பயன்பட்டுள்ளன.”[19] என்று பஞ்சாங்கம் குறிப்பிடுகின்றார்.

இரவலர்கள் வந்து பரிசில்களைப் பெற்றுச் செல்வது ஒரு நாட்டின் / வீட்டின் செல்வ வளத்தைக் குறிப்பதாய் கருதப்பட்டது.

> வாழி ஆதன் வாழி அவினி
> விளைக வயலே வருக இரவலர் (ஐங். 2)

அரசனை வாழ்த்திப்பாடும் பெண்கள் இரவலர் வந்து பொருள் பெற்றுச் செல்லும் செல்வ வளம் உடையதாகட்டும் என்று பாடுகின்றனர். இனக்குழுத் தலைவர்கள் அனைவருக்குமான பொதுத்துய்ப்பை விரும்பிய நிலையில், வேந்தர்கள் அவற்றை வழங்குதல் ஈகை, கொடை என்று போற்றினர்.

“வழங்குபவர் X பெறுபவர் என்ற உறவில் பெறுபவரின் வாய்ச் சொல்லுக்கு (அது புகழுரையோ வசையுரையோ) ஒரு தனியான ஆற்றல் உண்டு என்று புனைகிற போக்கும் புறப்பாடல்களில் காணக்கிடைக்கின்றது”[20] என்று பஞ்சாங்கம் குறிப்பிடும் கருத்தைக்கொண்டு அரசர்கள் புலவர், பாணர்களுக்கு முக்கியத்துவம் தந்தனர் என்று அறிந்துக்கொள்ள முடிக்கின்றது.

> செல்வத்துப் பயனே ஈதல்
> துய்ப்பேம் எனினே தப்புந பலவே (புறம். 189)

என்று செல்வத்தின் பயன் ஈகை என்றும்; ஈயாது தாமே துய்ப்பது தவறு என்றும் அறங்கூறப்பட்டது. ஈகை என்ற அறத்தில் குறைகாட்டாது செயல்பட்டவன் செல்வம், வெள்ளம் போலப் பெருகும் என்று ஈதலின் பயன் (கலி. 27) விதந்து கூறப்பட்டது. ஈயாமை என்பது இழிவான செயலாகச் சங்க இலக்கியத்தில் காணப்பட்டது. பாண்டியன் நெடுஞ்செழியன் வஞ்சினத்தோடு கூறும் மொழியில் இரப்போர்க்கு ஈயா இன்மையான் உறவே (புறம். 72) என்று கூறுவதினின்றும் அறிந்துகொள்ள முடிகின்றது.

கொடை என்னும் அறச்செயல் குறித்து குறிப்பிடும் ராஜ்கௌதமன், "இனக்குழுச் சமூகத்தின் பாதிடு எனும் கூட்டுண்ணும் கலாச்சார விழுமியத்தை அழித்த உடைமைச் சமூகம் அதற்குப் பரிகாரம் / உய்தி / கழுவாய் போல ஈகையைக் கடைபிடித்திருக்கலாம், என எண்ணத் தோன்றுகிறது. உள்ளார்ந்த விதத்தில் வினையாற்றுகின்ற ஈகை எனும் கழுவாய்ச் செயல் சமூக மதிப்பீட்டில் புகழையும், தற்பெருமையையும் 'புகழ்', 'உரை', 'இசை' 'பெரும் பெயர்' சீர்த்தி ஆகிய உயர் மதிப்பீடுகளையும், ஊரில் பெரும் பேரையும் ஏற்படுத்துகின்ற கௌரவம் மிக்க - செல்வாக்குத் தருகின்ற அறச் செயலாகப் போற்றப்பட்டதற்குப் புலவர் மரபே காரணம்"[21] என்று குறிப்பிடும் கருத்து அறியத்தக்கது.

கொடையாளரைத் தேடிப் பறவைகள் போல் சென்றனர். (புறம். 47) பாணர்களுக்கு அரசனால் வழங்கப் பெற்ற பரிசில்கள் / ஈகை பாண்கடன் என்னும் பெயரில் சமூகக் கடமையாகவும், தங்கள் தகுதியை மேலும் உயர்த்திக் கொள்ளயும் நிகழ்த்தப் பெற்றது. புலவர்களுக்கு அவர்களின் வரிசையறிந்து (தகுதி) நேரில் கண்டு பல்வேறு பரிசில்களை வழங்குதல் நெருக்கம் கொள்ளுதலாகவும் இடம் பெற்றது.

**வள்ளல் – இரவலர்**

பாணர்களைப் புரக்கும் வண்மையாளர்கள் வள்ளல்கள் என்றும், அவர்களிடம் பரிசில்களைப் பெறுபவர்கள் இரவலர்கள் என்றும் சங்க இலக்கியப் பாடல்கள் பதிவு செய்துள்ளன. இனக்குழுச் சமூகத்தில் உடைமைகள் அனைத்தும் பொதுவானதாய் இருக்க, வேந்தர்களின் காலத்தில் உடைமைகள் தனிநபருக்கு உரியதாய் மாற்றம் எய்தியது. இல்லாதவர்களுக்கு இருப்பவர்கள் கொடுத்தல் வள்ளல் தன்மை என்று புகழப்பட்டது. வள்ளல், இரவலர் என்னும் சொற்பயன்பாடு குறித்து பஞ்சாங்கம் "சங்க காலச் சமூகம் சொத்துடைமைச் சமூகமாக உருவாகிக் கொண்டிருந்த ஒரு காலகட்ட மாகத்

தெரிகிறது. எனவே தான் உடைமைச் சமூகத்தின் துணைவிளைவுகளான வேலைப்பிரிவினைகள், அதிகாரப் படிநிலை, உயர்வு தாழ்வு, அரசு, தலைமை, ஆளுபவர், ஆளப்படுபவர் எனச் சமூகத்தில் சமத்துவம் இல்லாத பல பிரிவுகள் மும்முரமாக உருவாகத் தொடங்கியுள்ளன என்றும் அறியமுடிகிறது. குறிப்பாக மனிதர்களைப் பிரித்து அவர்களிடையே தலைவர்களை வடிவமைத்து, அதைக் கருத்தாக்கமாகவும் வளர்த்தெடுத்து மனிதர்களின் நுண்ணிய உணர்வுத் தளத்திற்குள் செலுத்தித் தலைவர்களை ஏற்றுக் கொள்வதற்கான சம்மதத்தை உறுதிப்படுத்திக்கொள்ள அதிகாரத் தளத்தில் இருப்பவர்கள் எத்தனையோ வழிமுறைகளைக் கடைப்பிடிக்கிறார்கள். இந்த வழிமுறைகளுள் ஒன்றுதான் வள்ளல் X இரவலர் என்கிற புதிய உறவுமுறையைக் கட்டமைக்கிற முயற்சியாகும். கற்பு மகளிரை வடிவமைக்கப் பரத்தையர் தேவைப்படுவது போல, உடைமையாளர்களை வடிவமைக்க இல்லாதவர்கள் தேவைப்படுவதுபோல, வள்ளல்களை வடிவமைக்க இரவலல்கள் தேவைப்படுகிறார்கள்"[22] என்று குறிப்பிடும் கருத்து எண்ணத் தக்கது.

வள்ளல்கள் இரவலர்களுக்கு வழங்குதலும், பரிசிலர்கள் அதனைப் பெற்றுக் கொள்வதும் சமூக அதிகாரத்தை நிலைநிறுத்துவதற்கான செயல்பாடாக அறிய முடிகின்றது. இரவலர்கள் வள்ளல்களைப் போற்றிப் புகழ்வதும், அவர்கள் பற்றிய புகழுரைகளை மக்கள் மத்தியில் பரப்புதலும், கைமாறாகக் கருதப்பட்டது.

இனக்குழுத் தலைவர்கள், அரசர்களை வள்ளல், வள்ளி என்னும் சொல்லால் குறிப்பிட்டுள்ளனர். நன்னன் சேய் நன்னன் வள்ளல் தன்மையுடையவன் என்னும் பொருளில், தேர் வீசு கவிகை ஓம்பா வள்ளல் (மது. 399) எனவும், சேரமான், குடக்கோசேரல் இரும்பொறையைப் பெருங்குன்றூர்கிழார் புகழும் போது, வள்ளியை ஆதலின் வணங்குவன் இவன் (புறம். 211) என்றும், வள்ளியை என்றலின் காண்கு வந்திசினே (பதி. 54) என்று கடல்பிறர்க் கோட்டிய செங்குட்டுவனைப் பரணரும், ஈத்தொறும் மாவள்ளியன் என நவிலும் நின் (பதி. 61) என ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கை பாடினியாரும் பாடுகின்றனர்.

வலிதுஞ்சு தடக்கை வாய்வாள் குட்டுவன்,
வள்ளியன் ஆதல் வையகம் புகழினும் (புறம். 394)

எனச் சோழிய ஏனாதி திருக்குட்டுவனை மதுரைக் குமரனாரும்,

பணைகொழு வேந்தரை இறந்தும்
இரவலர்க்கு ஈயும் வள்ளியோன் நாடே (புறம். 119)

நிழலே இல்லாத நெடிய வழியில் நிற்கும் ஒரே ஒரு மரத்தைப் போல வளமமைந்த வேந்தர்களைக் காட்டிலும் இரவலர்க்கு வழங்கும் வள்ளல் பாரி என்று கபிலரும்,

கருவி வானம் போல
வரையாது சுரக்கும் வள்ளியோய் நின்னே (புறம். 204)

வானில் திரண்ட முகிலைப் போல் அளவின்றிக் கொடுக்கும் கொடையாளன் ஓரி எனக் கழைதின் யானையாரும் பாடுகின்றனர்.

வள்ளல் எனும் சொல், அரசர்களைக் காட்டிலும் உயர்ந்தவர்கள் என்னும் பொருளில்,

வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி
நெடிய என்னாது சுரம்பல கடந்து
வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்
பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி
ஓம்பா துண்டு கூம்பாது வீசி
வரிசைக்கு வருந்தும்இப் பரிசில் வாழ்க்கை (புறம். 47)

கொடையாளரைத் தேடிப் பறவைகள் போல் சென்று, நெடுவழி என்று எண்ணாமல் பாலைவழி பல கடந்து செல்லும் இரவலர்களைப் பற்றிக் குறிப்பிடுகையில் அரசர்களை விட வள்ளல்களை முதன்மைப் படுத்திக் கூறினர். வேந்தர்களை விட வள்ளல்கள் கொடையால் உயர்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர்.

அரசர் உழையர் ஆகவும் புரைதபு
வள்ளியோர்ப் படர்குவர் புலவர் அதனால்
யானும் பெற்றது ஊதியம் பேறியாது என்னேன் (புறம். 154)

அலைமோதும் கடற்கரையை அடுத்துச் சென்றாலும் அவ்விடம் அறிந்தாரைக் கண்டால், நீர் வேட்கையை நீக்கும் சிறிதாகிய ஊற்று நீரைக் கேட்பர் மாந்தர்; அதுபோல் அரசரே எனினும் பக்கத்தில் இருப்பாராயினும் குற்றமற்ற வள்ளல் தன்மையுடையரைத் தேடியே புலவர் / இரவலர் செல்வர்; அதனால் யானும் பெற்றதனைப் பயன் எனக்கொண்டு பெற்ற பொருள் சிறிது எனினும் இவன் கொடுத்தது என்ன என்று இகழமாட்டேன்; வறுமைப் பட்டேன் ஆதலின், உன்னை நினைத்து வந்தேன்; யான் ஈவாயாக என்று கேட்பதுதான் எனக்கு

அரிது என வரும் பாடலில் அரசருக்கும் வள்ளலுக்குமான வேறுபாட்டைக் காண முடிகின்றது.

வள்ளல் என்னும் சொல் குறித்து பெ.மாதையன், "வள்ளல் சமுதாயத்தின் இயல்பான சொல்லான வள்ளல், வள்ளியன் வள்ளியோன் என்பன உடைமைச் சமுதாயத்தில் இயல்பாக அன்றிக் கவிதையாக்க மரபின் வெளிப்பாடாகவே இடம் பெற்றிருப்பதை இவை வெளிப்படுத்துகின்றன"[23] என்று குறிப்பிடும் கருத்தும் நோக்கதக்கதாகும்.

**இரவலர்**

இரத்தல் என்ற சொல்லின் அடியாகப் பிறந்த சொல்லாக இரவலன் என்ற சொல்லை அறிய முடிகின்றது. சங்க இலக்கியத்தில் இரவலர் என்ற சொல் பொதுவாகப் பாணர்களைக் குறிக்கவும் சில இடங்களில் புலவர்களைக் குறிக்கவும் பயன்பட்டுள்ளது. ஆள்பவர்களின் ஆளுமை, கொடைத் தன்மைகளை வெளிக்காட்டவும், இரப்பவர்களின் வறுமைத் துயரைக் குறிக்கவும் இரவலர் என்ற சொல் பாடல்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

..... இரவல் மாக்கள்
களிறொடு நெடுந்தேர் வேண்டினும் கடவன் (புறம். 313)

என வரும் பாடல், வழிகள் பல பொருந்திய நாட்டையுடைய பெரிய தலைவன், கையில் பொருளென யாதொன்றும் இல்லாதவன், பொருள் விரும்பி அவனைக் காணச் சென்ற இரவலர் யானையொடு பெரிய தேரை விரும்பிக் கேட்டாலும் தரும் கடமையாளன் என்று தலைவனைப் புகழ்கையில் இரவலரைப் பற்றிக் குறிப்பிடுகின்றார்.

புல்லென் அடைமுதல் புறவுசேர்ந் திருந்த
புன்புலச் சீறூர் நெல்விளை யாதே;
வரகும் தினையும் உள்ளவை எல்லாம்
இரவல் மாக்களுக்கு ஈயத் தொலைந்தன; (புறம். 328)

பொலிவற்ற இலைகளையுடைய காடு சார்ந்த புன்செய் நிலச் சிற்றூர் அது; அங்கு நெல்விளையாது; வரகுதினை என விளைந்து வந்தவை எல்லாமும் இரவலர்களுக்குத் தருதலால் இல்லை ஆயின என்று ஈகையை பற்றிக் குறிப்பிடுகையில் இரவலர் என்ற சொல் பாணர்களை உணர்த்தி நின்றது.

இரவல் மாக்கள் உணக்கொளத் தீர்ந்தென (புறம். 333)

என வரும் பாடலில், வரகு, தினை என உள்ளவற்றை எல்லாம் இரவலர் உணவாகக் கொள்ளத் தீர்ந்தமையால், புலவர்களே கதிரிலேயே காய்ந்த விதைத் தினையை உரலில் இட்டு ஆக்கிப் படைப்பாள் தலைவி எனக் கூறும் பாடல் புலவர்களையும் இரவலர்களையும் தனித் தனி நிலையில் சுட்டுவதைக் காணமுடிகின்றது.

இழைகிளர் நெடுந்தேர் இரவலர்க்கு அருகாது (புறம். 359)

அந்துவன் கீரன் இரவலர்களுக்குக் கொடுத்த கொடை பற்றிக் குறிப்பிடுகையில், இரவலர்களுக்கு யானையும், குதிரையும் தேரும் வழங்கினான் என வருகையில் இரவலர்களைப் பாணர்களாகக் கொள்ள இடமுள்ளது.

கார்என் ஒக்கல் கடும்பசி இரவல (புறம். 141)

பாணன் சூடிய கலப்பில்லா பொன்னால் செய்யப்பட்ட தாமரைப்பூ சிறந்த பொன்னரி மாலையுடன் விளங்க, விரைந்த குதிரை பூட்டப்பட்ட தேரில் உள்ள குதிரையை அவிழ்த்து விட்டு இளைப்பாறிக் கொண்டு ஊரில் இருப்பவர் போல வழியில் இருப்பவரே, நீவிர் யாரோ என வினவுதல் நீங்காதவனே; வறிய சுற்றத்தையும் கடும்பசியையும் உடைய இரவலனே என வரும் பாடலில், இவரலர் பாணன் என்றே அறியமுடிகின்றது.

**கொடை**

தொல்பழஞ் சமூகத்து இசைக்குடி மரபினரான பாணர்களை இனக்குழுத் தலைவர்கள், சீறூர் மன்னர்கள், வேந்தர்கள் எனப் பல்வேறு தரப்பினரும் கொடைகளை வழங்கிப் புரந்தனர். சங்க இலக்கியப் புறப்பாடல்கள் கொடைகள் வழங்கியது பற்றி மிகுதியும் பேசுகின்றது. வள்ளல்களைத் தேடித் திரிந்த பாணர்களை வரவேற்று இன்முகத்துடன் பல்வேறு கொடைகள் வழங்கியமை பற்றிய பதிவுகள் காணக் கிடைக்கின்றன. "சங்ககாலம் இனக்குழு வாழ்வு முறைகளின் எச்சங்களைத் தாங்கிய சீறூர்மன்னர் சமுதாயத்தை (புறம். 285-335) ஒரு புறமும் நிலவுடைமைப் பண்புகளின் ஆளுமையை உடையதாகிய அரசு எனும் அமைப்பு உருவாகத் தலைப்பட்ட வேந்தர் சமுதாயம் மறுபுறமும் இருக்க இவ்விரண்டுக்கும் இடைப்பட்டதாய் இனக்குழுச் சமுதாய எச்சமாய், பகுத்துண்ட இனக்குழுப் பண்பின் எச்சமாய் இருந்த கொடைப் பண்பையும் நிலவுடைமைச் சமுதாய பண்பான நாடும் அரசும் உருவாகத் தலைப்பட்ட நிலவுடைமைப் பண்பும் கொண்டதான இடைநிலைப்பட்ட சமுதாயமான

குறுநிலமன்னர் குறிப்பாகக் கடையெழுவள்ளல்கள் வாழ்ந்த சமுதாயமும் நிலவிய காலமாக இருந்துள்ளது."[24] கொடை வழங்குதல் என்பது அரசர்களின் தகுதியை உயர்த்திக் காட்டவும், 'பாண்கடன்' என்பது சமூகக் கடமையாகவும் கருதப் பட்டமையால் பாணர்களுக்குப் பல்வேறு கொடைகள் வழங்கப்பட்டன.

மேலும், பாணர்கள் தங்கள் வறுமையை எடுத்துக் கூறி அரசர்களிடம் பரிசில்கள் வழங்குமாறு வேண்டுகின்றனர். பாணர்களின் இசைத் திறனுக்கு ஏற்பவும் அரசர்களின் தகுதிக்கு ஏற்பவும் கொடைத்தன்மை மாறுபடுகின்றது. கொடைகளைப் பெற்ற பாணர்கள் அரசர்கள் பற்றிய புகழுரைகளை மக்கள் மத்தியில் பரப்புகின்றனர். இதுவே சங்க இலக்கியப் புறப்பாடல்களின் உத்தியாக அறியமுடிகின்றது.

அக, புற இலக்கியங்களின் தன்மைக் குறித்து ராஜ்கௌதமன், "அகத்திணை இலக்கியத்தில் பரிசில், பொருள், உணவு கேட்டுப் பாடும் பாடல்கள் இடம் பெறவில்லை. அவை புற இலக்கியத்தில் புதிதாக உருவாக்கப்பட்ட பாடாண் திணையைச் சேர்ந்தவையாகக் காணப்படுகின்றன. புறத்திணைப் பாடல்கள் புரவலர்களான ஆட்சியாளர்களின் பெயர்களையும் புகழையும் பேசின; இதே ஆட்சியாளர்களைப் புலவர் மரபானது அகத்திணைப் பாடல்களில் பெயரைச் சுட்டாமல் அவர்கள் ஆண்ட நிலப்பரப்பு சார்ந்து நாடன், வெற்பன், சேர்ப்பன், ஊரன் என்று சுட்டும் மரபை, உத்தியை உருவாக்கிக் கொண்டது"[25] என்று குறிப்பிடுவது அறியத்தக்கது.

இனக்குழுச் சமூகத்தில் முக்கியத்துவம் பெற்ற பாணர்கள் சடங்குகளை நிகழ்த்திய போது இசையுடன் ஆடிப்பாடிக் கொண்டாடினர். அவர்களுடன் இனக்குழுத் தலைவர்களும் தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்த சேர்ந்து நடனமாடினர். பின்னர் இவற்றின் படிநிலை வளர்ச்சியாகவே வேந்தர்களின் முன்பு பாணர்கள் தங்கள் கலையை நிகழ்த்துக் கலையாக நிகழ்த்திக் காட்டினர். இனக்குழுத் தலைவர், பாணர் ஆகியோரின் கலைத்தன்மை குறித்து சுப்பிரமணியன், "இனக்குழுச் சமுதாயத்தில் தலைவன் கலைஞர்களுடைய ஆட்டங்களில் தானும் கலந்து கொண்டான். முன்தேர்க்குரவை போன்ற வெற்றிச் சிறப்பில் கலந்து ஆடி மகிழ்ந்தான். ஏனெனில் அவன் இன்னும் குழுவின் உறுப்பாகவே இருந்து பங்கு கொண்டான். அவன் மக்களின் கூட்டமைப்பிலிருந்து இன்னும் விலகிவிடவில்லை. ஆனால் உயர்குடியாட்சி முன்னேறி நிலைபெறும் போது, அரசனும் இளவரசனும் மக்களும் கண்டு

மகிழக்கலைஞர் மட்டும் ஆடிப்பாடும் நிலை தோன்றிய"[26] என்று குறிப்பிடும் கருத்து மேற்கண்ட கருத்திற்கு அரண் சேர்கின்றது.

இனக்குழுத் தலைவர், சீறூர் மன்னர், வேந்தர் என்ற படிநிலை அமைப்பைக் கொண்ட சங்க காலத்தில், அவரவர்களின் தன்மை, சூழல், பொருளாதாரம் ஆகியவற்றுக்கேற்ப பல்வேறு கொடைகளை வழங்கினர். பாணர்களைப் போற்றிய முறை என்பது விருந்தோம்பல், கொடை என்ற இருவேறு நிலைகளில் காணமுடிகின்றது.

**உணவு**

பாணர்களுக்கு வழங்கப் பெற்ற கொடைகளில் உணவுக் கொடையே மிக முக்கியமானதாகவும் பழமையானதாகவும் கருதப்படுகின்றது. இனக்குழுச் சமூகத்தில் இருந்த அனைவருக்குமான பொதுத்துய்ப்பை உணவுக் கொடையாக அறிய முடிகின்றது. இசைக்குடி மரபினரான பாணர்களின் பெரிய சுற்றத்தின் பசியைப் போக்க பல்வேறு உணவு வகைகள் பரிசில்களாக வழங்கப் பெற்றமையை அறிந்துகொள்ள முடிகின்றது.

புலராப் பச்சிலை இடைஇடுபு தொடுத்த
மலரா மாலைப் பந்துகண் டன்ன
ஊன்சோற் றமலை பாண்கடும்பு அருந்தும் (புறம். 33)

வாடாத பசுமையான இலையை இடை இடையே இட்டுக் கட்டப்பட்ட மலரா மொக்கினையுடைய பூப்பந்தைக் கண்டாற் போன்ற தசையோடு கூடிய சோற்றுருண்டையைப் பாணர் சுற்றத்தார்க்குக் கொடுக்கும் பெருமிதம் வாய்ந்தவன் என்று சோழன் நலங்கிள்ளியின் உணவுக் கொடை குறித்தும்,

பால்பெய் புன்கம் தேனொடு மயக்கிக்
குறுமுயல் கொழுஞ்சூடு கிழித்த ஒக்கலொடு
இத்தி நீடிய அகன்தலை மன்றத்துக்
கரப்பில் உள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி
அமலைக் கொழுஞ்சோறு ஆர்த்த பாணர்க்கு (புறம். 34)

என வரும் பாடல், காலை உணவு வேளையிலும் மாலை உணவு வேளையிலும் அரிசியைப் பால் விட்டு ஆக்கிய சோற்றைத் தேனொடு கலந்து உண்டு இளமையான கொழுத்த முயலின் இறைச்சியைச் சுற்றத்தாருடன் தின்று பெரிய இத்தி மரம் விளங்கும் அகன்ற பொதுவிடத்தில் கள்ளமில்லாத மனத்தொடு

விரும்புவன எல்லாம் பேசித் திரளான பேருணவை உண்டு பாணர்க்கு நீங்காச் செல்வம் அனைத்தும் தந்தவன் கிள்ளிவளவன் என்று உணவுக் கொடை புகழப்படுகின்றது.

காட்டு நாட்டினான நள்ளி வேட்டையாடி எதிர்ப்பட்ட பாணர்களுக்கு உணவு வழங்கிய நிகழ்ச்சி பற்றி வன்பரணர், குருதி தோய்ந்த அழகிய வீரக்கழல் அணிந்த காலையும் ஒளிமிக்க நீலமணி அணிந்த உச்சியையும் உடைய செல்வச் செழுமை வாய்ந்த வில் வேட்டுவன் ஒருவன் வந்தான். அவனைப் பார்த்து வணங்கினேனாய் நான் எழுந்திருத்தலைக் கையால் அசைத்து இருக்கச் செய்தான். வெண்ணெய் போன்ற தசைத் தடியைத் தன்னை விட்டுக் காட்டு வழியில் வழிதவறிப் போன இளையவர் விரைந்து வந்து அடைவதற்கு முன், விரைவாகத் தானுண்டாக்கிய தீயால் சுட்டுச் சுற்றத்துடன் உண்ணுக என்று (புறம். 150) ஊர் பேர் கூறாமல் நள்ளி கொடுத்த உணவுக் கொடை பற்றி அறிந்து கொள்ள முடிகின்றது.

> *புறவும் இதலும் அறவும் உண்கெனப்*
> *பெய்தற்கு எல்லின்று பொழுதே; அதனால்,*
> *முயல்சுட்ட வாயினும் தருகுவேம் புகுதந்து*
> *ஈங்கிருந் தீமோ முதுவாய்ப் பாண (புறம். 319)*

என வரும் பாடலில், பாணனே புறாக்களும் இதல் என்னும் பறவைகளும் முழுவதாகத் தின்க என்று தெளித்து அவற்றைப் பிடித்துச் சமைப்பதற்குப் பொழுது மறைந்து இரவு ஆயிற்று; அதனால் முயலைச் சுட்டகறியை யாவது உண்ணத்தருவோம்; எங்கள் மனைக்கு வந்து இருப்பாயாக என்று சீறூர் மன்னனின் இல்ல கிழத்தி பாணர்களுக்கு வழங்கிய உணவுக் கொடையை அறிந்து கொள்ள முடிகின்றது. மேலும், தினை அரிசியைக் காட்டுக் கோழியுடன் காடைப் பறவையும் கவர்ந்து உண்டதால் பிடிபிட்டன; அவற்றைத் துண்டு துண்டாக்கிச் சந்தன விறகுத்தீயில் ஆரல்மீன் மணத்துடன் வேகச் செய்த உணவை பாணர் சுற்றத்தார்க்கு வழங்கியமையை (புறம். 320) அறிந்து கொள்ள முடிகின்றது.

இல்லக் கிழத்தியும், கிழவனும் பாணர்களுக்கு உணவும் பரிசில்களும் வழங்கிப் புரந்தனர். இளைய சிறுவர்கள் நெடுந்தொலைவு செல்லாமல் மடைப்பகுதியில் பிடித்த குட்டையான காலையுடைய உடும்பின் தசையை இட்டுச் சமைக்கப்பட்ட தயிரொடு கூடிய கூழையும் புதிதாக வந்த நல்ல உணவுகளையும் பாணர்க்கும் மற்ற விருந்தினர்க்கும் கொடுத்து உண்ணச்

செய்யும் விருப்புடையவள்; என்று இல்லக் கிழத்தி வழங்கும் உணவு கொடை பற்றிக் காணமுடிகின்றது (புறம். 326).

........ பாண, நன்றும்
வள்ளத் திடும்பால் உள்ளுறை தொடரியொடு
களவுப் புளியன்ன விளைகள்
......... வாடூன் கொழுங்குறை (புறம். 328)

பாணனே, வள்ளத்தில் விட்டு வைத்தபாலில் உறையிட அமைந்த தயிரைத் தொடரிப்பழம், களாப்பழம் ஆகியவற்றோடு கலந்து புளிப்பேறிய கள்ளும், வாட்டப்பட்ட ஊன் துண்டும், அறுக்கப்பட்ட நெல்லின் அரிசியொடு நெய் கலந்து ஆக்கித் துடுப்பால் துழாவப்பட்ட சுவைமிக்க சோற்றொடும் உண்டு இனிதாக இருப்பாய் என்று இனக்குழுத் தலைவனின் உணவுக் கொடையை அறிந்து கொள்ள முடிகின்றது.

வேட்டச் சிறாஅர் சேட்புலம் படராது
படுமடைக் கொண்ட குறுந்தாள் உடும்பின்
இழுக்கு நிணம் பெயத் தயிர்க்கண் விதவை
யாணர் நல்லவை பாணரொ டொராங்கு (புறம். 320)

எனப் பாணர்களுக்குப் பல்வேறு வகையான உணவுக் கொடைகள் வழங்கியமையைச் சான்றுகளின் வழி அறிந்துகொள்ள முடிகின்றது.

**பொற்றாமரை**

வேந்தர்கள் தாங்கள் வழங்கும் கொடையின் தரத்தை உயர்த்திக் காட்ட பொன்னால் ஆகிய மலர்களைப் பாணர்களுக்குப் பரிசில்களாக வழங்கி உள்ளனர்.

இழைபெற்ற பாடினிக்குக்
குரல்புணர்சீர்க் கொளைவல் பாண்மகனும்மே
எனவாங்கு
ஒள்ளழல் புரிந்த தாமரை
வெள்ளி நாரால் பூப்பெற் றிசினே (புறம். 11)

என வரும் பாடல், அரசனின் வீரத்தைப் பாடிய ஆடல் மகள், அழகிய சிறந்த பொன்னால் செய்யப்பட்ட அணிகலங்களைப் பெற்றாள். அவ்வாடல் மகளுக்கு முதல் இடமாகிய குரலில் பொருந்தும் பாடலில் தேர்ந்த பாணனும்

விளங்கிய பொன்னால் ஆக்கப்பட்டதும் வெள்ளி நாரால் தொடுக்கப்பட்டதும் ஆகிய தாமரைப் பூவைப் பெற்றான் என்று குறிப்பிடுகையில் பாணனுக்கு பொற்றாமரை கொடையாக வழங்கப் பெற்றதை அறிந்து கொள்ள முடிகின்றது.

அழல்புரிந்த அடர்தாமரை
ஐது அடர்ந்த நூல்பெய்து
புனைவினைப் பொலிந்த பொலம் நறும் தெரியல்
பாறுமயிர் இருந்தலை பொலியச் சூடி (புறம். 29)

தீயால் வெதுப்பித் தகடாகச் செய்த தாமரைப் பூவுடனே, நுண்ணிதாகத் தட்டிக் கம்பியாகச் செய்த நூலில் கோத்து அணிகலத் தொழிலால் விளங்கும் பொன்மாலையைத் தலை பொலிவுறச் சூடிப் பாணர் சுற்றம் இருந்தனர் என வரும் பாடலில், அரசன் கொடையாக வழங்கிய பொற்றாமரை மலரைச் சூடியிருந்தனர் என்று அறிந்துகொள்ள முடிகின்றது. மேலும், பாணனே! சோழன் குளமுற்றத் துஞ்சிய கிள்ளி வளவனைப் பார்த்த பின்பு பூவில் புகுந்து பாடும் வண்டு புகுந்து இசைக்காத பொற்றாமரைப் பூவைச் சூடாது இருத்தல் இல்லை (புறம். 69) எனக் குறிப்பிடுகையில் பாணர்களுக்குப் பொற்றாமரை மலரை அரசன் கொடையாக வழங்கினான் என்று அறியமுடிகின்றது.

புரிமாலையர் பாடினிக்குப்
பொலம் தாமரைப் பூம் பாணரொடு
கலந்தளைஇய நீள் இருக்கையால் (புறம். 361)

பகைவரை அழித்து தன் அடியைச் சேர்ந்தவர்க்கு விரும்பித் தந்தவன்; பொன் வடமாலை அணியும் பாடினியர்க்கும், பொற்றாமரைப் பூப்பெறும் பாணர்க்கும் கூடியிருந்து மகிழும் நீண்ட கொடை இருப்பினன் என வரும் பாடலும்,

ஒன்னார் யானை ஓடைப்பொன் கொண்டு
பாணர் சென்னி பொலியத் தைஇ
வாடாத் தாமரை சூட்டிய விழுச்சீர் (புறம். 126)

பகைவரின் யானையின் நெற்றிப் பட்டத்துப் பொன்னைக் கொண்டு பாணர் தலை பொலியச் செய்து வாடா தாமரை மலரைச் சூட்டிய சிறப்பும் புறங்காட்டா கொள்கையும் கொண்டவனே எனக் குறிப்பிடும் பாடலில் பகைவரை வென்று கொண்டு வந்த பொன்னால் செய்த தாமரை மலர்களைப் பாணர்களுக்கு வழங்கியமையை அறிந்துகொள்ள முடிகின்றது.

பொற்குவளை மலர்,

> பனிநீர்ப்பூவா மணிமிடை குவளை
> வால்நார்த் தொடுத்த கண்ணியும் கலனும்
> யானை இனத்தொடு பெற்றனர் நீங்கிப்
> பசியார் ஆகன் மாறுகொல் விசிபிணிக்
> கூடுகொள் இன்னியம் கறங்க
> ஆடலும் ஒல்லார்தம் பாடலும் மறந்தே (புறம். 153)

நீரில் பூவாததும் மணி கலந்ததும் ஆகிய குவளைப் பூவை, வெள்ளி நாரால் தொடுத்த மாலையையும் அணிகலன்களையும் யானைக் கூட்டத்தொடும் பாணர்கள் பெற்றனர். அவ்விடம் நீங்கிப் பசியாத வளமையர் ஆயினர். அதனால்தான் இறுக்கிக் கட்டப்பட்ட இனிய இசைக்கருவிகள் ஒலிக்க ஆடலும் இல்லாமல் பாடலும் மறந்தனர் போலும் என வரும் பாடலில் பாணர்களுக்குப் பொற்குவளை மலர் பரிசிலாக வழங்கப் பெற்றமையை அறிந்துகொள்ள முடிகின்றது.

**கள்**

தொல்குடிச் சமூகத்து மக்களான பாணர்களுக்கு இனக்குழு மக்கள் வழங்கிய விருந்தோம்பலிலும், வேந்தர்கள் வழங்கிய கொடையிலும் கள் மிக முக்கிய இடத்தினைப் பெற்றது. புரவலர்கள் வழங்கிய கள்ளினை உண்டு பாணர்கள் மிகுந்த களிப்புற்றிருந்தனர். அரசன் பாணர்களுக்கு வழங்கிய கொடை குறித்து சேவியர் தனிநாயகம், "அழுக்குப் படிந்த ஆடைகளுடனும் பசியால் வாடிவதங்கி ஒட்டி உலர்ந்த உடலுடனும் மன்னனின் / குறுநில மன்னர்களின் அரசவைகளை அடைகின்றனர். கேட்போர் மனம் மகிழ சிறந்த கலையின்பம் அளிக்கின்றனர். அரசன் அறுசுவை உணவும் புலவும் கள்ளும் அளவின்றி அளிக்கின்றான். வயிறார உணவும் கள்ளும் உண்டு அவர்களின் வாழ்வாதாரமான கலையையும் கூட மறந்து போகின்றனர். மன்னர்களிட மிருந்தும் குறுநில மன்னர்களிடமிருந்தும் மரபான பரிசுகளையே அவர்கள் பெறுகின்றனர்"[27] என்று குறிப்பிடுகின்றார்.

> ஒருசார் அருவி ஆர்ப்ப, ஒருசார்
> பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்
> வாக்க உக்க தேக்கள் தேறல்
> கல்லலைத்து ஒழுகும் மன்னே; (புறம். 115)

ஒரு பக்கத்தில் அருவி முழங்கி வழியும்; மற்றொரு பக்கத்தில் பாணரின் கலம் நிறைய பெய்தலால் ஒழுகும் மது கல்லை உருட்டிக் கொண்டு வழியும் எனக் குறிப்பிடும் பாடல் பாணர்களுக்குக் கள் வழங்கியது பற்றியும்,

நார்பிழிக் கொண்ட வெம்கள் தேறல்
பண் அமை நல்யாழ்ப் பாண்கடும்பு அருத்தி (புறம். 170)

நாரைப் பிழிந்து கொண்ட விரும்பத்தக்க கள்ளாகிய தேறலை இசைவல்ல நல்ல பாணர்களின் சுற்றத்தை அருந்தச் செய்து விரும்புவார்க்கு மென்மை யானவன், பிட்டங் கொற்றன் எனக் குறிப்பிடுகையில் கள் வழங்கியது பற்றியும் அறிந்துகொள்ள முடிகின்றது.

சோழன் கரிகாற் பெருவளத்தான் மதுக்குடங்களைக் காலி செய்து பெரிய பாணர் கூட்டத்தைப் பாதுகாத்தவனாகவும் (புறம். 224) நம்பி நெடுஞ்செழியன், பாணர்கள் மகிழ மதுவைக் குடம்குடமாக வழங்கினான் (புறம். 239) என்ற பதிவும் காணப்படுகின்றது.

நின்ற முரற்கை நீக்கி, நன்றும்
அரவு வெகுண்டன்ன தேறலொடு சூடு தருபு (புறம்.376)

பாணர்களுக்கு, பாம்பு சினந்து எழுந்தாற் போன்ற நல்ல மதுவுடன் சுட்ட இறைச்சியும் தந்து நிரயம் (நகரம்) போன்ற வறுமை கடலைக் கடக்கும் மிதவையாக என் தந்தைபோல்வான் என்று நல்லிய கோடனின் கொடைத் தன்மையைப் புகழ்கையில் கள்ளைக் கொடையாக வழங்கினான் என்று அறிந்துகொள்ள முடிகின்றது.

இஞ்சிவீ விராய பைந்தார் பூட்டிச்
சாந்து புறத்து எறிந்த தசும்புதுளங்கு இருக்கைத்
தீம்சேறு விளைந்த மணிநிற மட்டம்
ஓம்பா ஈகையின் வண்மகிழ் சுரந்து (பதி.42)

என வரும் பாடல், கள் நிறைந்த குடங்களின் கழுத்தில் இஞ்சியும் பூவும் கலந்து தொடுத்த மாலையினைக் கட்டி அதன் புறத்தே சந்தனம் பூசிவைக்கும் பழக்கம் இருந்தமையும், மது அருந்துவோர் இடையிடையே கடித்து இன்புறுதற்காக இஞ்சியும், முகர்ந்து இன்புறுதற்காகப் பூவும் சேர்த்துக் கட்டிய மாலையினைப் பூட்டியும், அவ்வாறே பயன் பெறுவதற்காகச் சந்தனத்தைப் பானையின் புறத்தே பூசுவர் என்று அறிந்துகொள்ள முடிகின்றது.

**களிறு**

பாணர்களுக்கு வழங்கப்பட்ட பல்வேறு கொடைகளுள் களிறுகளும் வழங்கப்பெற்றன. இசைத்திறம் மிக்க பாணர்கள் அரசர்களைப் பாடி புகழும் போது பரிசில்களாகக் களிறுகள் வழங்கப்பெற்றன.

*களங்கனி அன்ன கருங்கோட்டுச் சீறியாழ்ப்*
*பாடின் பனுவல் பாணர் உய்த்தெனக்*
*களிறில ஆகிய புல்அரை நெடுவெளில்*
*கான மஞ்ஞை கணனொடு சேப்ப (புறம். 127)*

களாப்பழம் போன்ற கருநிறத் தண்டினையுடைய சிறிய யாழைக் கொண்டு பாடுதற்கு இனிய பாடலைப் பாடிய பாணர், பரிசில் பெற்றுக் கொண்டு போயினர்; பரிசாகக் களிறுகள் போயினமையால் வெறுமையான நெடிய கட்டுத் தறியில் காட்டு மயில்கள் தத்தம் கூட்டத்தொடு தங்கின என வரும் பாடலில் பாணர்களுக்குக் களிறுகள் பரிசில்களாக வழங்கப்பெற்றன என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

*ஆஆய் அண்டிரன் அடுபோர் அண்ணல்*
*இரவலர்க்கு ஈத்த யானையில் கரவின்று (புறம். 129)*

வேள் ஆய் அண்டிரனிடம் பரிசில் வேண்டி அடைந்தவர்க்கு வழங்கிய யானைகளைக் கணக்கிடல் அரிது என்றும், வளையல் அணிந்த கையை உடைய விறலியர் தோட்டத்தில் பறித்த கீரைக்கு இடு பொருளாக சில அரிசியை வேண்ட, நாஞ்சில் வள்ளுவனோ பரிசிலர்க்கு வழங்கும் தகுதியை அறிதலால் வறுமையைப் பாராமல் தம் மேம்பாட்டை ஆராய்ந்து மலைபோன்றதொரு யானையைக் கொடையாக அளித்தான் (புறம். 140) என்று அறிந்துகொள்ள முடிகின்றது.

*வெஞ்சின வேழம் நல்கினன் அஞ்சி*
*யானது பெயர்த்தனென ஆகத் தானது*
*சிறிதென உணர்ந்தமை நாணிப் பிறிதுமோர்*
*பெருங்களிறு நல்கி யோனே; (புறம். 394)*

சோழிய ஏனாதி திருக்குட்டுவனின் வெற்றிச் சிறப்பைப் பாடிய இரவலர்க்கு அவ்வளவில் மனம் நிறைந்த மகிழ்வால் தன்னொடும் கூடியிருத்தலை விரும்பி பகையை அழித்த பின்னரும் தன் சீற்றம் தணியாத புலால் மணக்கும் கொம்பையுடைய யானையைப் பரிசிலாக அளித்தான் என்று அறிந்து கொள்ள முடிகின்றது.

**குதிரை**

பாணர்களுக்குப் பரிசில்களாகக் குதிரைகள் வழங்கியது பற்றிய பதிவும் காணப்படுகின்றது.

> ஆனா நோயோடு அழிபடர்க் கலங்கிக்
> காமம் கைம்மிகக் கையறு துயரம்
> காணவும் நல்கா யாயின் பாணர்
> பரிசில் பெற்ற விரியுளை நன்மான்
> கவிகுளம்பு பொருத கல்மிசைச் சிறுநெறி
> இரவலர் மெலியாது ஏறும் பொறையன் (நற். 185)

என வரும் பாடல், பொறையனிடம் விரிந்த பிடரி மயிருடன் கூடிய குதிரையைப் பாணர்கள் பரிசாகப் பெறுவர். பொறையனுடைய ஊரின் பெயர் கொல்லி மலையாகும். அம்மலை உயரமானது; அம் மலைமீது ஏறிக் கடப்பதற்கு, ஆங்காங்கே சிறிய வழிகள் காண்படுகின்றன. பல பாணர்கள் அந்தச் சிறு வழிகளிலே தாங்கள் பெற்ற குதிரைகளின் மீது ஏறிச் செல்வர் என்று குறிப்பிடுகையில் பாணர்கள் குதிரைகளைப் பரிசில்களாகப் பெற்றதை அறிந்து கொள்ள முடிகின்றது.

ஊர் மன்றங்களிலும் பின்னர் மறுகுகளிலும் புகுந்து, கணுக்கள் திரண்ட கோலினைக் கையாற் கொண்டு போர்க் களத்தை வாழ்த்திப் பாடும் பாணன் குதிரை பெறுவானாக என்று கொடுத்தலை விரும்பி அதற்காகப் போர் செயலை விரும்பிச் செய்பவனாக நீ உள்ளாய் (பதி. 43) என்று அரசனின் போர்ச் செயலைப் புகழ்ந்து கூறுகையில் பாணர்களுக்குக் குதிரைகள் பரிசில்களாக வழங்கியமை பற்றி அறிந்துகொள்ள முடிகின்றது.

**சிற்றூர்**

பாணர்களின் இசைத் திறனுக்கு சிற்றூரினைக் கொடையாக வழங்கியது பற்றியும், அவ்வூரினைப் பாணர்கள் ஆண்டது பற்றியுமான குறிப்புகள் சங்கப் பாடல்களில் காணக்கிடைக்கின்றன. தன்னை நாடி வரும் இரவலர்களுக்கு கரம்பைச் சீறூரைக் கொடையாக வழங்கியது பற்றி,

> இறைஞ்சி யோனே குரிசில் பிணங்குகதிர்
> அலமருங்கழனித் தண்ணடை ஒழிய
> இலம்பாடு ஒக்கல் தலைவற்கு ஓர்
> கரம்பைச் சீறூர் நல்கினன் எனவே (புறம். 285)

என வரும் பாடலில், போர்க்களத்தில் வீழ்ந்துபட்ட தலைவனின் புகழைக் குறிப்பிடுகையில், அவன் வீழ்ந்தது கண்டு வருந்திய பெருமக்கள் அனைவரும், பின்னிக் கிடக்கும் கதிர் அசையும் வயல் நிலம், முன்னே இரவலர்க்குக் கொடுத்தமையால் கரிசல் நிலச்சிற்றூரை நல்கினான் என்று புகழ, அது கேட்டு நாணித் தலை தாழ்ந்தான் என்று கொடையைக் குறிப்பிடுகையில் பாணர்களுக்குச் சிற்றூர் வழங்கியது பற்றியும்,

ஐதமை பாணி வணர்கோட்டுச் சீறியாழ்க்
கைவார் நரம்பின் பாணர்க்கு ஒக்கிய;
நிரம்பா இயவில் கரம்பைச் சீறூர் (புறம். 302)

என வரும் பாடலில், வளைந்த மூங்கிலை விட்டதும் எழும்புவது போலத் தாவி ஓடித் திரியும் குதிரைகள்; பொற்பூக்கள் அழகிய அணிகலம் அணிந்த மகளிர் கூந்தலில் சேர்ந்தன; மெல்லிதாய் அமைந்த தாளத்திற்கு ஏற்ப வளைந்த தண்டையுடைய சிறிய யாழைக் கைத்திறனால் வருடி இசைக்கும் பாணர்க்கு, சிறிய வழியையுடைய கரிசல் நிலச்சிறிய ஊர்கள் கொடுக்கப்பட்டன என்று குறிப்பிடுகையில் ஊர்க்கொடை வழங்கியமை பற்றி அறிந்து கொள்ள முடிகின்றது.

**ஆடை**

வறுமையில் மிக வாடி கந்தல் ஆடையராய்த் திகழ்ந்த பாணர்களுக்கு அவர்களின் வறுமையை நீக்கி புது ஆடைகள் கொடையாக வழங்கியது பற்றிய பதிவுகள் காணக்கிடைக்கின்றன.

நிலம்தின் சிதாஅர் களைந்த பின்றை
நூலாக் கலிங்கம் வால்அரைக் கொளிஇ
வணர்இரும் கதுப்பின் வாங்குஅமை மென்தோள்
வசைஇல் மகளிர் வயங்குஇழை அணிய
அமர்புமெய் ஆர்த்த சுற்றமொடு
நுகர்தற்கு இனிதுநின் பெரும்கலி மகிழ்வே (பதி. 12)

என வரும் பாடலில், பலநாள் தொடர்ந்து வருத்திய பசித்துன்பம் நீங்கும்படி, அரிவாளால் அறுத்த தசைத்துண்டங்களான ஆட்டிறைச்சியைக் கலந்து சமைத்த வெண்சோற்றினை உண்ணச் செய்வாய்! மலர் அரும்புகள் இட்டுச் செய்த கள் தெளிவைப் பருகச் செய்வாய், மழையில் நனைந்த பருந்தின் கரிய சிறகு போன்று மண் அரித்து மாசுடைய கந்தலாடையை நீக்கிப் பட்டு

இழையால் செய்த ஆடையினை அவர்கள் தம் இடையில் உடுத்துமாறு செய்தவன் இமயவரம்பன் நெடுங்சேரலாதன் எனக் குறிப்பிடுகையில் ஆடையினைக் கொடையாக வழங்கியது பற்றியும்,

சாந்துதலைக் கொண்ட ஓங்குபெருஞ்சாரல்
விலங்குமலை அடுக்கத் தானும்
கலம்பெறு விறலி ஆடும் இவ் ஊரே (நற். 328)

தலைவன் ஆடுமகளுக்கு எண்ணெயும் துணியும் பரிசில்களாக வழங்கியது பற்றிய செய்தியை அறிந்துகொள்ள முடிகின்றது.

இசைக்குடி மரபினரான பாணர்களைப் பாதுகாக்க பல்வேறு வகையான கொடைகளையும் வழங்கிப் புரந்தமையை மேற்கண்ட பாடல்களின் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது.

**கையறு நிலைப் பாடல்கள்**

பாணர்கள் தங்களைப் புரந்த வள்ளல்கள் இறந்த போது மிகுந்த துன்பத்திற்கு உள்ளாயினர். அவ்வள்ளல்களின் இறப்பினைத் தம் வாழ்விழப்பாய்க் கருதி மங்கல பொருட்களை வெறுத்தனர். அவர்களுக்காகக் கையறு நிலைப் பாடல்களைப் பாடினர். கையறுநிலைப் பாடல்கள் குறித்து பெ.மாதையன், "இனக்குழுப் பண்புடைய சமுதாயம் நிலவுடைமைப் பண்புக்கு மாறிப்போகும் சூழலிலும் நிலவுடைமைப் பண்புகள் புலவர் பலரை அந்நியப்படுத்துகின்ற சூழலிலும் உடைமைச் சமுதாயத்தினராக இருக்கும் அதே வேளையில் கொடைமையை உயிர்ப்பண்பாய்க் கொண்டு கூட்டுண்ணுதலை உடையோராய் இருந்த கடையெழுவள்ளல்களின் இருப்பு மிகுதியும் வரவேற்கப்பட்டுள்ளது. வேந்தர்களின் கொடை வரையறுத்த நிலையில் குறிப்பிட்ட புலவரை மையப்படுத்தியதால் வரையறுத்த கொடையாய் மாறிப்போன நிலையில் கடையெழுவள்ளல்களின் இறப்பு பாணர் முதலிய கலைஞர், இரவலர் ஆகியோர்க்கான அவர்தம் சுற்றத்தார்க்கான பேரிழப்பாய்க் கருதப்பட்டுள்ளது"[28] எனக் குறிப்பிடுவது அறியத்தக்கது.

பாணர்களின் வறுமைத் துயரைப் போக்கிய வள்ளல்களின் இறப்பு அவர்களுக்கு மிகுந்த துன்பத்தை உண்டாக்கியது. இனக்குழுத் தலைவன், சீறூர் மன்னர், வேந்தர் என்று பல்வேறு படிநிலைகளில் பாதுகாத்தவர்களின் இறப்பு ஈடு செய்ய முடியாததாகவும், இனித் தங்களைப் புரப்பவர்கள் யார் என்னும் கேள்வியை உருவாக்கியதாலும் கையறுநிலைப் பாடல்களைப் பாடினர்.

“அதிகார அமைப்பை நிலைநிறுத்தப் பயன்படும் தலைவர்களை உருவாக்கும் செயல்பாட்டில் குறிப்பிடத்தக்கப் பெரும் பங்களிப்பைச் செய்துள்ள மற்றொரு வகையான அமைப்பில் எழுதப்பட்டுள்ள பாடல்கள், வள்ளல்கள் இறந்தபோது இரவலர்கள் பாடுகின்ற கையறு நிலைப்பாடல்கள் ஆகும். பொதுவாகவே சாவு என்ற தளத்தில் ஆடப்படும் சொல்லாடலுக்குப் பெரும் சக்தி உண்டு. கூற்றுக்கு முன்னால் பலம் இழந்து நிற்கும் மனித மனத்திற்குள் மிக எளிதாகக் கருத்துக்களைக் கொண்டு சென்று ஊன்றிவிட முடிகிறது”[29] என்று கையறுநிலைப் பாடல்களின் தன்மை குறித்து பஞ்சாங்கம் குறிப்பிடுகின்றார்.

> இளையோர் சூடார்; வளையோர் கொய்யார்;
> நல்லியாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்
> பாணன் சூடான்; பாடினி அணியாள் (புறம். 242)

இளமையான ஆடவர் சூடிக் கொள்ளார்; வளையல் அணிந்த மகளிரும் பறிக்க மாட்டார்; நல்ல யாழின் தண்டினால் மெதுவாக வளைத்துப் பாணனும் சூடமாட்டான்; பாடினியும் அணிந்து கொள்ள மாட்டாள்; ஆற்றல் விளங்க வீரர்களையெல்லாம் வென்ற வலிய வேலையுடைய சாத்தன் இறந்தான். அவன் இறந்த பின்னே அவனுக்குரிய ஒல்லையூர் நாட்டில், முல்லையே நீ மலர்ந்தாயே; என்ன பயன் கொண்டாய் என வரும் பாடல் தம்மை புரந்த வள்ளல் இறந்த போது பாணன், பாடினி பூக்கள் அணியாது இருந்தனர் என்பதையும்,

> பாணர் சென்னியும் வண்டுசென் றூதா
> விறலியர் முன்கையும் தொடியிற் பொலியா
> இரவல் மாக்களும்.... (புறம். 244)

என வரும் பாடல் முழுமையாகக் கிடைக்கவில்லையாயினும் வள்ளல் இறந்த போது பாணர்கள் எவ்வாறு சோகத்தில் ஆழ்ந்து கிடந்தனர் என்பதை உய்த்துணர இடம் தருகின்றது.

> துடிய பாண பாடுவல் விறலி
> என் ஆகுவிர் கொல் அளியிர்; (புறம். 280)

என் தலைவன் மார்பில் உண்டாகிய புண்ணும் பெரியவை. நண்பகல் பொழுதில் வண்டுகளும் வந்து ஒலிக்கும், பெரிய வீட்டில் ஏற்றி வைக்கப்பட்ட விளக்கும் நின்று எரியா; உறங்காத கண்களும் உறக்கம் வேண்டும். அச்சமுண்டாக்கும் கூகையும் குரல் எடுத்து ஒலிக்கும்; நெல்லும் நீரும் தூவிச் சகுனம் பார்க்கும் நல்ல முதிய பெண்களின் சொல்லும் முழுமையில்லை

துடியனே, பாணனே, விறலியே, நீங்கள் என்ன ஆவிர்களோ, வருந்தத் தக்கவர் நீங்கள்; உங்களுக்கு இங்கே வாழும் வாழ்க்கை கடினமானதாகும்; கழுவப்படும் மொட்டைத் தலையில் இருந்து தெளிந்த நீர் ஒழுக இளமையில் உடுத்த அழகிய பசுந்தழை ஆகிய சிறிய வெள்ளை அல்லியின் அசிரியை உண்ணும் கைம்பெண் போலக் காலமெல்லாம் அத்தலைவனை நினைத்து உயிர்வாழ்தல் அதனினும் கடினமானது என வரும் பாடலில் வள்ளல் இறந்த பின்பு தொல்குடிச் சமூகத்தினரான பாணர்களின் வாழ்க்கை இரங்கத் தக்கது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

எவ்வி வீழ்ந்த செருவில் பாணர்
கை தொழு மரபின்முன் பரித்து இடூஉப் பழிச்சிய (அகம். 115)

என வரும் அகப்பாடல், வீரமும் வள்ளல் தன்மையும் உடைய எவ்வி என்பான் இறந்த வருத்த மிகுதியால் அவனால் புரக்கப்பட்ட பாணர்கள் தம் கையில் வைத்திருந்த யாழை முறித்துப் போட்டனர் என்ற குறிப்பு காணப்படுகின்றது. புறப்பாடலில், வேள் எவ்வியின் இறப்பு செய்தி, பொய்யாவதாக, பொய்யாவதாக அகன்ற அடியையுடைய யானையைப் பரிசிலர்க்கு நிரப்பக் கொடுக்கும் சிறந்த வலிய முயற்சியுடைய அகுதைக்கு உண்டாகிய பொன் சக்கரம் போலப் பொய்யாவதாக; பாணர்களுக்குச் சுற்றமாகியவனும் மிகுந்த அணிகள் அணிந்தவனும் பெரும் படையாளனும் ஆகிய எவ்வியின் மார்பில்பட்ட வேலின் புண்கள் பலவென விடியற் காலையில் சொல்லிய சொல் (புறம். 233) என்று எவ்வியின் இறப்பு பாணர்களுக்குக்கான இழப்பாகவே கருதப்பட்டது.

பாணர்கள் தம்மைப் புரந்த வள்ளல்கள் இறந்து நடுகல்லான பின்பும் அவர்களைப் பற்றிய கையறுநிலைப் பாடல்களைப் பாடியும் நடுகற்களை வாழ்த்தியும் உள்ளனர். ஐயோ, எம் தலைவனின் அடையாத பெரிய இல்லத்தில் வண்டுகள் படியும் மதுக்குறையாத கலத்தொடு அளவில்லாமல் ஆக்கப்பட்ட பெரிய சோற்றையுடைய வளைந்த அகன்ற முற்றத்தை நீர் இல்லாத ஆற்றுப்படகு எத்தகைத்தோ அத்தகைத்தாகக் கண்டேன்; என் கண்ணொளி மழுங்குவதாக; நாடாளும் வேந்தர் தம் வளமான அரண்மனையில் மயங்கிய யானையின் பெருமூச்சு ஒலிபோல் நெய்யில் வேகவைக்கப் பட்ட ஆட்டிறைச்சியின் ஓசையை உடைய பொரியலைப் புதிதாக வந்தவர் நிரம்ப உண்ணத் தந்தாய் முன்பு; இப்பொழுது பல ஆன் கூட்டத்தைக் கொண்ட கல்லாமலே பெற்ற விற்பயிற்சியாளன் குளறும் குரலையுடைய கூகை தன்

கூட்டத்தை அழைக்கும்படி அழைத்து மணமுடைய கரந்தைப் பூவை அறிவுடையவர் சூட்டும் முறைப்படி சூட்ட, வேலையுடைய தலைவன் இல்லாமையால், தனித்துத் தலை மழிக்கப்பட்டுக் கைம்மைத் துயரில் கலங்கி அணிகலங்களை இழந்த மனையாளைப் போல அழகிழந்து பொலிவு அழிந்தனை (புறம். 261) என்று தலைவன் இறந்து நடுகல்லாய் சமைந்த பிறகு பாணர்கள் வருந்திப் பாடினர்.

அருந்தலை அரும்பாணர் அகல்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகி (புறம். 235)

என வரும் பாடல் அதியமான் அஞ்சியின் மார்பைத் துளைத்த வேல் பெரிய பாணர் கூட்டத்தாரது அகன்ற கலங்களைத் துளைத்து இரப்பவர் கைகளையும் துளைத்தது என்று அஞ்சியின் இறப்பு பாணர்களின் வாழ்விழப்பாகக் கருதப்பட்டது.

பாணர்களுக்குப் பல்வேறு கொடைகளை வழங்கிப் பாதுகாத்த வள்ளல்கள் இறந்த பின்பு அவர்களின் நினைவாக மிகுந்த துன்பத்துடன் காணப்பட்டனர். சமூகத்தில் இனி தங்களைப் புரப்பவர்கள் இல்லை என்னும் சோகத்தில் பல்வேறு கையறு நிலைப் பாடல்களைப் பாடினர்.

**பொருநராற்றுப்படை**

இசைக்குடி மக்களான பாணர்களுக்குப் பல்வேறு வகையான கொடைகள் வழங்கியது பற்றிய பதிவுகள் ஆற்றுப்படை பாடல்களில் காணக்கிடைக்கின்றன. வறுமை மிக்கவராய் காணப்பட்ட பாணர்களுக்கு அரசனும், பொதுமக்களும் பல்வேறு பரிசில்களை வழங்கிப் பாதுகாத்தனர்.

அரசன் விருந்தோம்பல் ,

வேரொடு நனைந்து, வேற்று இழை நுழைந்த
துன்னற் சிதாஅர் துவர நீக்கி
நோக்கு நுழைகல்லா நுண்மைய, பூக்கனிந்து
அரசுஉரி அன்ன, அறுவை நல்கி, (பொரு. 80-83)

என வரும் அடிகள், முன்பே நட்பு கொண்டவர்களைப் போல எங்களைப் பார்த்து அரசன் தன் விருந்தோம்பலுக்குத் தக நாங்கள் விரும்பியதை அவன் பேசி எங்களை ஆர்வத்தோடு பார்த்து தன் அருகில் இருத்திக் கொண்டான். அவன் பார்த்த பார்வை எங்கள் எலும்புகளை எல்லாம் குளிரச் செய்தது. நாங்கள் கட்டியிருந்த ஆடை வேர்வையால் நனைந்து, கிழிசலைத் தைத்திருந்த இடங்கள்

தெரிய, ஈரும் பேனும், இணைந்திருந்தது, மிகவும் அழுக்காக இருந்தது. அதை உடனே நீக்கிவிட்டு பாம்பின் தோல் போன்ற மிகவும் மென்மையான, பார்த்தால் இழை தெரியாத பூத்தொழிலையுடைய அழகான ஆடைகளைப் பாணர்களுக்குத் தந்தான். மேகம் போன்ற கரிய கூந்தலையுடைய மகளிர் எங்களுக்குப் பொற்கலங்களில் தேறலை ஊற்றித் தந்தனர். பலமுறை தந்தனர். அதை மகிழ்வோடு உண்டு வழித்துன்பம் நீக்கினர் என வரும் அடிகள் பாணர்களின் வறுமைத் துயரை அரசன் நீக்கிய முறை பற்றி அறிந்து கொள்ள வகை செய்கின்றது.

> கண்டோர் மருளும் வண்டுசூழ் நிலையும்
> கனவுஎன மருண்ட என்நெஞ்சு ஏமாப்ப (பொரு. 97-98)

அவனைச் சந்திப்பதற்கு முதல் நாள் மாலை மிகுந்த வறுமையில் இருந்தோம். அவனைச் சந்தித்த அடுத்த நாள் காலை பிறர் எங்களைக் கண்டு வியந்து மயங்கும் நிலையில் வண்டுகள் சூழும் தன்மையில் இருந்தோம். இது கனவுதானோ என்று நினைக்கும் நிலையில் எங்களைச் சார்ந்த வேறு தொழிலைக் கல்லாத இளைஞர் இது உண்மை எனச் சொல்லிக் காட்டினர். அரசன் எங்களை தூரத்தில் பார்த்தபோதே வருக என அழைத்தான் என வரும் அடிகளில் அரசன் பாணர்களை வரவேற்று உபசரித்த முறையைக் காண முடிகின்றது.

பாணர்கள் உணவு உண்ட முறை,

> காழின்சுட்ட கோழ்ஊன் கொழுங்குறை
> ஊழின் ஊழின் வாய்வெய்து ஒற்றி (பொரு. 105-106)

அரசன் செம்மறிக் கிடாயின், புழுக்கிய இறைச்சியைத் தந்தான். அத்துடன், செம்மறிக்கிடாவின், தொடை இறைச்சியைச் சுட்டு, அச்சூட்டு இறைச்சியையும், சுடச்சுடத் தந்தான். சூட்டின் காரணமாக இடப்பக்கமும் வலப்பக்கமும் வாயில் மாற்றி மாற்றிச் சூட்டைக் குறைத்து உண்டனர்.

> கொல்லைஉழு கொழு ஏய்ப்ப, பல்லே
> எல்லையும் இரவும் ஊன்தின்று மழுங்கி (பொரு.117-118)

என வரும் அடிகள், அரிசி உணவு உண்க என்று கூறி, வரியும் முறிவும் இல்லாத வளமான அரிசியால், சமைத்த விரல் போன்று நிமிர்ந்த சோற்றையும் பருக்கைக் கற்கள் போன்று நன்கு பொரிக்கப்பட்ட பொரிக்கறியையும் தந்து உண்ணச்

செய்தான். இவ்வாறு இறைச்சி, அரிசிச்சோறு இவற்றை மாற்றி மாற்றி உண்டு பற்கள் எல்லாம் கொல்லையை உழுத கலப்பையின் கொழுவைப் போன்று மழுங்கிவிட்டன என்று குறிப்பிடுவதிலிருந்து பாணர்கள் உணவு உண்ட முறையை அறிந்து கொள்ள முடிகின்றது.

அரசன் பாணர்களை வழியனுப்பிய முறை,

பால்புரை புரவி நால்குஉடன் பூட்டி
காலின் ஏழ் அடிப்பின் சென்று, (பொரு.165-66)

பாணர்க்கு ஏடு இல்லாத நெருப்பு போன்ற ஒளிவிடுகின்ற பொன் தாமரைப் பூக்களை அவர்கள் தலையில் அவனே சூட்டுவான். பாடினியர்க்கு அழகிய தூய்மையான ஒளி பொருந்திய முத்துக்களோடு உடைய பொன்னாலாகிய மாலைகளைச் சூட்டுவான். யானைக் கொம்பால் செய்த தாமரை மொட்டை உடைய பெரிய தேரில் பால் போன்ற வெண்மையான நான்கு குதிரைகளைப் பூட்டி உங்களை அனுப்புவான், அனுப்பும்போது அவன் தேருக்குப் பின் ஏழுஅடி நடந்து வந்து வழி அனுப்புவான் என வரும் அடிகளின் மூலம் பாணர்களுக்குப் பல்வேறு கொடைகளை வழங்கி, மரபு வழிப்பட்ட முறையில் அவர்களை வழி அனுப்பினர் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

**சிறுபாணாற்றுப்படை**

வள்ளல் நல்லியக் கோடனிடம் பரிசில் வேண்டிச் செல்லும் பாணர்களை எதிர்கொண்டு அழைத்து அவர்களிடம் நடந்து கொள்ளும் விதம் குறித்து,

அறிவுமடம் படுதலும் அறிவுநன்கு உடைமையும்
வரிசை அறிதலும் வரையாது கொடுத்தலும் (சிறு.216-17)

அறியாமையுடையாரிடத்துத் தானும் அறியாமையுடையான் போன்றிருத்தலும், அறிவுடையாரிடத்து தனது அறிவு நன்குடைமையைக் காட்டலும், வருவோர் தகுதியைத் தெளிவாக அறிதலும், சிறப்பில்லாதோருக்குக் கொடேன் என்று வரைந்து கொள்ளாது வந்தோர்க்குத் தக ஈதலும் ஆகிய பண்புநிலையைக் கொண்டுள்ளான்.

அரசன் பரிசில் வழங்குதல்,

திறல்சால் வென்றியொடு தெவ்வுப்புலம் அகற்றி
விறல்வேல் மன்னர் மன்எயில் முருக்கி
நயவர் பாணர் புன்கண் தீர்த்தபின்
வயவர் தந்த வான்கேழ் நிதியமொடு (சிறு.246-49)

வலிமை பொருந்திய வெற்றியுடன் பகைவரைத் தம் நிலத்தை விட்டு அகற்றி, வெற்றியையுடைய வேலேந்திய முடி மன்னரின் நிலையான அரண்களையும் அழித்து, போர்க்களத்திற்குப் பொருள் விரும்பி வந்தோர்க்கும், பாணர்க்கும் அவர் வறுமை துன்பத்தைப் போக்குகின்றான் என வரும் அடிகளின் மூலம் பகைவரை வென்று, கொண்டு வந்த பொருட்களைத் தன்னை நாடி வரும் பாணர்களுக்குப் பரிசில்களாகக் கொடுத்து அனுப்பினான் என்று அறிந்துகொள்ள முடிகின்றது.

**பெரும்பாணாற்றுப்படை**

தொண்டைமான் இளந்திரையனிடம் பரிசில் வேண்டிச் சென்ற பாணர்களை அந்நாட்டில் உள்ள பல்வேறு குடிமக்களும் உணவுக் கொடை வழங்கி போற்றினர். தங்கள் சூழ் நிலைக்கும் வாழ்க்கை முறைக்கும் ஏற்ப வெவ்வேறு வகையான உணவினை மக்கள் வழங்கினர். எயினர்கள், வீட்டு முற்றத்தில் நிலத்தைத் தோண்டி உரல் போன்று அமைத்திருந்தனர். அந்த உரலில் கொண்டு வந்த புல்லரிசியைக் குட்டை உரலால் குற்றித் தூய்மைபடுத்தினர். அருகே உள்ள கிணற்றில் இருந்து, உபரி நீரை கொண்டு வந்து, வாய் முறிந்த பானையில் உலைநீரை இட்டு அதில் புல்லரிசியை இட்டுச் சமைத்து, அதனுடன் உப்புக் கண்டமாகிய கருவாட்டை வைத்து தெய்வத்திற்குத் தேக்கு இலையில் படைப்பதைப் போன்று பாணர்களுக்கு உணவினை வழங்கினர் (பெரு.95-105).

கோவலர் குடியிருப்பில், நண்டுகளின் சிறு பார்ப்பினைப் போன்ற சோற்றைப் பாலுடன் பாணர்கள் பெற்றதாகவும் (பெரு.166-7) உழவர் குடியிருப்புகளில், வெண்மையான சோற்றைக் கோழிப் பொரியலுடனும் (பெரு.255-56) வலைஞர் குடியிருப்பில், குற்றாத கொழியல் அரிசியைப் பெரிய வாய் அகன்ற பாத்திரத்தில் இட்டு களிபோன்று கூழ் சமைப்பர். அதில் புற்றாம் சோறு போன்ற நெல் முளையை இடித்துக் கலப்பர் அதை இரண்டு நாள் இரவும் பகலும், வைத்திருப்பர். உறுதியான வாயையுடைய பெரிய சாடியில் அதைப் போட்டு வெந்நீர் ஊற்றி வேகவைப்பர். பின்பு கையால் துழாவி நெய் அரிப்பால் வடிகட்டுவர். அது சுவையான மதுவாக அமையும். அந்த மதுவினைப் பச்சைமீனைச் சுட்ட சூட்டோடு சேர்த்துத் தருவர். இவ்வாறு வலைஞர்கள் பாணர்களுக்கு உணவுக் கொடை அளித்தனர் (பெரு.275-83).

அந்தணர் குடியிருப்பில், சிவந்த பசுவினுடைய பாலில் இருந்து மோர் ஆக்கி அதிலிருந்து வெண்ணெய் எடுத்து, அதில் மாதுளையினுடைய

பசுமையான காயை மிளகுப் பொடி கலந்து கருவேம்பினது இலையைச் சேர்த்து நீண்டமாமரத்தில் காய்த்த பசுமையான காய்களுடன், வடுக்களுடன் கலந்து அதை ஊறுகறியாகக் கொண்டு உண்பதற்குத் தருவர். (பெரு.305-10) பட்டினத்து மக்கள் பன்றியின் கொழுத்த தசையோடு சுவையான கள்ளையும் (பெரு.345) பாணர்களின் பசிதீர அவர்களுக்குக் கொடுப்பர். இவ்வாறு சமூகத்தின் வெவ்வேறு குடிகளைச் சார்ந்த மக்கள் தங்களின் சூழ்நிலைக்கு ஏற்ப பல்வேறு வகையான உணவினைக் கொடையாக வழங்கினர்.

பாணர் அரசனைப் போற்றிய முறை,

> மள்ளர் மள்ள! மறவர் மறவ!
> செல்வர் செல்வ! செரு மேம்படுந (பெரு.455-56)

போர் வீரர்களுள் போர்வீரனே! ஆற்றல் உடையவர்களில் ஆற்றல் உடையவனே! செல்வர்களுள் செல்வம் உடையவனே. நீ நீண்டகாலம் வாழ்வாயாக என்று மரபு வழிப்பட்ட வாழ்த்துப் பாடலைப் பாடி யாழை முறைப்படி இசைத்து, அரசனைத் தொழுது புகழ்ந்து நிற்கின்றனர். பாணர்களுக்குத் தொண்டைமான் இளந்திரையன், வண்டுகள் ஒலிக்காத தாமரை வடிவில் அமைந்த பொன் தாமரைப் பூவைப் பாணர்களுக்கு அவர்கள் தலையில் அரசன் சூட்டுவான். பாணனுடன் சென்ற விறலியர்க்குப் பகலில் பொழிகின்ற மழைத்துளிபோன்ற மின்னலை ஒத்த பொன்னாலாகிய மாலையினைச் சூட்டுவான். போர்க்களத்தில் பகைவர்கள் புறமுதுகைக் காட்டி ஓடிச்சென்ற போது விட்டுச் சென்ற பொருட்களையும் பாணர்களுக்குப் பரிசில்களாகக் கொடுத்து அனுப்பினான் (பெரு.485-90).

பெரும்பாணாற்றுப்படை பாடல் பாணர்களுக்குப் பொது மக்கள் உணவுக் கொடை வழங்கியது பற்றியும், அரசன் பல்வேறு பரிசில்கள் வழங்கியது பற்றியும் கூறிச் செல்கின்றது.

**மலைபடுகடாம்**

ஆற்றுப்படை நூல்களுள் ஒன்றான மலைபடுகடாம் மரபு வழிப்பட்ட இசைக் கலைஞர்களுக்கு கொடைகள் வழங்கியது பற்றியும், புரவலர்களுக்கும் கலைஞர்களுக்குமான உறவு நிலையினை எடுத்து இயம்புகின்றது.

நன்னனின் விருந்தோம்பும் பண்பு,

> தலைநாள் அன்ன புகலொடு வழிசிறந்து
> பலநாள் நிற்பினம் பெறுகுவீர் (மலை.565-66)

நூல் இழை போகும் இடம் காண முடியாத நூலால் செய்யப் பெற்ற ஆடையை இகழ்ச்சியற்ற சிறப்பினையுடைய நும்முடைய வறிய அரையில் உடுத்தி பசுமையான இறைச்சித் துண்டுகளுடன் நீண்ட வெண்மையான அரிசி சோற்றைக் குறையாத அளவு, முதல் நாள் போன்ற விருப்புடன் எத்தனை நாள் தங்கினாலும் பெறுவீர் என்று பாணர்களுக்கு நன்னன் விருந்தோம்பினான்.

பல நாள்கள் தங்காது பழைய ஊருக்குச் செல்வோம் என மெதுவாகக் கூறினால், கூட்டத் தலைவன் பொன் தாமரையை அணிய, நீர் இயங்குவது போன்று செல்லுகின்ற உயர்ந்த தேர்களையும், பகைவர் போர்க்களத்திலிருந்து பெற்ற மலை போன்ற யானைகளையும், ஒலிக்கின்ற மணிகளையுடைய ஏறுடைய பசுக்கூட்டத்தையும் குதிரைகளையும் பல்வேறு பொருட்களையும் (மலை.570-75) இசைக் கலைஞர்களுக்குக் கொடையாகக் கொடுத்தது பற்றிய பதிவுகள் காணகிடைக்கின்றன.

**தொகுப்புரை**

* சங்க இலக்கியப் பாடல்கள் இனக்குழு வாழ்வியலையும், வேந்தர்களின் வாழ்வியலையும் வெளிப்படுத்தி நிற்கின்றன.
* வேட்டைச் சமூகத்தில் சிறந்த வேடனே வீரன் எனப்பட்டான். வீரன் வேந்தனாக, அரசனாக உருமாற்றம் எய்தினான்.
* இனக்குழுத் தலைவர்கள் பாணர்களிடம் மிகுந்த நெருக்கம் கொண்டவர்களாகக் காணப்பட்டனர்.
* இனக்குழுத் தலைவர்கள் பொருளாதாரமற்றவர்களாகவே காணப்பட்டனர். கொடை வேண்டி வரும் பாணர்களுக்கு வழங்க சீறூர் மன்னர்களிடமும், ஊரில் உள்ள பிற செல்வந்தர்களிடமும் இரந்து நின்றனர்.
* சங்க இலக்கியப் பாடல்கள் இனக்குழுத் தலைவன், சீறூர் மன்னன், வேந்தன் என்ற அதிகார படிநிலை அமைப்புகளை வெளிப்படுத்துகின்றன.
* பாணர்களைப் பாதுகாத்தல் என்பது சமூகக் கடமையாகக் கருதப்பட்டதுடன், அரசர்களுக்கான கூடுதல் தகுதியையும் வழங்கியது. 'பாண்கடன்' என்னும் சொல் இதனை வெளிப்படுத்துகின்றது.
* இனக்குழுச் சமூகத்தில் பாணர்களைப் போற்றி பாதுகாத்தல் என்னும் செயல்பாடு முடியாட்சி காலத்தில் கொடை வழங்குதல் என்னும் சடங்காக மாற்றமடைந்தது.

* வேந்தர்கள் வழங்கும் பரிசில்களைக் காட்டிலும், இனக்குழுத் தலைவர்கள் வழங்கும் உணவுக் கொடையே சிறந்தது என்னும் கருத்து பாணர், புலவர்களிடம் காணப்பட்டது.

* இனக்குழுக் காலம் முதல் வேந்தர்களின் முடியாட்சி காலம் வரை தொடர்ந்து வரும் அரச செயல்பாடு நாள் மகிழிருக்கையாகும். நாள்மகிழிருங்கையில் பாணர்கள் முக்கியத்துவம் பெற்றவர்களாக விளங்கினர்.

* ஈகை என்னும் செயல்பாடு இனக்குழுச் சமூகத்தில் கூட்டுண்ணுதல் என்னும் சமூக நிகழ்வாகவும் வேந்தர்களின் காலத்தில் தங்கள் தரத்தை உயர்த்திக் கொள்ளும் குறியீடாகவும் மாறியது.

* கொடை வழங்குபவர்களை வள்ளல் என்ற சொல்லாலும் பாணர்கள் இரவலர் என்னும் சொல்லாலும் அழைக்கப் பெற்றனர்.

* பாணர்களுக்கு வழங்கப்பட்ட கொடை என்பது விருந்தோம்புதல், பரிசில்கள் வழங்குதல் என இருவேறுபட்ட தன்மையில் காணமுடிகின்றது.

* பாணர்களுக்கு வழங்கப்பெற்ற உணவுக்கொடை, கொடை வழங்கு பவர்களின் வாழ்க்கைமுறை, சூழ்நிலை ஆகியவற்றைக்கு ஏற்ப வழங்கியுள்ளனர்.

* பாணர்கள் தங்களைப் புரந்த வள்ளல்கள் இறந்தபோது, மிகுந்த துயரமுற்று, ஒப்பனை செய்து கொள்ளாமல் வருத்தத்துடன் காணப்பட்டனர்.

## அடிக்குறிப்பு

1. பெ.மாதையன், தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், ப.22.
2. தி.அன்புச் செல்வன், பண்டைத் தமிழரின் அரசமைப்புச் சிந்தனைகள், ப.13.
3. ராஜ்கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.102.
4. கே.பழனிவேலு, சங்க இலக்கியம் பாட்டு மரபும் எழுத்து மரபும், ப.148.
5. கா.சுப்பிரமணியன், சங்க காலச் சமுதாயம், ப.33.
6. பெ.மாதையன், தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், ப.174.
7. கார்த்திகேசு சிவத்தம்பி, பண்டைய தமிழ்ச் சமூகத்தில் நாடகம், ப.202.
8. தி.அன்புச் செல்வன், பண்டைத் தமிழரின் அரசமைப்புச் சிந்தனைகள், ப.14.
9. பெ.மாதையன், தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும். ப.24.
10. கார்த்திகேசு சிவத்தம்பி, பண்டைய தமிழ்ச் சமூகத்தில் நாடகம், ப.229.
11. பெ.மாதையன், தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், ப.83.
12. மேலது, ப.23.
13. கே.பழனிவேலு, சங்க இலக்கியம் பாட்டு மரபும் எழுத்து மரபும், ப.79.
14. கா.சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம், ப.48.
15. மேலது, ப.51.
16. கார்த்திகேசு சிவத்தம்பி, பண்டைய தமிழ்ச் சமூகத்தில் நாடகம், ப.203.
17. கா.சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம், ப.52.

18. ராஜ் கௌதமன், தமிழ்ச் சமூகத்தில் அறமும் ஆற்றலும், ப.73.

19. க.பஞ்சாங்கம், சங்க இலக்கியம், ப.8.

20. மேலது, ப.10.

21. ராஜ் கௌதமன், தமிழ்ச் சமூகத்தில் அறமும் ஆற்றலும், ப.77.

22. க.பஞ்சாங்கம், சங்க இலக்கியம், ப.1.

23. பெ.மாதையன், தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், ப.41.

24. மேலது, ப.83.

25. ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப.294.

26. கா.சுப்பிரமணியன், சங்க காலச் சமுதாயம்,ப.40.

27. சேவியர் தனிநாயகம் அடிகள், பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் கல்வி, ப.43.

28. பெ.மாதையன், தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், ப.90.

29. க.பஞ்சாங்கம், சங்க காலம், ப.12.

மனிதன் இயற்கையிடமிருந்து வெளிப்படும் ஒலிகளைக் கேட்டு இன்புற்று அவற்றைப் போன்று தானும் செயற்கையாக இன்பம் பயக்கும் ஒலிகளை எழுப்புதல் இசை என்னும் பெயரால் அழைக்கப்பெற்றது. தன் உள்ளத்தில் தோன்றும் உணர்ச்சிகளை இசையாய் வெளிப்படுத்தினான். பின்னர் அவற்றை வகைப்படுத்தி அடுத்த தலைமுறையினருக்கு வழங்கினான். மகிழ்ச்சிகளுக்கும், துன்பங்களுக்கும் இசையைப் பயன்படுத்தி, இசையுடன் இரண்டறக்கலந்து வாழ்ந்து வந்தான். இசையைத் தொழில்முறையாகக் கொண்ட பிரிவினர் சமூகத்தில் பாணர்கள் என்னும் பெயரால் அழைக்கப்பெற்றனர்.

தொல்குடிச் சமூகத்தினரான பாணர்கள் மரபு வழிப்பட்ட இசைத் திறனும், பாடல் முறைகளையும் கொண்டு விளங்கினர். மீவியல்புகளைக் கொண்ட இக்கலைஞர்களை இனக்குழுமக்கள் போற்றிப் பாதுகாத்தனர். நிலம் முழுவதும் பயணித்து நிலம் சார்ந்த அறிவினையும், புற உலக தன்மைகளையும் அறிந்து கொண்ட இப்பாணர்கள் அவற்றை இசையுடன் பாடி வெளிப்படுத்தினர்.

**இசை**

மக்கள் தங்கள் உணர்ச்சிகளின் வெளியீடாக இசையைப் பயன்படுத்தினர். இசை என்னும் சொல், இயை, ஒத்து சேர்தல், உடன்படுதல் என்னும் பொருளையும்; புகழ் என்னும் பொருளிலும் (புறம்.379) காணப்படினும், இசை என்பது இசைத்தல் (வாசித்தல்) என்னும் பொருளில் இங்கு விளங்கிக் கொள்ளப்படுகின்றது. சங்க இலக்கியத்தில் இசை என்பது மக்கள் வாழ்வோடு இயைந்து காணப்படுகின்றது. நில அமைப்போடும் இசை பொருந்தி நிற்கின்றது. இசை மக்களோடு கொண்ட தொடர்பு குறித்து ராகவன், “இசையின் வரலாறு மக்கள் குமுதாயத்தோடு (சமூகத்தோடு) மிக நெருக்கிய தொடர்புடையதாய் மிளிர்கிறது. ஆகவே அது மக்களுடைய நினைவாற்றலையும் ஆக்குந்திறனையும் புறக்கணித்து விடவும் இல்லை; அழித்து விடவும் இல்லை; இசை வரலாறு மக்கள் குமுதாயத்தின் ஒரு ஆழ்ந்த அரிய வரலாற்று ஏடாகத் திகழ்கிறது. எனவே, இசையின் தோற்றத்திற்குப் பின்னணியில் குமுதாய பாங்கான உண்மைகள் பல ஒளிர்கின்றன”[1] என்று குறிப்பிடும் கருத்து எண்ணத்தக்கது.

விரல்செறி தூம்பின் விடுதுளைக்கு ஏற்ப
முரல்குரல் தும்பி அவிழ்மலர் ஊத,
யாணர் வண்டினம் யாழிசை பிறக்கப்

பாணி முழவிசை அருவிநீர் ததும்ப,
ஒருங்கு பரந்தவை எல்லாம் ஒலிக்கும்
இரங்கு முரசினான் குன்று (பரி.21)

என வரும் பாடலில், தும்பி அதிக சுர வேறுபாடில்லாத ஓர் ஒலியை வெளிப்படுத்துவது ஆதலின் அதனை ஊத என்றார். அதனை அடிநிலை ஒலியாகக் கொண்டு வண்டினம் பல்வேறு சுர வேறுபாடுடைய இசையொலிகளைப் பிறப்பிக்கின்றன. இஃது இயற்கை நிகழ்வு ஒரு தும்பியின் பின்னணி ஊதலை நிலைக்களமாகக் கொண்டு வண்டுகள் தொடர்ந்து இன்னொலி செய்கின்றன. மிடற்றுப் பாடகன் இவ்வியற்கையை கண்டு தன் பாட்டுக்குரிய ஓர் அடிநிலை ஒலியைத் தன்குரல் வழங்குதற்கேற்பத் தேர்ந்தான், என்று கூறுவதினின்று இயற்கையிலிருந்தே இசை தோன்றியது என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

மக்கள் தங்கள் வாழ்வோடு இசையை இணைத்துக் கொண்டனர். இசை இல்லாத வாழ்க்கையை மக்கள் வாழவில்லை. தாங்கள் வகுத்துக் கொண்ட நில அமைப்புகளுக்கு ஏற்ப இசையைப் பாகுபடுத்தினர். "வரலாற்று காலத்திற்கு முந்திய தமிழர்கள் கண்ட நானிலங்களில் மட்டுமின்றிப் பின்னர் எழுந்த பாலை நிலத்திலும் தனித் தனியாக ஒவ்வொரு வகையான பண்ணும் பாட்டும் யாழும் குழலும் பறையும் பிறந்தன. தமிழர்களின் பழங்கால வாழ்க்கையைப் படம் பிடித்துக்காட்டிய சங்க காலத் தங்கப் புலவர்கள் தமிழர்களின் வாழ்வோடு இசை எப்படி இணைந்தது என்பதைத் தெளிவாகக் காட்டியுள்ளனர். தமிழன் இசையோடு பிறந்தான், இசைபெற வாழ்ந்தான். இசையுடன் இறக்கின்றான். அவன் உடலோடும் உதிரத்தோடும் உயிரோடும் ஒன்றிய இசை அவன் உயிர் துறந்த பின்னரும் அவன் ஆன்மாவோடும் (உயிர்நிலையோடும்) பொருந்தி நிற்கிறது"[2] என்பதான இசை பற்றிய கருத்துக்களைக் காணமுடிகின்றது.

**பண்**

பண் என்பது பண்ணுதல் - இசைத்தல் என்று பொருள்படும். "பண்களின் அமைப்பு அதாவது, இசையின் தொகுதி அதன் உள்உயிராக அமைந்திருக்கிறது. பண் என்றால் ஒரு உற்றறியும் பண்பாற்றல் சார்ந்த பொருளாகக் கொள்ளப்படுகிறது. அதன் பெயரை வைத்து விளக்கங் கூறுவதனால் உள்ளத்தில் உந்தும் உறு பொருளின் ஒரு விளக்கப் பொருளாகத் திகழ்கிறதாகக் கூறலாம். அது முதலில் உள்ளத்தில் அமைவதாக உருப்பெற்று, அப்பால் ஒலி அமைப்பு

உருவில் வெளியில் உந்து எழுகிறது. எனவே பண் அமைப்பு முறையில் உள்ளம், உடல் ஆகிய இரண்டும் இசைந்து இயங்குகின்றன என்று எண்ணலாம்"[3] என்று பண்களின் தன்மைக் குறித்து ராகவன் குறிப்பிடுகின்றார்.

*பண் ஏழு வகைப்படும் என்று சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.*

*ஏழின் கிழவ* *(பொரு.63)*

ஏழு நரம்புகளை இயக்குகின்ற இசையின் தலைவனே என வரும் ஆற்றுப்படை வரியிலும்,

*இசைக்கும் கோல்*
*ஏழும்தம் பயன்கெட இடைநின்ற நரம்பு அறுஉம்*
*யாழினும் நிலைஇலாப் பொருளையும் நச்சுபவோ?* *(கலி.8)*

இசையை விரும்புகின்றவருக்கு நல்விருந்தாய், ஒரு யாழ் விரலால் மீட்டி வாசிக்கும் பொழுது, பண்ணின் ஏழு சுரங்களும் பயன்கெடுமாறு என வரும் அகப்பாடல் அடிகளின் மூலம் ஏழு பண்கள் இருந்தன என்று அறிந்து கொள்ள முடிகின்றது.

பண்களிள் வகை குறித்து இராசமாணிக்கனார், "தமிழ்ப் பண்கள் ஏழு. அவை குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் எனப் பெயர் பெற்றன. இவற்றிலிருந்து பிறப்பன திறங்கள் எனப்பட்டன. இவ்வாறு பிறக்கும் பண்களும் திறங்களும் பல கிளைகளாக இயங்கும் வகைகளில் எண்ணிறந்த இசைவகைகள் கண்டறியப்பட்டன"[4] என்று குறிப்பிட்டுள்ளார்.

### யாழ் தோற்றம்

பாணர்கள் யாழ் என்னும் இசைக் கருவியை இசைப்பதில் மிகச் சிறந்தவர்களாகவும், நுட்பம் வாய்ந்தவர்களாகவும் காணப்பட்டனர். சங்க இலக்கியப் பாடல்களில் பாணர்கள் யாழிசைக் கருவியுடனேயே காட்சிப் படுத்தப்பட்டனர். யாழிசைக் கருவியின் தோற்றம் குறித்து ஆற்றுப்படை நூல்களும், புறப்பாடல்களும் நன்கு விளக்கியுள்ளன.

*பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்*
*மின்நேர் பச்சை மிஞிற்றுக்குரல் சீறியாழ்*
*நன்மை நிறைந்த நயவரு பாண,* *(புறம்.308)*

பொற்கம்பி போன்ற முறுக்கமைந்த நரம்பையும், மின்னல் போன்ற தோலையும், வண்டின் இசை போன்ற இசையையும் உடையது யாழ் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

பைங்கண் ஊகம் பாம்புபிடித் தன்ன
அம்கோட்டுச் செறித்த அவிழ்ந்துவீங்கு திவவின்
மணிநிரைத் தன்ன வனப்பின் வாயமைத்து
வயிறுசேர்பு ஒழுகிய வகைஅமை அகளத்துக்
கானக் குமிழின் கனிநிறம் கடுப்ப
புகழ்வினைப் பொலிந்த பச்சையொடு தேம்பெய்து
அமிழ்து பொதிந்து இலிற்றும் அடங்குபுரி நரம்பின் (சிறு.221-27)

என வரும் ஆற்றுப்படை அடிகளில் பசிய கண்களையுடைய கருங்குரங்கு பாம்புத் தலையைப் பிடித்தபோது பாம்பு குரங்கின் கையை ஒரு பக்கம் இறுக்கியும், ஒரு பக்கம் நெகிழ்த்தும் பிடிக்கும். அது போன்று யாழின் தண்டில் அமைந்துள்ள வார்க்கட்டு தேவைப்பட்ட இடத்தில் இறுகப் பிணித்தும், நெகிழ வேண்டிய இடத்தில் நெகிழ்ந்தும் இருந்தது. இரண்டு விளிம்பும் சேரத் தைத்து அடிக்கப்பெற்ற ஆணிகளின் தலைப்பகுதி, மணிகளை வரிசைப்படுத்தி வைத்தது போன்றிருந்தது. வயிறு சேர்ந்து ஒழுங்கு பட்ட தொழில் வகை அமைந்த பத்தரைக் கொண்டிருந்தது. அதில் தேன் ஒழுகுகின்ற தன்மையையும், அமிழ்தைப் பொதிந்து துளிக்கின்ற முறுக்கு அடங்கிய நரம்பினையும் கொண்டிருந்தது. பாடுகின்ற துறைகளிலெல்லாம் முழுவதும் பாடுதற்கமைந்த பயன் விளங்குகின்ற கூடுதல் இசைகளைக் கொண்டிருந்தது என்று யாழின் தன்மை குறித்துச் சிறுபாணாற்றுப்படை குறிப்பிட்டுள்ளது.

பாசிலை ஒழித்த பரா அரைப் பாதிரி
வள்இதழ் மாமலர் வயிற்றிடை வகுத்துஅதன்
உள்ளகம் புரையும் ஊட்டுறு பச்சைப்
பரிஅரைக் கமுகின் பாளைஅம் பசும்பூக்
கருஇருந் தன்ன, கண்கூடு செறிதுளை
உருக்கி அன்ன, பொருத்துறு போர்வைச்
சுனைவறந் தன்ன, இருள்தூங்கு வறுவாய்ப்
பிறைபிறந் தன்ன, பன்ஏந்து கவைக்கடை
நெடும்பணைத் திரள்தோள் மடந்தை முன்கைக்
குறுந்தொடி ஏய்க்கும், மெலிந்து வீங்கு திவவின்;
மணிவார்ந் தன்ன, மாஇரு மருப்பின் (பெரு. 4 -14)

பசுமையான இலையை நீக்கிய, பருத்த அடியையுடைய பாதிரி மரத்தின், வளமையான இதழையுடைய பெரிய மலரின் உள்ளிடத்தைப் பிளந்தால் அதன்

உள்ளகம் சிவப்பாக இருக்கும், அவ்வாறு சிவப்பு நிறத்தை ஊட்டிய தோளினால் இயன்றயாழ், பருத்த அடியினையுடைய பாக்கு மரத்தின் பசும்பூக்கள் கருவிருந்ததைப் போன்று கண்களையுடய செறிந்த துளைகள், தெரியாத நிலையில் பொருத்தப்பெற்ற போர்வையினையுடையது, உள்பகுதி நீர்வற்றிய சுனை இருண்டிருப்பதைப் போன்றிருந்தது, முன்பகுதி முதல் நாள் பிறை போன்றிருந்தது. பின்பகுதி ஏந்தி கவடு விட்டிருந்தது, நீண்ட மூங்கில் வளையல் போன்று நெகிழ்ந்தும் இறுகியும் நரம்புகள் கட்டப்பெற்றிருந்தன. நீலமணி போன்ற கரிய பெரிய தண்டினை யுடைத்தாயிருந்தது என்னும் பாடல் அடிகள் சிறிய யாழின் தோற்றம் குறித்துக் குறிப்பிட்டுள்ளது.

பேரியாழின் இயல்புகளாக,

நுணங்குஅரம் நுவறிய நுண்நீர் மாமைக்
களங்கனி அன்ன கதழ்ந்துகிளர் உருவின்
வணர்ந்து ஏந்து மருப்பின் வள்ளுயிர்ப் பேரியாழ் (மலை.35-37)

பேரியாழ், வளையல் போன்ற நெகிழ்ச்சியும், இறுக்கமும் அமைந்த உறழ்ச்சியை உடையது. ஒன்பது என்னும் எண் போன்று வடிவில் வார்க்கட்டை உடையது. மிகச் சிறிய அளவாகிய வெண்கடுகு அளவும் இசையில் தவறுதலில்லாமல், ஓசையைச் செவியால் ஓர்ந்து பார்த்து வடித்து கட்டப்பெற்று முறுக்கின நரம்புகளை உடையது. குற்றம் நீங்க தீற்றப்பெற்றுள்ளது. வரகுக் கதிர் போன்ற தன்மையில் நுண்மையான துளைகளையுடையது. ஒலியமைதற்குக் காரணமான பத்தலைப் பசையால் சேர்க்கப்பெற்றுள்ளது. விளங்குகின்ற துளைகளைச் சுள்ளாணிகளால் இறுக்கப்பெற்றது. இடையில் தண்டாகப் புதிய வெண்மையான யானை கொம்பைக் கொண்டு இணைக்கப் பெற்றுள்ளது. அதற்கு மேல் புதிய பொன் நிறத்தாலாகிய தோலைக் கொண்டுள்ளது. வண்டுகள் விரும்பும் புது மணத்தையுடைய ஐந்து பிரிவாகப் பிரித்து கட்டப் பெற்றுள்ள கூந்தலையுடைய, மகளிரின் மார்பில் காணப்பெறும் மயிர் ஒழுக்குப் போன்று, நரம்பமைந்து, வயிற்றைப் போன்று பொல்லம் பொத்துதல் நடுவில் உள்ளது. குறிப்பிட்ட அளவில் வேறுபடாமல் பகுத்தலுண்டாக உயர்ந்து வளைந்த உந்தியை உடையது. நுண்ணிய அரத்தால் அராவினதால் நுண்மையான நீர்மையையுடைய கரிய நிறத்தால் களாம் பழத்தை ஒத்த நிறத்தையும் கோட்டினையும் உடைய பெரிய ஓசையையுடையது என்று பேரியாழின் தோற்றம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

பாலை யாழின் தோற்றம்,

குளப்புவழி அன்ன சுவடுபடு பத்தல்;
விளக்கு அழல் உருவின் விசிஉறு பச்சை,
எய்யா இளஞ்சூல் செய்யோள் அவ்வயிற்று
ஐதுமயிர் ஒழுகிய தோற்றம் போல,
பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை;
அளைவாழ் அலவன் கண்கண்டன்ன (பொரு.4-9)

யாழுக்குப் பத்தல், தோல், போர்வை, ஆணி, தண்டு, வார்க்கட்டு போன்ற பல உறுப்புகள் உள்ளன. அவற்றை இங்கே விளக்குகிறார். மானின் குளம்பு பதிந்த தடம் போன்று இருபுறமும் தாழ்ந்து நடுவில் உயர்ந்திருந்தது பத்தல். விளக்குச் சுடரின் நிறம் போன்று அமைந்திருந்தது இழுத்துக் கட்டப்பட்ட தோல். இளம்சூலை உடைய பெண்ணின் வயிற்றில் படர்ந்த மென்மையான முடி போன்று இரு பகுதியையும் இணைத்துப் பொதித்த போர்வை இருந்தது. எட்டாம் நாள் திங்களின் வடிவை ஒத்திருந்தது உள்நாக்கு இல்லாத வாய். கரும் பாம்பு தலை தூக்கி நின்றது போன்று இருந்தது தண்டு. தண்டை இறுக்கிக் கட்டிய வார்க்கட்டு அழகிய பெண் முன்கையில் அணிந்திருந்த வளையல் தொடர்ச்சியை ஒத்து இருந்தது. யாழின் நரம்புகள் குத்தப்பெற்ற தினை அரிசியைப் போன்று இருந்தன. இசை இன்பம் முற்றிய விரலால் இயக்கப்படுகின்ற நரம்புகள் இழுத்துக் கட்டப்பட்ட தொடர்ச்சி கேட்பதற்கு இன்பத்தைத் தந்தது. மொத்தப் பார்வையில் யாழ் மணமகளைப் போன்று அழகிய தோற்றத்தைக் கொண்டிருந்தது, என பாலை யாழின் தோற்றம் வருணிக்கப்பட்டுள்ளது.

**யாழ் தெய்வம்**

இனக்குழுச் சமூகத்தைச் சார்ந்த பாணர்கள் விரும்பி இசைக்கும் யாழிசைக் கருவியில் தெய்வம் உறைவதாக நம்பினர்.

அணங்கு மெய் நின்ற (பொரு.20)

யாழிற்குரிய தெய்வம் தன்னிடத்தே நின்ற இலக்கணம் அமைதல் வரும் அழகு, என்று யாழிசைக் கருவியில் தெய்வம் இருப்பதாகப் பாணர்கள் கூறினர். யாழிற்குரிய தெய்வம் மாதங்கி (நச்சர் உரை) “யாழைத் தெய்வமாகக் கருதியதால் அந்த யாழின் மீது சத்தியம் செய்தல் நம்புதற்குரிய செய்தியாகவும், புனிதமாகவும் கருதப்பட்டது.”[5]

பரத்தையருடன் சேரிக்குச் சென்று திரும்பியதால் அவன் மீது கோபமாக இருக்கின்றாள் தலைவி, அப்போது அவள்,

யாழொடும்
எடுத்துச்சூள் பலவுற்ற பாணன்வந் தீயான்கொல் (கலி.71)

தலைவன் குற்றமற்றவன் என்று, யாழ் தெய்வத்தின் மீதும் மற்றும் பிற தெய்வங்களின் மீதும் பலமுறை சபதம் செய்த பாணன் வர மாட்டானோ? என்று புலம்புகின்றாள் என வரும் பாடலில் யாழ் தெய்வத்தைப் பாணர்கள் வணங்கினர் என்று அறிந்துகொள்ள முடிகின்றது.

**யாழை இயக்கும் முறை**

யாழை இயக்கம் முறை என்பது தனித்துவமானது, பாணர்கள் யாழிசைக் கருவியை இயக்கிய முறை குறித்து,

வாரியும் வடித்தும் உந்தியும் உறழ்ந்தும்,
சீருடை நன்மொழி நீரொடு சிதறி (பொரு.23-24)

யாழை இயக்குவதற்குச் சில முறைகள் உள்ளன. அதில் வார்தல் என்பது சுட்டுவிரலால் செய்கின்ற தொழில், இதை வாரியும் என்று கூறுகிறார். நரம்புகளைத் தழுவியும் என்று சொல்லலாம். வடித்தல் என்பது சுட்டுவிரலும், பெருவிரலும் கூட்டி நரம்பை அகமும் புறமும் ஆராய்தல், இதை வடித்தும் என்று சொல்கிறார். உந்தி என்பது யாழ் நரம்புகளைத் தெறித்து வன்மை மென்மை பொதுமை போன்றவற்றைப் பார்த்தல். உறழ்ந்தும் என்பது ஒன்றிடை இட்டும் தெறித்து ஆராய்தல் பின்பு பாட்டில் உள்ள சீர்களுக்குத் தக பாணர்கள் இசையை இசைத்தனர்.

கைவல் பாணன் கடனறிந்தியக்க (சிறு. 37)

கைவல் சீறியாழ் கடனறிந் தியக்க (புறம். 398)

கைவல் சீறியாழ்ப் பாணன் (ஐங் .472)

கைவல் பாண் மகன் (பெரு. 37)

கடனறி மரபிற் கைவல் பாண (பதி.67)

என வரும் சங்க இலக்கியப் பாடல்கள், பாணர்கள் யாழைக் (இயக்க வேண்டிய முறை) கடனறிந்து இயக்கியதாகக் குறிப்பிடுகின்றன. தொல்குடிச் சமூகத்தைச் சார்ந்த பாணர்கள் யாழை முறைப்படி இயக்கும் நுட்பத்தை தம்

மரபினருக்கு, மரபுக் கொடையாகப் பயிற்றுவித்தனர். யாழை இசைக்கும் முறை குறித்து இளங்குமரன், "மரபு வழிக் கடன் உடைய பாணர் கையிலே உள்ள யாழும் வழிவழி வந்த கருவியாம்; வழிவழி வந்த கருவியெனின் வழிபடத் தக்க கருவியுமாம். வழிபடத்தக்கதாய் வழிமுறையில் வந்ததாய் அமைந்த அக்கருவி கடமை புரிதற்குக் குடிமையின் படி வாய்த்த கொடைமையாம். ஆகலின் அது, கடனிறை யாழ் எனப்பட்டது"[6] என்று குறிப்பிட்டுள்ளார்.

மரபுவழிப்பட்ட பாணர்கள் தம் கையில் உள்ள யாழை நன்கு முறைப்படி இசைத்தனர். அரசர்களுக்கும் மக்களுக்கும் மகிழ்வூட்டும் பாடல்களைப் பாடி இன்புறுத்தினர்.

**பாணர் , யாழ் கருவியின் வேறு பெயர்கள்**

இயம் என்னும் சொல் இசைக்கருவி என்னும் பொருளைக் கொண்டிருந்தாலும், யாழ் என்னும் இசைக்கருவியைத் தனித்த நிலையில் குறித்து, சங்க இலக்கியப் பாடல்களில் பயின்று வந்துள்ளது.

வருவிசை தவிராது வாங்குபு குடைதொறும்
தெரிஇமிழ் கொண்டநும் இயம்போல் இன்னிசை (மலை. 295-96)

அருவியில் நீராடும் தெய்வமகளிர் அருவி வீழ்ச்சியைக் கையால் தடுத்து விடுவதால், தாளந் தெரிந்த இசையாக நும் இசைக் கருவி போன்று ஓசையைத் தருகின்றது என வரும் பாடலில் இயம் எனும் சொல் பொதுவாக இசைக் கருவி என்னும் பொருளில் வந்துள்ளது. இயம் என்னும் இசைக்கருவியை இயக்கியவர்கள் இயவர் என்று அழைக்கப்பட்டனர்.

இருவெதிர்ப் பைந்தூறு கூர்எரி நைப்ப
நிகழ்த்த யானை மேய்புலம் படர
கலித்த இயவர் இயம் தொட்டன்ன (மது.302-04)

நெருப்பினால் மூங்கிலின் கணுக்கள் உடைந்து வெடிக்கும் ஓசை, மகிழ்ந்த இசைக்கருவியாளர்கள் தம் கருவிகளை முழக்கினால் போலிருந்தது என்று குறிப்பிடும் பாடலில் இயவர் என்போர் பொதுவாக இசைக்கலைஞர்கள் என்று அறிந்துகொள்ள முடிகின்றது.

இயம் என்னும் சொல் யாழிசைக் கருவியையும், இயவர் என்னும் சொல் பாணர்களையும் உணர்த்தி நிற்றலைக் காணமுடிகின்றது.

கருங்கோட்டு இன்இயம் இயக்கினிர் (பெரு.392)

கரிய கொம்பினையுடைய யாழை இசைத்துச் செல்லுங்கள் என்று வறுமையில் உழன்ற பாணனை எதிர்ப்பட்ட பாணன் ஆற்றுப்படுத்தும் போது இயம் என்னும் சொல் யாழ் என்ற பொருளை உணர்த்தி நிற்கின்றது.

பாடுதுறை முற்றிய பயன்தெரி கேள்விக்
கூடுகொள் இன்னியம் குரல்குரலாக (சிறு. 228-29)

பாடுகின்ற துறைகளிலெல்லாம் முழுவதும் பாடுதற்கமைந்த பயன் விளங்குகின்ற கூடுதல் இசையைக் கொண்டிருந்தது அவ்யாழ் என்று யாழினை இயம் என்று குறிப்பிடுகின்றார்.

அரியல் ஆர்கையர் இனிதுகூடு இயவர் (பதி. 27)

வண்டுகள் மொய்க்காத பூக்களைச் சூடிய தலையினை உடைய கள் உண்ணும் இயல்பினரான இனிய இசைக் கருவிகளைக் கொண்டோர் என வரும் பாடலில் பாணர்களை இயவர் என்னும் சொல்லால் குறிப்பிடபட்டுள்ளனர்.

பொன் வார்ந்தன்ன, புரி அடங்கு நரம்பின்
தொடை அமை கேள்வி இடவயின் தழீஇ (பெரு. 15-16)

நரம்புகள் பொன் கம்பிகள் ஒழுகியதைப் போன்றிருந்தது அவ்வாறு தொடுக்கப்பெற்ற யாழை இடப்பக்கத்தில் தழுவிக் கொண்டு பாணன் நிற்கின்றான் எனக் குறிப்பிடுகையில், கேள்வி என்னும் சொல் யாழ் என்னும் பொருளை உணர்த்தி நிற்கின்றது.

உண்டுஉரை மாறிய மழலை நாவின்
மென்சொல் கலப்பையர் திருந்து தொடை வாழ்த்த (பதி.15)

என வரும் பாடலடிகளில் தொடை என்னும் சொல் யாழிசைக் கருவியை உணர்த்தி நிற்கின்றது. யாழிசைக் கருவியை இட்டு வைக்கும் பை, கலப்பை என்னும் பெயரால் அழைக்கப் பெற்றது, அத்தகைய பையை உடையவர் கலப்பையர் (பாணர்) என்று அழைக்கப்பெற்றனர்.

வாங்குபு தகைத்த கலப்பையர் ஆங்கண் (பதி. 23)

காவில் தகைத்த துறைகூடு கலப்பையர் (பதி. 41)

என வரும் பாடலடிகளில் கலப்பையர் என்னும் சொல் பாணர்களைக் குறித்து நிற்றலை அறிந்துகொள்ள முடிகின்றது.

நகைவர் (பதி.37) என்னும் சொல்லும் பாணர்களைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இச்சொல் பாணர்களின் மதிப்பிறக்கததைக் குறிப்பதாக உணர்ந்து கொள்ளமுடிகின்றது. தொல்குடிச் சமூகத்தில் மிகுந்த செல்வாக்குடன் காணப்பட்ட பாணர்கள், பின்னர் வேந்தர்களின் காலத்தில் அரசர்களையும் மக்களையும் மகிழ்விப்பவர்களாகக் காணப்பட்டனர்.

**பாணர்கள் பாடல் பாடிய முறை**

பாணர்கள் அரசவையில் அரசனை வாழ்த்திப் பாடும் போது பல்வேறு இசைக்கருவிகளை இசைக்கலைஞர்கள் இசைக்க அரசனின் புகழ்,வீரம், கொடை, முன்னோர்களின் சிறப்பு போன்றவற்றை வாழ்த்திப் பாடினர்.

பாடுவல் விறலிஓர் வண்ணம்; நீரும்
மண்முழா அமைமின்; பண்யாழ் நிறுமன்;
கண்விடு தூம்பில் களிற்றுஉயிர் தொடுமின்;
பதலை ஒருகண் பைஎன இயக்குமின்;
மதலை மாக்கோல் கைவலம் தமின் என்று
இறைவன் ஆகலின் சொல்லுபு குறுகி
மூவேழ் துறையும் முறையுளிக் கழிப்பி (புறம்.152)

விறலியரே யான் வண்ணம் பாடுவேன்; நீங்கள் ஒலிமிக்க முழாப் பறையை முழக்குங்கள்; யாழிலே பண்ணை மீட்டுங்கள்; கண் திறந்த தூம்பு ஆகிய யானையின் கைபோலும் வடிவமைந்த பெருங்குழலை இசையுங்கள். சல்லரியை இசையுங்கள்; சிறுபறையை அறையுங்கள்; ஒரு தலைப் பதலையை மெல்லெனக் கொட்டுங்கள் என்று அரசனை வாழ்த்திப் பாடும் பாணன் பல்வேறு இசைக் கருவிகளும் ஒலிக்கப் பாடினான் என்று கூறப்படுகின்றது.

அரசனிடம் பரிசில் வேண்டிச் செல்லும் பாணன், தம் சுற்றத்தாருடன் பல்வேறு இசைக்கருவிகளையும் எடுத்துச் சென்று அரசனை வாழ்த்திப் பாடி பரிசில்களைப் பெற்றுள்ளான்.

நல்யாழ் ஆகுளி பதலையொடு சுருக்கிச்
செல்லா மோதில் சில்வளை விறலி
களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறத்தலை
விசும்புஆடு எருவை பசுந்தடி கடுப்பப்
பகைப்புலம் மரீஇய தகைப்பெரும் சிறப்பில்

குடுமிக் கோமாற் கண்டு
நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே. (புறம்.64)

சிலவாகிய வளையலை அணிந்த விறலியே, நல்ல யாழையும் சிறு பறையையும் ஒரு தலை மாக்கிணையையும் எடுத்துக் கொண்டு செல்லுவோம். யானைக் கூட்டங்கள் போரிட்ட அகன்ற களத்தில் வானில் பறக்கும் பருந்தை ஊன் துண்டங்கள் தடுக்கப் பகைவர் நாட்டில் பொருந்திய முதுகுடுமி வேந்தனைக் கண்டு புற்கஞ்சி குடித்தலை நீங்கி வருவதற்கு என வரும் பாடலில் பாணர்கள் தம் சுற்றத்தாருடன் பல்வேறு இசைக்கருவிகளை எடுத்துச் சென்றமையை அறிந்துகொள்ள முடிகின்றது.

அரசனை வாழ்த்திப் பாடும் பாணன், வாய்ப்பாட்டு பாடுவதில் வல்லவனாய் இருந்தான் என்பதை,

இழைபெற்ற பாடினிக்கும்
குரல்புணர்சீர்க் கொளைவல் பாண்மகனும்மே (புறம்.11)

பாடினி பாடும் வஞ்சிக்கு (புறம்.15)

என வரும் பாடல்களில் பாணனும், பாடினியும் வாய்மொழிப் பாடல்களைப் பாடுவதில் தேர்ந்தவர்கள் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

வாய்மொழி
நல்இசை தரூஉம் இரவலர்க்கு (அகம்.162)

எனவரும் பாடல், பாணர்கள் வாய்மொழிப் பாடல்களைப் பாடினர் என்பதையும்,

கைக்கசடு இருந்தஎன்கண் அகன் தடாரி
இருசீர்ப் பாணிக்கு ஏற்ப (பொரு.70-71)

என வரும் பாடலடிகள் பாணர்கள் இரண்டு சீர்களைக் கொண்ட பாடல்களைப் பாடினர் என்பதையும் காண முடிகின்றது.

**பாணர்கள் – இசைநூலில் வல்லவர்கள்**

பாணர்கள் இசைநூலில் மிகுந்த தேர்ச்சியும் வல்லமையும் கொண்டவர்களாக விளங்கினர். சங்க இலக்கியத்தில் இசை நூல்கள் பற்றிய முழுமையான செய்தியை அறிந்துகொள்ள முடியவில்லையாயினும், இசை நூலில் கூறப்பட்ட பண், திறம், துறைகளை முழுமையாக அறிந்தவர்கள் பாணர்கள் என்பதை பாடல்களின் வழி அறிந்துகொள்ள முடிகின்றது.

இறைவன் ஆகலின் சொல்லுபு குறுகி
மூவேழ் துறையும் முறையுளிக் கழிப்பி (புறம்.152)

அரசனை வாழ்த்திப் பாடும் பாணர்கள், இசை நூலில் கூறப்பட்ட இருப்பத்தொரு துறைகளையும் பாடி முடித்தான் எனக் குறிப்பிடுகையில் பாணன் இசைநூலில் தேர்ந்தவன் என்பதையும்,

அருந்துறை முற்றிய கருங்கோட்டுச் சீறியாழ்ப்
பாணர் ஆர்ப்ப, பலகலம் உதவி (அகம்.331)

அரியதான பண்ணும் திறமும் எனப்பட்ட இசைத்துறைகளை முழுதாக அறிந்தவரும், கரிய தண்டினைக் கொண்ட யாழினை உடையவருமான பாணர்கள் என்று கூறுவதினின்று இசைத்துறையில் உள்ள துறைகளை முழுவதுமாக அறிந்தவர்கள் பாணர்கள் என்று கருத முடிகின்றது.

வாங்குஇரு மருப்பின் தீந்தொடை பழுனிய
இடனுடைப் பேரியாழ் பாலை பண்ணிப் (பதி.66)

என வரும் பாடலில், கரிதாய் வளைந்துள்ள தண்டினையுடையதும், இன்னிசை எழுப்பும் நரம்புக் கட்டுக்களுடையதும், யாழ் இலக்கணம் முற்றுப் பெற்றதுமான பேரியாழில், பாலைப் பண்ணினை அமைத்துச் சேர மன்னனை நினைத்துச் செல்லும், அறிவு சான்ற இரவலனே! எனக் குறிப்பிடுகையில் யாழ் இலக்கணம் அமைந்த பேரியாழை பாணன் இசைத்தான் என அறிந்து கொள்ள முடிகின்றது.

காவில் தகைத்த துறைகூடு கலப்பையர்
கைவல் இளையர் கடவுட் பழிச்ச (பதி.41)

இசைத் துறையில் வல்ல பாணர்கள் தாம் செல்லும் முன்பு வழியிடையே தீங்கு வராதிருக்க கடவுளை வேண்டினர். எனவும்,

கூடுகொள் இன்னியம் குரல் குரலாக
நூல்நெறி மரபின் பண்ணி ஆனாது (சிறு.229-30)

பாணன், இசை நூல்கள் கூறுகின்ற மரபில் குரல் குரலாக செம்பாலைப் பண்ணைப் பாடினான் எனக் குறிப்பிடுகையில் இசை நூலில் அமைந்த நுட்பங்களோடு பாடல்களைப் பாடினர் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

அமைவரப் பண்ணி அருள்நெறி திரியாது
இசைபெறு திருவின் வேத்தவை ஏற்பத்
துறைபல முற்றிய பைதீர் பாணரொடு (மலை.38-40)

இசைத் துறைகள் பலவற்றிலும் ஆற்றலுடைய இளமை நீங்கிய பாணர்கள் எனக் குறிப்பிடுகையில் பாணர்களின் இசைத் திறனை நன்கு அறிந்து கொள்ள முடிகின்றது. இசை நூலில் கூறியுள்ள முறைப்படி பாணர்கள் இசைத்தனர் என்பதோடு, புதிதாகப் பல பண்களையும், பாடல்களையும் உருவாக்கினர் என்பதைச் சங்க இலக்கியப் பாடல்களின் வழி அறிந்துகொள்ள முடிகின்றது.

தொல்இசை நிறீஇய உரைசால் பாண்மகன்
எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்
புதுவது புனைந்த திறத்தினும் (அகம்.13-15)

அஞ்சியின் புகழை நிலைபெறச் செய்த திறமை மிக்க பாண்மகன் நல்ல இசையை வரையறை செய்த இனிமை மிக்க இசை நூலில் கூறியுள்ள எண்ணின் முறைப்படி இயற்றிய பண்ணைக் காட்டிலும், அவன் புதுமையாக இயற்றிய பண்களின் திறத்தைக் காட்டிலும் என்று தலைவி கூறுவதினின்று, பாணர்கள் பல்வேறு புதிய பண்களை இயற்றினர் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

விருந்தின் பாணர் விளர் இசை கடுப்ப (நற்.172)

என வரும் பாடல் அடி, பாணர்கள் கடற்கரை ஓரத்தில் நின்று புதிதாகப் பல்வேறு பண்களை இசைத்தனர் என்று குறிப்பிடுகின்றது. மிகுந்த இசை நுட்பம் வாய்ந்த பாணர்கள், மரபுவழிப்பட்ட இசைத் திறனைக் கொண்டவர்களாயினும், இசை நூலை நன்கு அறிந்து முறைப்படி யாழை இசைத்தனர் என்றும், புதிது புதிதாகப் பல்வேறு பண்களை உருவாக்கி அரசர்களையும் மக்களையும் மகிழ்வித்தனர் என்றும் அறிந்துகொள்ள முடிகின்றது.

**பாணர் – பிற இசைக் கருவிகளை இசைத்தல்**

பாணர்கள் யாழிசைக் கருவி மட்டுமல்லாது பிற இசைக் கருவிகளையும் இசைத்தற்கான பதிவுகள் சங்க இலக்கியத்தில் காணமுடிகின்றது.

பூண்அணி ஆகம் புலம்பப் பாணர்
அயிர்ப்புக் கொண் டன்ன (நற்.46)

கொன்றையின் இனிய கனிகள் பாணரின் பறை அறையும் கோல் போலப் பாறையில் முட்டிக் காற்றில் அலைக்கழியும் என்று வரும் தோழி கூற்றிலிருந்து பாணர்கள் அயிர்ப்பு எனப்பட்ட பறையை இசைத்தனர் என்று அறிந்துகொள்ள முடிகின்றது.

கன்றுபெறு வல்சிப் பாணன் கையதை
வள்உயிர்த் தண்ணுமை போல (நற்.310)

பாணன் வாசிக்கும் மத்தளம் போன்ற உள்ளீடு இல்லாத மேற்போக்காக உள்ள சொற்களைக் கூறி நம்பச் செய்யலாமோ? என வரும் தோழி கூற்றிலிருந்து பாணன் தண்ணுமை எனப்பட்ட மத்தளத்தை வாசித்தான் என வரும் பாடலின் மூலமும்,

களிறுபெறு வல்சிப் பாணன் எறியும்
தண்ணுமைக் கண்ணின் அலைஇயர்; (அகம்.106)

பாண்டியனது வெற்றியைப் புகழ்ந்து பாடி யானைகளைப் பரிசிலாகப் பெறும் பாணன் அடிக்கும் மத்தளத்தின் கண் அதிர்வதைப் போல தலைவி வயிற்றில் அடித்துக் கொள்ள ஏதுவாகும் என்பதால் என்னுடன் வருவாயாக என வரும் பரத்தைக் கூற்று அகப்பாடலின் மூலமும் பாணன் தண்ணுமையை (மத்தளம்) இசைத்தமையை அறிந்துகொள்ள முடிகின்றது.

சிதாஅர் வன்பினென் தெடாரி தழீஇப்
பாணர் ஆரும் அளவை யால்தன் (புறம்.376)

பாணர்கள் தம் தடாரிப் பறையை இறுக கட்டிக் கொண்டு உணவை உண்டனர் எனக் கூறுவதினின்றும் பாணர்கள் தடாரிப் பறையை இசைத்தனர் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

**பாணர்களின் யாழிசைக்கு உவமை**

தொல்குடிச் சமூகத்தைச் சார்ந்த பாணர்கள் யாழிசையை மிக நுட்பமாகவும் முறைப்படியும் இசைத்தனர். சங்க இலக்கியப் பாடல்களில் பாணர்களின் யாழிசைக்கு உவமைகளாகப் பலவற்றைப் புலவர்கள் கூறியுள்ளார்.

இன்னும் வாரா ராயினும் சென்னியர்
தெறல் அரும் கடவுள் முன்னர்ச் சீறியாழ்
நரம்பு இசைத் தன்ன தீங்குரல் குருகின் (நற்.189)

கொக்குகள், பாணர்களின் நரம்பிசை ஒலி எழுப்புவது போல குரலை எழுப்புகின்றன என்று பாணர்களின் யாழிசைக்கு கொக்கின் குரலை உவமையாகக் கூறினர்.

....பாணர்
வடியுறு நல்யாழ் நரம்பு இசைத் தன்ன
இன்குரல் அழிதுளி தலைஇ (அகம்.374)

நன்கு வடிக்கப்பெற்ற பாணரின் நல்ல யாழின் நரம்பு ஒலிப்பது போல் இனிய குரலுடன், பெரும் துளிகளோடு நன்றாகத் தொடர்ந்து மழை பெய்தது என்று மழையை உவமையாகவும்,

*பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்*
*மின்நேர் பச்சை மிஞிற்றுக் குரல் சீறியாழ் (புறம்.308)*

பொற்கம்பி போன்ற முறுக்கமைந்த நரம்பையும், மின்னல் போன்ற தோலையும், வண்டின் இசை போன்ற இசையையும் உடைய சீறியாழ் என்று யாழிசைக்கு வண்டின் ஓசையை உவமையாகக் கூறினர்.

*படுமலை நின்ற நல்யாழ் வடிநரம்பு*
*எழீஇ அன்ன உறையினை முழவின்*
*மண்ணார் கண்ணின் இம்மென இமிரும் (நற்.139)*

என வரும் பாடல், மலர்கள் உதிர்வதைப் போன்று இரவில் பொய்யும் மழையானது, பாணரின் நல்ல யாழில் எழும் பண் போல ஒலிக்கின்றது என்று பாணரின் யாழ் ஓசைக்கு மழையை உவமையாகக் குறிப்பிடுகின்றார்.

**பாணர் – பாடிய பண் வகைகள்**

இசை நூல்களில் தேர்ச்சி கொண்ட பாணர்கள், பல்வேறு பண்களைப் பாட வேண்டிய காலம் அறிந்து அவற்றை முறையாகப் பாடினர். சங்க இலக்கிய காலத்தில் வரையறுக்கப்பட்ட நில பாகுபாட்டில் பண்கள் மிக முக்கியத்துவம் பெற்றன. பண்வகைகள் குறித்து ராகவன், "தமிழர்கள் வரலாற்றுக் காலத்திற்கு முன்பே ஐந்து நிலங்களிலே வாழ்ந்து ஐந்து பண்களைக் கண்டுள்ளனர். இவை ஐந்தும் ஐம்பெரும் ஆதிப் பண்களாகப் போற்றப்படுபவை. இந்த ஐந்து பண்களினின்றே தமிழர்கள் பன்னிரண்டாயிரம் பண்களைக் கண்டனர். ஆதிப் பண்கள், ஐந்தில் எதினின்று எப்பண்கள் கிளைத்தன என்று இன்று திட்டவட்டமாகக் கூறுதற்கில்லை"[7] என்று குறிப்பிடுவது அறியத்தக்கது.

பண்டைய தமிழர்கள் பண்களை அவற்றின் காலம் அறிந்து முறையாகப் பாட வேண்டும் என்று வரையறுத்தனர். குறிஞ்சிப் பண் யாமத்திலும், முல்லை பண் மாலை நேரத்திலும், மருதப்பண் விடியற் பொழுதிலும், நெய்தற்பண் எற்பாடு முன்னிரவு நேரத்திலும், பாலைப்பண் நண்பகல் பொழுதிலும் பாடவேண்டும் என்று வகைப்படுத்தினர். இவை தலைவன் தலைவிக்கு இடையில் நிகழும் அன்பை வெளிப்படுத்துவனவாக அமையும்.

குறிஞ்சிப் பண்,

தொல்முறை மரபின ராகிப் பல்மாண்
செருமிக்குப் புகலும் திருஆர் மார்பன்
உரும் உரறு கருவிய பெருமலை பிற்பட
இறும்பூது கஞலிய இன்குரல் விறலியர்
நறுங்கார் அடுக்கத்துக் குறிஞ்சி பாடி (மலை.355-59)

பல சிறப்புகளைப் பெற்ற, போர்த்தொழிலை விரும்பும், திருமகள் வீற்றிருக்கும் மார்பனாகிய நன்னனின், இடி முழக்கமுடைய பெரிய மலை பிற்பட, வியப்புடன் இனிய இசையுடன் நெருங்கிய விறலியர், மணமிக்க கரிய மலை அடுக்கத்திலுள்ள தெய்வங்களைக் கையால் தொழுது குறிஞ்சிப் பண்ணைப் பாடினர் எனவும்,

யாம நல்யாழ் நாப்பண் நின்ற (மது.584)

யாமக்காலத்தில் குறிஞ்சிப் பண்ணை இசைத்தனர் என்றும் அறிந்துகொள்ள முடிகின்றது.

முல்லை பண்,

பாணர் முல்லை பாட (ஐங்.402)

முல்லை நல்யாழ்ப் பாணமற்று எமக்கே (ஐங்.478)

முல்லை திணைக்குரிய நல்ல யாழை ஏந்திய பாணனே! என்று குறிப்பிடும் பாடல்கள், பாணர்கள் முல்லை நிலத்துக்குரிய இரங்கல் பண்ணைப் பாடினர் என்று அறிந்துகொள்ள முடிகின்றது.

இரங்கல் பண் பாடியமை,

அருளாய் ஆகலோ கொடிதே; இருள்வரச்
சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்
கார்எதிர் கானம் பாடினேம் ஆக (புறம்.144)

அருள் செய்யாது இருப்பது கொடியது; மாலைப் பொழுதில் எம் சிறிய யாழில் இரங்கல் பண்ணைப் பாடினேம் என வரும் பாடலும்,

சீறியாழ் செவ்வழி பண்ணிநின் வன்புல
நன்னாடு பாட என்னை நயந்து
பரிசில் நல்குவை (புறம்.146)

சிறிய யாழில் மாலைப்பண்ணை இசைத்து உன் மலை நாட்டைப் பாட என்னை விரும்பிப் பரிசில் தருவாய் எனச் செவ்வழிப்பண் பாடியமை குறித்துக் குறிப்பிடுகின்றார்.

கன்மழை அருவிப் பன்மலை நீந்திச்
சீறியாழ் செவ்வழி பண்ணி வந்ததை (புறம்.147)

வலிய குகைகளில் இருந்து விழும் அருவிகளையுடைய மலைகள் பலவற்றையும் கடந்து சிறிய யாழால் மாலைப்பண் பாடி வந்தேம் என வரும் பாடலிலும்,

நயவன் தைவரும் செவ்வழி நல்யாழ்
இசைஓர்ந் தன்ன இன்தீம் கிளவி (அகம்.212)

தலைவி பேசும் பேச்சானது, யாழ் வல்லோன் (பாணர்) இசைக்கும் செவ்வழிப்பண் போன்று இனிமை தவழுவதாக உள்ளது என்று தலைவன் கூறுவதாய் அமைந்த பாடலில் பாணன் இசைக்கும் மாலைப்பண் மிகுந்த இனிமை உடையது என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

திவவுமெய்ந் நிறுத்தச் செவ்வழி பண்ணிக்
குரல்புணர் நல்யாழ் முழவோடு (மது.604-05)

கோவிலில், வாரால் கட்டப்பெற்ற யாழில் செவ்வழிப்பண்ணைப் பாடினர் எனக் குறிப்பிடுகையில் மாலைப்பண் இசைத்தமை பற்றியும் அதனை இனிமையுடன் பாணர் இசைத்தனர் என்பதையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

மருதப் பண்,

எருதுஎறி களமர் ஓதையொடு நல்யாழ்
மருதம் பண்ணி அசையினர் கழிமின் (மலை.469-70)

மாட்டை ஓட்டுகின்ற உழவர் பாடும் ஏர்மங்கலப் பாட்டுடன் உங்கள் யாழ் இசை பொருந்துமாறு மருதப்பண்ணைப் பாடி, அங்குத் தங்கிச் செல்லுங்கள் என வரும் ஆற்றுப்படை பாடலின் மூலம் பாணர்கள் காலைப் பொழுதில் மருதப்பண்ணை பாடினர் என்றும்,

மழைஎதிர் படுகண் முழவுகண் இகுப்பக்
கழைவளர் தூம்பின் கண்ணிடம் இமிர
மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ் (மலை. 532- 34)

மூங்கில் இசைபோன்று பெருவாக்கியத்தின் திறந்த கண்கள் ஒலிக்க, மருதப் பண்ணை வாசித்த கரிய கொம்பினையுடைய சிறிய யாழ் எனக் குறிப்பிடுகையில், பாணர் மருதப்பண் இசைத்தமை பற்றியும்

விளரி நரம்பின் நயவரு சீறியாழ் (அகம்.279)

என வரும் அகப்பாடல், காதலர்கள் மகிழ்ந்து உறங்கும் இளவேனிற் காலத்தில் அவர்களை, உறக்கத்தினின்று எழுப்புவனவாக வைகறைப் பொழுதில் சீறியாழில் விளரிப்பண் வாசிக்கப்படும் எனக் குறிப்பிடுகையிலும் வைகறைப் பொழுதில் மருப்பண் (விளரிப்பண்) வாசிக்கப்பட்டது என அறியமுடிகின்றது.

பாலைப் பண்,

பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
வரிநவில் பனுவல் புலம் பெயர்ந்து இசைப்பப்
படுமலை நின்ற பயங்கெழு சீறியாழ் (புறம்.135)

பொன் உருக்குப் போன்ற புரிக்கட்டு அமைந்த நரம்பினையுடைய இசை நிரம்பிய பாடல் இடம் தொறும் கேட்டு எதிர் ஒலி செய்ய படுமலைப் பாலை நிலைபெற்ற பயன்மிக்க சிறிய யாழ் எனக் குறிப்பிடும் பாடலிலும்,

படுமலை நின்ற நல்யாழ் வடிநரம்பு (நற்.139)

மழையின் ஓசை, பாலைப் பண்ணின் படுமலை போன்று உள்ளது எனக் குறிப்பிடுகையிலும் பாணரின் படுமலை பண்ணின் இனிமையை அறிந்து கொள்ள முடிகின்றது.

பாணர் படுமலை பண்ணிய எழாலின் (குறு.323)

பாணர்கள் படுமலைபண்ணைப் பண்ணிய எழாலின் வானத்து எழும் உச்சநிலை நல்லிசை போல, மழை பெய்த புலத்துப் பூத்த எனக் குறிப்பிடுகையிலும் பாணர் வாசித்த படுமலைப்பண்ணை அறிந்துகொள்ள முடிகின்றது.

தீந்தொடை நரம்பின் பாலை வல்லோன்
பையுள் உறுப்பின் பண்ணுப் பெயர்த்தாங்குச்
சேறு செய் மாரியின் அளிக்கும் நின்
சாறுபடு திருவின் நனைமகி ழானே (பதி.65)

இன்னிசை உண்டாக்கும் பாலை யாழில் பாலைப் பண்ணினை வாசிப்பதில் வல்லவன், அந்த யாழில் வருத்தத்தை மிகுவிக்கும் இயல்புடைய

பாலைப் பண்ணின் வகைகள் பலவற்றையும் ஒவ்வொன்றாக மாறிமாறி வாசிக்கும் போது, கேட்பார்க்கு ஒன்றை ஒன்று ஒவ்வாத இசை இன்பத்தை உண்டாக்கும் என வரும் பாடலில் பாணர், பாலைப்பண்ணின் வகைகள் பலவற்றையும் இசைத்தனர் என்று அறிந்துகொள்ள முடிகின்றது.

வாங்குஇரு மருப்பின் தீந்தொடை பழுனிய
இடனுடைப் பேரியாழ் பாலை பண்ணிப்
படர்ந்தனை செல்லும் முதுவாய் இரவல (பதி-66)

கரிதாய் வளைந்துள்ள தண்டினையுடையதும், இன்னிசை எழுப்பும் நரம்புக் கட்டுக்களையுடையதும், யாழ் இலக்கணம் முற்றுப் பெற்றதுமான பேரியாழில், பாலைப் பண்ணினை அமைத்துச் சேர மன்னனை நினைத்துச் செல்லும் அறிவு சான்ற இரவலனே எனக் குறிப்பிடுகையில் பாணர் அரசனிடம் பரிசில் பெறச் செல்லும் போது பாலைப்பண்களை வாசித்தான் என்று அறிந்துகொள்ள முடிகின்றது.

ஆறுஅலை கள்வர் படைவிட மருளின்
மாறுதலை பெயர்க்கும் மருவுஇன் பாலை (பொரு.21-22)

பாணர் இசைக்கும் பாலைப்பண்ணின் இசை இன்பத்தைக் கேட்ட கள்வர்கள் தங்கள் கைகளில் இருந்த படைகளைக் கீழே போட்டு மெய் மறந்து நின்றனர் எனக் குறிப்பிடுகையில் பாணர்கள் இசைக்கும் பாலைப்பண்ணின் நுட்பத்தை அறிந்துகொள்ள முடிகின்றது.

பாணர்கள் நட்டபாடை என்னும் பண்ணை இசைத்தது பற்றியும்,

பொன்வார்ந் தன்ன புரிஅடங்கு நரம்பின்
இன்குரல் சீறியாழ் இடவயின் தழீஇ
நைவளம் பழுநிய நயம்தெரி பாலை
கைவல் பாண்மகன் கடன்அறிந்து இயக்க (சிறு.34-37)

பொன்னால் செய்த நரம்பு போன்ற முறுக்கேறிய நரம்புகளையுடைய சிறிய யாழ், இனிய ஓசையை உடைய யாழ் அதை இடப்பக்கத்துத் தழுவி வைத்துள்ளான். பாடுதலில் வல்ல பாண்மகன். அவன் நட்டபாடை என்னும் பண்ணையும், இனிமை தெரிகின்ற பாலைப் பண்ணையும் இசைப்பதில் வல்லவன் என்று சிறுபாணாற்றுப்படை கூறுவதினின்றும் பாணன் நட்டபாடை என்னும் பண்ணை இசைத்தான் என்றும் அறிந்து கொள்ள முடிகின்றது. மேலும்,

நைவளம் பூத்த நரம்பு இயைசீர்ப் பொய்வளம்
பூத்தன பாணா! நின் பாட்டு (பரி.18)

நட்டபாடை என்னும் பண்ணைத்தரும் யாழ் நரம்பிற்குத் தகுந்த தலைவனின் தூய்மை பாடும் உன் முன்னைய பாட்டு, உனது பொய்மிகுதியைக் காட்டிற்று என வரும் பாடலாலும்,

நைவளம் பழுநிய பாலை வல்லோன்
கைகவர் நரம்பின் இம்மென இமிரும் (குறி.146-47)

நட்டபாடை என்னும் பண் நிரம்பிய பாலை யாழினை இயக்க வல்லவன் பாணன். தம் கையால் தெளித்த நரம்பு போல, இம்மென்று ஒலிக்கும் வண்டு என வரும் பாடலாலும் பாணன் நட்டபாடை என்னும் பண்ணை இசைப்பதில் வல்லவன் என்று அறிந்துகொள்ள முடிகின்றது.

பாணர்கள் அகத்துக்குரிய பண்கள் மட்டுமல்லாது, புறத்துக்குரிய பண்களையும் அமைத்தனர் அரசர்களின் புகழ், வீரம், கொடை, போர்ச்சிறப்பு முதலியவற்றைப் பாடிப் பரிசில்களைப் பெற்றனர்.

புறம் பெற்ற வயவேந்தன்
மறம் பாடிய பாடினியும்மே (புறம்.11)

பாடினி பாடும் வஞ்சிக்கு (புறம்.15)

என வரும் பாடல்களில் தனக்கு மனவெப்பத்தை உண்டாக்கிய பகைவர் அரணை அழித்து, எதிர்த்தவர் புறங்காட்டி ஓடப் பெற்றான். அதனைப் பெற்ற அவன் வீரத்தைப் பாடிய பாண்மகள் என்று அரசனின் வீரத்தைப் பாடியமையையும்,

இசைமணி எறிந்து காஞ்சி பாடி
நெடுநகர் வரைப்பில் கடிநறை புகைஇக் (புறம்.281)

குழல் ஊதி ஒலிக்கும் மணியை அடித்துக் காஞ்சிப்பண்ணைப் பாடிப் பெரிய மனையில் வீரர்கள் உடலைப் பேய்கள் தீண்டா வண்ணம் காத்தனர் என வரும் பாடலைக் கொண்டு பாணர்கள் காஞ்சி பண்ணைப் பாடினர் என்றும் அறிந்துகொள்ள முடிகின்றது.

பணியா மரபின் உழிஞை பாட
இனிதுபுறந் தந்து அவர்க்கு இன்மகிழ் சுரத்தலின் (பதி.46)

அரசனின் பல்வேறு திறன்களையும், போர்ச் செயல்களையும், பணியாத முறைமையுடைய உழிஞைத் திணைச் செயல்களையும் பாடினர். உழிஞை பாடிய பாண்மகளிரை, இனிதாகப் பாதுகாத்து அவர்களுக்கு மகிழ்ச்சியைச் செய்தான் என வரும் பாடலைக் கொண்டு பாணர்கள் உழிஞைத் திணைப் பாடல்களைப் பாடினர் என்றும் அறிந்துகொள்ள முடிகின்றது.

திணை வகைகள் மட்டுமல்லாது பல்வேறு துறைகளிலும் பாடல்களைப் பாணர்கள் பாடியுள்ளனர்,

இறைவன் ஆகலின் சொல்லுபு குறுகி
மூவேழ் துறையும் முறையுளிக் கழிப்பி (புறம்.152)

இசைப்புலமை சான்றாம் கோலைக் கையில் கொண்டு பாணன், பாடல் துறை இருபத்தொன்றையும் பாடினான் என வரும் பாடலைக் கொண்டு இசைநூலில் இருபத்தொரு துறைகள் இருந்ததாகவும் அதனை முற்றாகவும் பாடும் திறன் வாய்க்கப் பெற்றவன் பாணன் என்பதையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

குரல்புணர் இன்னிசைத் தழிஞ்சி பாடி
இளந்துணைப் புதல்வர் நல்வளம் பயந்த (பதி.57)

பாணர் கையிலுள்ளதும், பணிந்த நரம்புக் கட்டுடையதும், விரலால் மீட்டி இசைத்துப் பழகியதுமான பேரியாழில் பாலைப் பண்ணையமைத்து நல்ல மிடற்றுக் குரலிசையில், தழிஞ்சி என்னும் துறைப்பொருள் பொருந்துமாறு பாடினான். புண்பட்டோரை அன்புடன் தழுவி அவர்களுக்கு ஆறுதல் கூறும் பாட்டுகளைப் பாணர்கள் பாடினர் என்று வரும் பாடல்வரிகளின் மூலம் பாணர்களின் இசைத்திறனை அறிந்து கொள்ள முடிகின்றது.

**பிற இசைக் கலைஞர்கள்**

**அகவலர்**

சங்க இலக்கியப் பாடல்களில் யாழிசைக் கருவியை இசைக்கும் பாணர்களைப் போன்றே பல்வேறு இசைக் கருவிகளையும் இயக்கிய இசைக்குடி மரபினர்களையும் காணமுடிகின்றது. அகவலர் என்போர் கையில் சிறு கோலுடன் ஊர் மன்றத்திலும், தெருக்களில் உள்ள வீடுகளின் முன்பும் பாடல் களைப் பாடியவர்களாக அடையாளம் காணமுடிகின்றது. “அகவுநர் அகவலர் அல்லது அகவர் என்னும் சொற்கள், மயிலைப் போல் ஒலியெழுப்பிப் பாடு, அழை, கூவு எனப் பொருள்படும் 'அகவு' என்னும் வினையடியாகத் தோன்றின.

எனவே அகவு எனும் இச்சொல் அழைப்பவர், கூப்பிடுபவர் என்ற நேர்ப்பொருளை உடையது. பண்டைக்காலத் தமிழ்ச் செய்யுளின் வாய்மொழித் தன்மையைக் குறித்து விவாதிக்கும் போது, அகவன் மகள் என்னும் தொடர் குறிகூறும் மற்றும் கவிதை பாடும் பெண் எனப் பொருள்படும் என்பது குறிக்கப்பட்டது."[8]

அகவலன் பெரும் சுற்றத்தினராய்க் காணப்படவில்லை. பாடல்களில் தனித்த நிலையிலேயே சுட்டப் பெறுகின்றான். போர்க்களத்தை வாழ்த்திப் பாடும் இயல்பினனாகவும் காணமுடிகின்றது. அகவுநர்கள் பற்றி குறிப்பிடும் அம்மன்கிளி முருகதாஸ், "அகவுநர் பற்றிய குறிப்பு சங்க இலக்கியத்துள் மிகக் குறைவே எனினும் இவர்கள் மந்திரச் சடங்குகளுடன் இணைந்தவர்களாகக் காணப்படுகின்றனர். உண்மையில் இவர்களின் பாடல்களிலிருந்து தான் அகவல்பா தோன்றியிருத்தல் வேண்டும் என்பர்"[9] என்று குறிப்பிட்டுள்ளார்.

மன்றம் படர்ந்து மறுகுசிறைப் புக்குக்
கண்டி நுண்கோல் கொண்டுகளம் வாழ்த்தும்
அகவலன் பெறுக மாவே (பதி.43)

அகவலன், ஊர் மன்றங்களிலும் பின்னர் தெருவின் பக்கங்களில் உள்ள வீடுகளின் வரிசை முன்பும் கணுக்கள் திரண்ட கோலினைக் கையாற் கொண்டு போர்க்களத்தை வாழ்த்திப் பாடினர் என வருகின்றது.

மேலும் அகவுநர்கள் தன்மைக் குறித்து அம்மன்கிளி முருகதாஸ், "ஊர் மன்றத்தில் பாடல்களைப் பாடும் அகவுநர்கள் போர்க்களம் சென்று அரசர்களின் வீரம், வெற்றிச் சிறப்பு ஆகியவற்றையும் பாடியவர்களாகக் காண முடிகின்றது. போர்க்களத்தில் இவர்கள் சடங்குகளில் அகவிப்பாடியிருக்க வேண்டும். அவர்கள் பாடிய பாடல்கள் அகவல் என்று பெயர் பெற்றன போலும்"[10] என்று குறிப்பிடுகின்றார்.

வைகறைப் பொழுதில் தலைவனின் / அரசன் இல்லத்தின் முன்பு பாடி வந்தமை பற்றி,

யாம இரவின் நெடுங்கடை நின்று
தேம்முதிர் சிமையக் குன்றம் பாடும்
நுண்கோல் அகவுநர் வேண்டின் (அகம். 208)

தனது அரண்மனை வாயிலில், தன்னைக் காண்பதற்காக வந்து வைகறைப் பொழுதில், தேனடைகள் நிறைந்த உச்சியினை உடைய தன் குன்றத்தைப் பாடும்

அகவுநர் வேண்டினால் பட்டத்து யானையைக் கூட வழங்குவான் வெளியன் வேண்மான் எனக் குறிப்பிடுகையில் அகவுநர் வைகறைப் பொழுதில் பாடல் பாடியமையை அறிந்துகொள்ள முடிகின்றது.

குறுநில மன்னர்களை அகவுநர்கள் நுண்கோல் கொண்டு கிணைப்பறை அடித்து வாழ்த்தியமை பற்றி,

> விசிபிணித்து யாத்த அரிகோல், தெண்கிணை
> இன்குரல் அகவுநர் இரப்பின், (அகம். 249)

வேம்பி என்னும் ஊரில் முசுண்டை என்ற தலைவன் வேலேந்திய படையினர் பலரை உடையவனாய் வாழ்கின்றான். அவனைப் புகழ்ந்து அகவுநர் கோலால் அடித்து தாளம் எழுப்பும் கிணைப்பறை முழக்கிப் பாடினால், நாள்தோறும் அவர்களுக்குப் பல பொருட்களை வழங்குவான்.

அகவுநர்கள் இன்குரல் கொண்டு பாடல் பாடுபவர்களாகவும்,

> .......... அகவுநர்
> நாநவில் பாடல் முழவெதிர்ந் தன்ன (பரி.15)

நாவினால் பல்வேறு பாடல்களை இனிமையுடன் பாடும் அகவுநர்கள் என்று குறிப்பிடுவதன் மூலம் அகவுநர்களின் பாடல் இனிமையை அறிந்து கொள்ள முடிகின்றது.

அகவுநர்களில் பெண்பாலரை அகவன் மகளிர் என்று அழைத்தனர். இவர்கள் வெள்ளிப் பூண்களையுடைய நுண்கோல் கொண்டு தலைவியர்க்கு குறி கூறுபவர்களாகக் காணப்பட்டனர். "சங்க காலத்தில் அவள் கட்டுவிச்சி எனப்பட்டாள். அகவல் என்பதற்கு அழைத்தல் என்று பொருளாகும். தெய்வங்களை அழைத்துக் கூறும் இயல்புடையவள் ஆனமையின் அவள் அகவன் மகள் எனப்பட்டாள்."[11]

> வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர்
> மடப்பிடிப் பரிசில் மானப்
> பிறிதொன்று குறித்தது அவன் நெடும்புற நிலையே (குறு. 298)

வெள்ளிப் பூண் பூட்டிய சிறிய கோலையுடைய அகவல் மகளிர் வாய்விட்டுச் சொல்லாமல் பெற விரும்பும் பெண் யானை பரிசிலைப் போன்று என வரும் பாடலிலும்,

> அகவன் மகளே! அகவன் மகளே!
> மனவுக்கோப்பு அன்ன நன்னெடுங் கூந்தல்

அகவன் மகளே! பாடுக பாட்டே!
இன்னும் பாடுக பாட்டே! அவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே (குறு. 23)

குறி கூறும் அகவன் மகளை நோக்கி தலைவி, தலைவனுடைய மலை வளத்தைப் பாடும் படி வேண்டுகின்றாள் என வரும் பாடலிலும் அகவன் மகள் நுண்கோல் கொண்டு குறி கூறுபவளாகக் காணமுடிகின்றது.

வள்ளல்கள் பாணர்களைப் புரத்தலைப் போன்றே அகவுநர்களைப் புரத்தலையும் பெருமையாகவும் சமூகக் கடமையாகவும் கொண்டனர். அவர்களுக்குப் பல்வேறு பரிசில்களையும் வழங்கினர்.

நுணங்குகண் சிறுகோல் வணங்குஇறை மகளிரொடு
அகவுநர் பரந்த அன்பின் கழல் தொடி (அகம். 97)

அகவுநர்களைப் பாதுகாக்கும் நன்னன் வேண்மான் என அரசனைப் போற்றிய போதும்,

புன்தலை மடப்பிடி அகவுநர் பெருமான் (அகம். 113)

அகவுநர்களைப் புரக்கும் தலைவனே என வாழ்த்திய போதும்,

நுண்கோல் அகவுநர்ப் புரந்த பேர் இசை
சினங்கெழு தானை, தித்தன் வெளின் (அகம். 152)

இசைக் கோலினை ஏந்திய அகவுநர்களைப் புரந்து புகழ் ஈட்டியவன் தித்தன் வெளியன் எனக் குறிப்பிடும் பாடலிலும், வள்ளல்கள்/அரசர்கள் அகவுநர்களைப் புரந்து புகழ் ஈட்டியமையை அறிந்துகொள்ள முடிகின்றது.

சங்க இலக்கியப் பாடல்களில் அகவுநர்கள் நுண்கோலுடனேயே சார்த்திப் பேசப்பட்டனர்.

வெண்கடைச் சிறுகோல் அகவன் மகளிர் (குறு. 298)
நுண்கோல் அகவுநர் (அகம். 208)
அறிகோல் ... அகவுநர் (அகம். 249)
நுண்கோல் கொண்டு அகவலன் (பதி. 43)
நுணங்குகண் சிறுகோல் ..... அகவுநர் (அகம். 97)

அகவுநர் / அகவன் மகள் எனப்பட்டோர் நுண்கோலினைக் கையில் கொண்டு ஊர் மன்றத்திலும், தெருக்களிலும், போர்க்களத்திலும் பாடல்களைப் பாடும் இசைக்குடி மக்களாக அறிந்துகொள்ள முடிகின்றது.

**வயிரியர்**

வயிரியர் எனப்படும் இசைக்குடி மரபினரைச் சங்க இலக்கியப் பாடல்களின் வாயிலாக அறிந்துகொள்ள முடிகின்றது. விழாக்களின் போது ஆடுபவர்களாகவும் ஊர் மன்றத்திலும் தெருக்களின் முன்பும் பாடுபவர்களாகவும் அடையாளம் காணமுடிகின்றது. "வயிரியர் என்னும் சொல் மூங்கில், ஊதுகொம்பு எனப் பொருள்படும் வயிர் என்பதிலிருந்து பெறப்பட்டது. இது திருமுருகாற்றுப்படையில் முருகனை வாழ்த்தும் இசைக்கும் இசைக்கருவிகளுள் ஒன்றாகக் கூறப்படுகின்றது. அலைவாய் என்னும் தலம் நோக்கி முருகன் வழக்கம்போல் விரைந்து செல்கையில் தெய்வ முழவுகள் ஒலிக்கின்றன. ஊது கொம்புகள் உரக்க எக்காளமிடுகின்றன. வெண்சங்குகள் அழைக்கின்றன. பெரும்பான்மையான இடங்களில் வயிர், வளை எனப்பெறும் சங்கொடு சேர்த்துக் கூறப்படுகின்றது. இது போர்க் களத்தினும் ஓசை மிகச் செய்யும் எனக் கூறப்படும். ஆடுவோரோடு இக்கொம்புகள் இசைப்போர் எவ்வாறு இணைந்தனர் என்பதை இங்கும் செய்யுட்களில் உள்ளது போலவே அறிய முடியவில்லை."[12] என்று வயிரியர்களைக் குறித்து கைலாசபதி அவர்களும், "இன்னொருவகைக் கூத்தராக வயிரியர் என்போர் இனங்காணப்படுகின்றனர். இச்சொல் வயிர் எனும் வாத்தியத்தை வைத்திருப்போர் எனப் பொருள்படும்"[13] என்று சிவத்தம்பி அவர்களும் வயிரியர்களை ஊதுகொம்பு இசைப்பவர்களாகவே காட்டுகின்றனர். எனினும் சங்க இலக்கியப் பாடல்களில் வயிரியர்கள் முழவு என்னும் இசைக்கருவியுடனேயே சார்த்திப் பேசப்படுகின்றனர்.

*பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்*
*மண்ணமை முழவின் வயிரியர்*
*இன்மை தீர்க்கும் குடிப்பிறந் தோயே* (புறம். 164)

என வரும் பாடலில், முழங்கும் மத்தளத்தை (முழவு) உடைய வயிரியர் என்று, முழவு என்னும் கருவியை இசைப்பவர்களாகவே வயிரியர் காட்டப்படு கின்றனர்.

*செய்தீர் நாவின் வயிரியர் பின்றை*
*மண்ஆர் முழவின் கண்ணகத்து அசைத்த* (அகம். 155)

கால் பதித்து நடக்கும் புலியின் அடிச்சுவடு, குற்றமறப்பாடும் வயிரியர் முழக்கும் முழவில், விரலால் அடிப்பதால் உண்டாகும் வடுவைப் போலத் தோன்றும்,

> வழைஅமல் அடுக்கத்து, வலன்ஏர்பு, வயிரியர்
> முழவு அதிர்ந் தன்ன முழக்கத்து ஏறொடு (அகம். 328)

மரங்கள் நிறைந்த மலைச் சாரலில் மேகங்கள் இடிகளுடன் கூடி மிக்க மழை பெய்த நள்ளிரவு நேரமானது வயிரியர் எழுப்பும் முழவின் ஓசைபோல் இருந்தது.

> புலம்பிரி வயிரியர் நலம்புரி முழவின்
> மண்ணார் கண்ணின் அதிரும்
> நன்ன ராளன் நடுங்குஅஞர் நிலையே. (நற். 100)

வயிரியர் வைத்துள்ள முழவு அதிருவது போல, என வரும் அகப் பாடலிலும், வயிரியர்கள் முழவு என்னும் கருவியுடனேயே தொடர்புபடுத்தி பேசப்படுகின்றனர். எனவே, வயிரியர் என்னும் குடியினர் முழவு என்னும் இசைக்கருவியை இயக்கிய குடியினராகக் கொள்ளமுடிகின்றது.

ஊர் மன்றத்தில் வயிரியர் இசைத்தல் பற்றி,

> மன்றம் போந்து மறுகுசிறை பாடும்
> வயிரிய மாக்கள் கடும்பசி நீங்கப்
> பொன்செய் புனைஇழை ஒலிப்பப் பெரிது உவந்து (பதி. 23)

இசைக் கருவிகளைக் கொண்ட வயிரியர், ஊர் மன்றத்தினைச் சேர்ந்து பின்பு தெருவின் இரு புறங்களிலுள்ள வீடுகளின் முன்னர் பாடுவர் என வரும் பாடலின் மூலம் வயிரியர்கள் ஊர் மன்றத்திலும் தெருக்களில் உள்ள வீடுகளின் முன்பு பாடி அதற்கான பரிசில்களைப் பெற்றுள்ளனர் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

வயிரியர் இன் இசை ஆர்ப்பினும் (அகம். 45) என வரும் தொடர், வயிரியர் மிகுந்த இசைத் திறம் மிக்கவர் என்று அறிந்து கொள்ள துணைசெய்கின்றது.

விழாக்களில் பங்கேற்று இசைத்தமை பற்றி,

> அழியா விழவின் இழியாத் திவவின்
> வயிரிய மாக்கள் பண் அமைத்து எழீஇ
> மன்றம் நண்ணி மறுகுசிறை பாடும் (பதி. 29)

நீங்காத விழாக்களையும், இறங்காத வார்க்கட்டுக் கொண்ட யாழினையும் உடையதாய் வயிரியர்கள் யாழில் பண்களை அமைத்து, ஊர் மன்றம் சேர்ந்து, பின்பு தெருப்பக்க வீடுகளின் முன்னர்ப் பாடிச் செல்லும் இயல்புடையவர்.

விழவின் ஆடும் வயிரியர் மடிய (மது. 628)

மதுரையின் வருணனையில், இடைச்சாமத்தில் விழாக்களில் ஆடும் வயிரியர்களும் உறங்குகின்றனர் எனக் குறிப்பிடுகையில் வயிரியர் விழாக்களில் ஆடுவோர் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

போர்க்களத்தில் பாடியமை பற்றி,

நிறைந்து நெடிது இராத் தசும்பின் வயிரியர்
உண்டெனத் தவாஅக் கள்ளின்
வண்கை வேந்தே; நின் கலிமகி ழானே (பதி. 43)

போர்க்களத்தில் பாசறையில் இரவு நேரத்தில், அரசன் வயிரியர்களுக்கு கள் குடத்தினை அவர்கள் குடித்து இன்புற வழங்கினான் என வரும் பதிவினைக் கொண்டு அரசனுடன் வயிரியர் போர்க்களத்திற்கும் சென்றுள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

சங்கச் சமூகத்தில் பாணர், புலவர்களைப் போன்றே வயிரியர்களும் மிகுந்த முக்கியத்துவம் பெற்றனர் என்பதை,

பாணர் வருக! பாட்டியர் வருக!
யாணர்ப் புலவரோடு வயிரியர் வருக! (மது. 749)

பாண் இசைக்கும் பாணர்களே வருக! பாடும் பெண்டிர்களே வருக, புதிது புதிதாகப் பாடும் புலவரொடு, வயிரியர்களே வருக என்று அரசன் வரவேற்று மகிழ்கின்றான்.

பாணர் புலவர்களைப் போன்று வயிரியர்களுக்கும் அரசர்கள் பல்வேறு கொடைகளை வழங்கிப் புரந்துள்ளான். வயிரியர்களைப் பாதுகாத்தல் சமூகக் கடமையாகக் கருதப்பட்டது.

விரிஉளை மாவும் களிறும் தேரும்
வயிரியர் கண்ணுளர்க்கு ஓம்பாது வீசி (பதி. 20)

உயர்ந்த புகழினைக் கொண்ட அரசன் குதிரை, யானை, தேர் போன்றவற்றை வயிரியர்க்கும் கண்ணுளர்க்கும் வரையாது வழங்கினான்.

*புறஞ்சிறை வயிரியர்க் காணின் வல்லே*
*எஃகுபடை அறுத்த கொய்சுவல் புரவி*
*அலங்கும் பாண்டில் இழைஅணிந்து ஈம்என (பதி.64)*

அரசன் வயிரியர்களைக் கண்டால், விரைவாக அவர்களுக்குக் குதிரைகளையும், தேர் பூணும் எருதுகளையும் உரிய அலங்காரம் செய்து கொடுத்தான் என்று அறிந்துகொள்ள முடிகின்றது.

*செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க்கு ஈந்த*
*முந்நீர் விழவின் நெடியோன் (புறம்.9)*

செம்பொன்னை வயிரியர்க்கு வழங்கிக் கடல் விழா எடுத்த நெடியோன் என்று அரசன் புகழப்படுகின்றான்.

*அரும்கறை அறைஇசை வயிரியர் உரிமை*
*ஒருங்குஅமர் ஆயமொடு ஏத்தினர் தொழவே (பதி.10)*

என வரும் பாடலில், அவன் நாட்டிலுள்ள வயல்கள் தோறும் பொன்னைப் பரப்பும் அதன் இயல்பு என்றென்றும் மாறாமல் நிகழ்வதாகுக என்று அரசனை வயிரியர் வாழ்த்தினர்.

*நோனாச் செருவின் வலம்படு நோன்தாள்*
*மான விறல்வேள் வயிரியம் எனினே (மலை.163)*

பகைவரை வெல்லும் போரினையும், மானத்தையும், வெற்றியையும் உடைய நன்னனது வயிரியர் என்று கூறுங்கள் எனவரும் பாடலின் மூலம் நன்னனுக்கு நிலையான வயிரியர்கள் இருந்தனர். என்பதையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

**கோடியர்**

கோடியர் எனப்படும் இசைக்குடி மரபினரும் பாணர்களைப் போன்றே மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தவர்களாக இருந்தனர். பெரும் சுற்றத்தினராகக் காணப்பட்ட இவர்களுக்கு அரசன் பல்வேறு கொடைகளையும் வழங்கிப் புரந்துள்ளான். "கோடியர் என்னும் சொல் ஊதுகொம்பு எனப் பொருள்படும் கோடு என்பதிலிருந்து பெறப்பட்டுள்ளது. விலங்குகளின் கொம்பு என்பது இதன் தொடக்ககாலப் பொருளாக இருந்திருக்கலாம். எனவே கோடியர் என்பதற்குப் பொருளைச் சரியாக வரையறுத்துக் கூறினால் கொம்பை ஊதுவோர் எனப் பெறப்படும்."[14] என வரும் கருத்து கோடியர்களை ஒரு

கருவியுடன் மட்டுமே தொடர்புபடுத்திக் கூறுவதாக அமைந்துள்ளது. கோடியர் ஊதுகொம்பு மட்டுமல்லாது வேறு பல இசைக் கருவிகளையும் கொண்டிருந்தனர்.

தொகுசொற் கோடியர் தூம்பின் உயிர்க்கும் (அக.111)

கொடும்பறைக் கோடியர் (மது.523)

கடும்பறைக் கோடியர் (மலை.236)

என வரும் பாடல்கள், கோடியர்கள் வளைந்த கண்களையுடைய பறைகளை இசைத்தனர் எனக் குறிப்பிடுகின்றன.

கோடியர் முழவு மருள் திருமேனி (புறம்.368)

சுரம்செல் கோடியர் முழவின் (மலை.143)

முதுவாய்க் கோடியர் முழவொடு (பட்.253)

என வரும் அடிகள், கோடியர் முழவு என்னும் கருவியை இசைத்தனர் என்பதை வெளிப்படுத்தி நிற்கின்றன.

பல்லியக் கோடியர் புரவலன் பேரிசை (சிறு.125)

....... கோடியர்
பெருங்கல் மீமிசை இயம்எழுந் தாங்கு (அகம்.359)

எனவரும் பாடலடிகள் கோடியர்கள் பல்வேறு இசைக் கருவிகளையும் இசைத்தனர் என்று விளக்கி நிற்கின்றது. எனவே கோடியர் என்போர் ஒரு கருவியுடன் மட்டுமல்லாது வேறு பல கருவிகளையும் இசைத்தனர் என்று அறிந்துகொள்ள முடிகின்றது.

முதுவாய் எனும் சொல், மரபுவழிப்பட்ட தொல்குடியினர்க்கும் வருவது உரைக்கும் ஆற்றலுடைய மனிதர் அல்லது உயிர்களுக்கு மட்டுமே அடைமொழியாய் வழங்கினர். அவ்வகையில் பாணர்களை முதுவாய்ப் பாணர் என்று அழைத்தமை போன்றே கோடியர்களையும் முதுவாய்க் கோடியர் (குறு.78, பட்.253) என்று அழைத்துள்ளனர். எனவே, கோடியர்களும் சமூகத்தில் மிக முக்கியத்துவம் வாய்ந்தவர்களாகவும், அவர்களின் சொற்களுக்கு மதிப்பும் அளித்தனர் என்று கருத முடிகின்றது.

கோடியர் என்போர் பெரும் சுற்றத்தினராகவே காணப்பட்டுள்ளனர். "கோடியர் என்பது வடிவமாகக் குழு முழுமையையும் குறிக்கின்றது"[15] என்று கா.சிவத்தம்பி குறிப்பிடுகின்றார். இவர்கள் குழுவாகத் தங்கள் கலையை அரசன், மக்கள் மத்தியில் நிகழ்த்திக் காட்டி பரிசில்களைப் பெற்றுள்ளனர்.

இரும்பேர் ஒக்கல் கோடியர் (அக.301)

கோடியர் பெருங்கிளை வாழ (பதி.42)

கோடியர் கடும்புடன் வாழ்த்தும் (மது.523)

எனவரும் தொடர்கள், பாணர்களைப் போன்றே கோடியர்களும் பெரும் கூட்டத்தினராக இருந்துள்ளனர் என்பதை உறுதிபடுத்துகின்றது.

கோடியர் விழாக்களில் ஆடுபவர்களாகக் காட்சிப்படுத்தப்பட்டுள்ளனர்.

---- விழவில்
கோடியர் நீர்மை போல முறைமுறை (புறம்.29)

விழாவில் ஆடும் கோடியர், வேடம் மாறி மாறி ஆடிச் செல்லுதல் போல, முறை முறையே தோன்றி இருந்து மறையும் உலகில் மகிழ்வுடன் இருப்பதாக உன் சுற்றம் என அரசனை வாழ்த்தும் புலவர், கோடியர் விழாவில் ஆடுபவர் எனக் கூறுகின்றார்.

ஆடுமயில் முன்னது ஆக, கோடியர்
விழவு கொள் மூதூர் (அகம்.352)

என வரும் அகப்பாடல் அடிகள், கோடியர் விழாக் கொண்டாடும் முதுமை வாய்ந்த ஊர் எனக் குறிப்பிடுகையில் கோடியர் விழாக் கொண்டாடுபவர் எனவும்,

கோடியர் விழவின் முன்னர் ஆடல்
வல்லான் அல்லன்; வாழ்க அவன் கண்ணி! (பதி.56)

சேரலாதன், விழாக்கள் நிலை பெற்று விளங்கும் தன் இடமகன்ற பேரூர்களில் கோடியர் முழவொலிக்குத் தக, முன்னர் நின்று ஆடுவதில் வல்லவனாக மாட்டான் மாறாகப் போர்க்களத்தில் பகைவரை வென்று வீரர்களோடு வெற்றிக் களிப்பில் ஆடுவான் எனவரும் பாடலடிகளில் கோடியர் விழாக்களில் ஆடுபவர் என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது (அகம். 301).

கோடியர் அரசனை நாடிச் சென்று, அவனைப் புகழ்ந்து பாடியும் மகிழ்வித்தும் பல்வேறு பரிசில்களைப் பெற்று வந்துள்ளனர். கோடியர் பெரும் கிளையுடன் அரசனைக் காண பயணித்தது பற்றி,

சுரம் செல் கோடியர் (நற். 212)

காட்டின் கொடிய வழியிடத்தே கோடியர் சென்றனர்.

அருஞ்சுரக் கவலை அசைஇய கோடியர் (அகம். 359)

அரிய காட்டின் பிரிவுபட்ட வழிகளில் தங்கியிருக்கும் கோடியர், (மலை.143) தங்கள் இசைக் கருவிகளை எடுத்துக் கொண்டு காட்டின் வழியிடத்தே கோடியர் சென்றனர், என வரும் பாடலடிகள் கோடியர் அரசனைக் காணவும் பரிசில்களைப் பெறவும் நிலங்களை கடந்து சென்றனர் என்பதை விளக்கி நிற்கின்றது.

காடுமிக நெடிய என்னார், கோடியர்
பெரும்படைக் குதிரை நற்போர் வானவன்
திருந்துகழற் சேவடி நசைஇப் படர்ந்தாங்கு (அகம். 309)

காடுகள் மிகவும் தொலைவில் உள்ளன என்று கருதாமல், பெரிய குதிரைப் படையுடன் நல்ல போர்த்திறம் உடைய சேர மன்னரிடம் வீரக் கழல் அணிந்த சிவந்த அடிகளை விரும்பிப் பரிசில்களைப் பெறுவதற்காகக் கோடியர் செல்வர் என வரும் பாடல் அடிகளைக் கொண்டு கோடியர்கள் அரசனைக் காணச் சென்ற விதம் பற்றி அறிந்துகொள்ள முடிகின்றது.

அரசன் கொடைகளை வழங்கியமை பற்றி,

இஞ்சிவீ விராய பைந்தார் பூட்டிச்
சாந்துபுறத்து எறிந்த தசும்புதுளங்கு இருக்கைத்
தீம்சேறு விளைந்த மணிநிற மட்டம்
ஓம்பா ஈகையின் வண்மகிழ் சுரந்து,
கோடியர் பெருங்கிளை வாழ... (பதி. 42)

கோடியர்களுக்கு இஞ்சியும் பூவும் விரவத் தொடுத்த மாலையினைக் கழுத்தில் கட்டிச் சந்தனத்தை வெளிப்பகுதியில் தெளித்து இருக்கையில் வைக்கப்பட்டுக் களிப்பு மிகுதியால் அசையும் கள்ளுக்குடங்களை வழங்கினான் எனவும்,

குறும்பொறை நன்னாடு கோடியர்க்கு ஈந்த (சிறு. 109)

வல்வில் ஓரி, பல சிறு மலைகளையுடைய தனது நல்ல வளமுடைய நாட்டைக் கோடியர்க்குப் பரிசிலாகக் கொடுத்தான் எனவும், கோடியர்களுக்குக் குறையாது கொடுத்த பரிசில் சிறிய உணவு என்றும் (அகம். 301) அறிந்து கொள்ள முடிகின்றது.

பல்லியக் கோடியர் புரவலன் பேரிசை (சிறு. 125)

பல்வகை இசைக்கருவிகளை இயக்கும் கோடியரைப் பாதுகாத்து பெரும் புகழ் கொண்டவன் நல்லியக் கோடன் எனவரும் ஆற்றுப்படை அடியின் மூலம் கோடியரைப் பாதுகாத்தல் அரசனின் புகழை மேம்படுத்தும் செயலாகக் கருதப் பட்டது என்பதை அறிந்து கொள்ள வகை செய்கின்றது.

கோடியர் என்பவர் பாணரைத் தலைவராகக் கொண்ட இசைக் குழுவிலும் இடம் பெற்றனர். பாணரை ஆற்றுப்படுத்துகையில் கோடியர் தலைவ (பொரு. 57) என்பதும், கருத முடிகின்றது.

**விறலியர்**

விறலியர் எனப்படும் பெண்கலைஞர்கள் சங்க இலக்கியத்தில் தனித்த முக்கியத்துவம் வாய்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர். விறலி, பாடினி, பாட்டி, மாதங்கி போன்றோர் பாணர் பெண்களாகக் கட்டமைக்கப்பட்ட போதும், அடிப்படையில் கலை வேறுபாடு கொண்டவர்களாகக் காண முடிகின்றது. புலவர் மரபு இவர்களைத் தனித்தனி பெயர்களில் சுட்டியமை கொண்டு இதனை மேலும் உறுதிபடுத்திக் கொள்ளமுடிகின்றது. உள்ளக் குறிப்பு புறத்து வெளிப்பட ஆடுபவள் விறலி எனப் பொருள் கொண்டமையால், விறலியர் அடிப்படையில் நிகழ்த்துக் கலை மரபினராகவே அடையாளம் காண முடிகின்றது.

கூத்தர் பாணர் பொருநரைப் போன்றே விறலியும் ஆற்றுப்படைக்கு உரியவர்களாகத் தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. இப்பெண்பாற் கலைஞர்கள் பாணர்களைச் சார்ந்தும், சாராமலும் தங்கள் கலையை வெளிப் படுத்திப் பரிசில்களைப் பெற்றனர். விறலியர் குறித்து கைலாசபதி, "ஆடலும் பாடலும் அவர்களின் தொழில் என்பது ஐயத்திற்கிடமின்றி இருந்த நிலையில் அவர்கள் அரசர்கள் மற்றும் குறுநில மன்னர்களின் வெற்றிகளைக் குறித்த போர்ப் பொருண்மையுடைய நிகழ்ச்சிகளை நிகழ்த்தியமையில் அவர்கள் விறலியர் எனப்பட்டனர்"[16] என்று குறிப்பிடுவது பொருத்தமுடையதாகும்.

தோற்ற வருணனை,

| | |
|---|---|
| ஒண்நுதல் விறலி | *(புறம். 62)* |
| வாள்நுதல் விறலி | *(புறம். 105)* |
| மெல்லியல் விறலி | *(புறம். 133)* |
| வளைக்கை விறலி | *(புறம். 135)* |

சில்வளை விறலி (பதி. 40)

கொடி மருங்குல் விறலி (புறம். 139)

கோதைத் துளங்கியல் விறலி (பதி. 49)

அசைநடை விறலி (பதி. 51)

மின்இழை விறலி (பதி, 54)

இன்குரல் விறலி (மலை. 358)

எனப் பல்வேறு அடைமொழியுடன் அழைக்கப் பெற்றாள். மேலும், "ஆற்றுப்படை விறலியின் தோற்றமாக சங்க இலக்கியத்தில் அவளது அழகும் கவர்ச்சியும் அழுத்திப் சொல்லப்படுகிறது"[17] என வரும் கருத்தும் அறியத்தக்கது.

எண்ணெய் பூசப்பெற்ற கருமையான மென்மையான கூந்தல், மழை பெய்யும் மேகம் போன்ற அழகைக் கொண்டிருந்தது. அக்கூந்தல் போன்ற கருந்தோகைகளைப் பரப்பி ஆடும் ஆண்மயில்கள், விறலியர் சாயலுக்குத் தாம் ஒப்பாகவில்லையே எனக் கருதி பெண்மயில்களின் நிழலில் மறையும். ஓடி இளைத்த நாயின் நாக்குப் போன்ற அழகிய மென்மையான அணிகள் இல்லாத பாதங்கள். அவ்வடியைத் தொடர்ந்து மேலே செல்லும் பெண்யானையின் நிலம் தோயும் துதிக்கை போன்ற திரண்ட செறிவான தொடைகள். மலை வாழையின் பூப்போன்ற கூந்தல் முடிச்சு. கூந்தல் முடிச்சின் கீழ் வேங்கை மலர் போன்ற சுணங்கு (தேமல்). அச்சுணங்கினை வேங்கையின் நாள்மலர் எனக் கருதி விரும்பி ஆரவாரிக்கும் வண்டுகள். சுணங்கு, சிதறிக்கிடந்தாற் போன்ற புதிய கோங்கின் மொட்டுக்களை இகழ்ந்து நகையாடும் தோற்றத்தினையுடைய அணிகலனின் அடியில் கிடக்கும் விரும்பத் தகுந்த முலைகள். நுங்குகளின் இனிய நீர் ஊறும் தன்மை வாய்ந்த பற்கள். காட்டில் வளர்ந்த முல்லை மொக்குகள் போன்ற கற்பு. மென்மையான இயல்பினையுடையவள், மான் போன்ற பார்வையள், ஒளி பொருந்திய நெற்றியினையுடைய விறலியர் என்று சிறுபாணாற்றுபடையில் வருணிக்கப்பட்டுள்ளாள்.

பாணர்களுடன் இணைந்து கலை நிகழ்த்தியமை,

விறலி, பாணர்களுடனும் பிற கலைஞர்களுடனும் இணைந்து கலையை நிகழ்த்தியுள்ளாள்.

நல்யாழ் ஆகுளி பதலையொடு சுருக்கிச்
செல்லா யோதில் சில்வளை விறலி (புறம். 64)

சிலவாகிய வளையலை அணிந்த விறலியே, நல்ல யாழையும் சிறு பறையையும் ஒரு தலை மாக்கிணையையும் எடுத்துக் கொண்டு செல்லுவோம் என வரும் பாடலில் பாணர்களுடன் பல கருவிகளையும் எடுத்துச் சென்றமை தெரிகின்றது. பாணர்களுடன் விறலி சென்றமை குறித்து கைலாசபதி, "இசைக் கருவிகளைப் பொறுத்த அளவில் ஆண்களுக்குரியன பெண்களுக்குரியன என்ற வேறுபாடு இருந்ததாகத் தெரியவில்லை, பிறரைப் போலவே மகளிரும் யாழ் ஆகுளி, பதலை, குழல், முழவு ஆகியவற்றை எடுத்துச் சென்றனர்"[18] என்று குறிப்பிடுகின்றார்.

சுகிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி
விரையொலி கூந்தல்நும் விறலியர் பின்வர (புறம். 109)

பதமாகக் கட்டப்பட்ட நரம்பினையுடைய சிறிய யாழை மீட்டிக் கொண்டு, மணமிக்க நீண்ட கூந்தலையுடைய உங்கள் பெண்டிர் விறலியராகப்பின் வர ஆடியும் பாடியும் சென்றால் பாரியிடம் பரிசில் பெறலாம் என வரும் பாடலில் பாணருடன் விறலிசென்றமையும் தெரிகின்றது.

பாடுவல் விறலிஓர் வண்ணம்; நீரும்
மண்முழா அமைமின் (புறம்.152)

என வரும் பாடலில், பாணன் பாட்டு பாடியமையும், விறலியர் முழவுப் பறையை முழங்கியமையையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

ஆடுக விறலியர்; பாடுக பரிசிலர் (பதி.58) என வரும் பாடலில் விறலியர் ஆடியமையும் பாணர் முதலானோர் பாடியமையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

விழவுகொள் மூதூர் விறலி பின்றை
முழவன் போல அகப்படத் தழீஇ (அகம். 352)

முதுமை வாய்ந்த ஊரில் விறலியின் பின்னே நின்று முழவை முழவன் இயக்கினான் எனக் குறிப்பிடுகையில் விறலி பிற இசைக்கலைஞர்களுடன் இணைந்து கலையை வெளிப்படுத்தியுள்ளாள் என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

தனியாகக் கலையை நிகழ்த்தியமை,

விறலி தனித்த நிலையில் அரசனைக் காணச் சென்று, பரிசில் பெற்றமையும், விழாக்களின் கலை நிகழ்த்தியமையும் பாடல்களில் காணமுடிகின்றது.

ஒருதலைப் பதலை தூங்க, ஒருதலைத்
தூம்பகச் சிறு முழாத் தூங்கத் தூக்கிக்
கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யார் எனச்
சுரன்முதல் இருந்த சில்வளை விறலி (புறம். 103)

காவடியின் ஒரு பக்கம் பதலையும் மற்றொரு பக்கம் சிறு முழாவும் தொங்குமாறு தூக்கி, உணவு இல்லாமையில் கவிழ்த்து வைக்கப்பட்ட கலத்தைத் திருப்பிவைக்க உணவு தருவார் எவர் என்று வறண்ட நிலத்தில் இருக்கும் விறலியே என வரும் பாடலில் விறலி தனியாக அரசனை வாழ்த்தச் சென்றமையும்,

வளிமுனை அவிர்வரும் கொடிநுடங்கு தெருவில்
சொரிசுரை கவரும் நெய்வழிபு உராலின்
பாண்டில் விளக்கம் பரூஉச்சுடர் அழல
நல்நுதல் விறலியர் ஆடும்
தொல்நகர் வரைப்பின் அவன் உரைஆ னாவே! (பதி. 47)

கொடிகள் பொருந்திய தெருவில் நெய் ஊற்றப்பட்ட விளக்கின் திரிக்குழாயில் நெய் பரவி வழிவதால், கால்களைக் கொண்ட விளக்கில் பெரிய தீச்சுடர் ஒளிவிட அவ்வொளியில் நல்ல நெற்றியினையுடைய விறலியர் ஆடுவர் எனக் குறிப்பிடுகையில் விறலியர் தனித்து கலையை நிகழ்த்தியமையும் (நற். 328),

ஆடுமகள் போலப் பெயர்தல்
ஆற்றேன் தெய்ய, (அகம். 370)

ஆடுமகள் அணிதுறந்து, சாதாரண மகளாகச் செல்வது போல மீண்டு செல்வதற்கு இயலாதவளாக உள்ளேன் என்று தலைவி கூறும் பாடலில் விறலி தனித்து கலை நிகழ்த்தியமையும் அறிந்துகொள்ள முடிகின்றது.

பரிசில் பெறுதல்,

விறலிக்குப் பல்வேறு வகையான பரிசில்களை வழங்கி அரசன் புரந்துள்ளான்.

பாணன் சூடிய பசும்பொன் தாமரை
மாண்இழை விறலி மாலையொடு விளங்க (புறம். 141)

அரசன் பாணர்களுக்குப் பொற்றாமரையும் விறலிக்குப் பொன் மாலையும் வழங்கியுள்ளான் (பெரும். 486), அரசனைப் புகழ்ந்து பாடிய விறலியர் பல பெண் யானைகளைப் பரிசில்களாகப் பெற்றுள்ளனர்.

ஒண்நுதல் விறலியர் பாணி தூங்க
மகிழ்ப்பதம் பல்நாள் கழிப்பி (பொரு. 110-11)

செறிவு அமைந்த மத்தளத்தை இயக்கி சிறந்த யாழையும் இயக்கி விறலியரை இசைபாடச் செய்து, ஆடச் செய்து கள்ளும் உணவும் தந்து எங்களை மகிழ்வித்தான் என வருகையில் பாணர்க்கும், விறலியர்க்கும் உணவு கொடை வழங்கப்பட்டது.

எண்பிழி நெய்யொடு வெண்கிழி வேண்டாது
சாந்துதலைக் கொண்ட ஓங்குபெருஞ் சாரல்
விலங்குமலை அடுக்கத் தானும்
கலம்பெறு விறலி ஆடும்இவ் ஊரே (நற். 328)

விறலியர் மன மகிழ்ச்சியினால் எண்ணெயும் துணியும் வேண்டாமல் அணி கலன்களைப் பரிசிலாகப் பெற்று ஆடும் இவ்வூர் என வரும் அகப்பாடலில் விறலிக்கு முன்பு எண்ணெயும் துணியும், பரிசிலாகப் வழங்கப் பெற்றதாகவும் பின்னர் அணிகலன்களைப் பெற்றாள் எனவும் அறிந்துகொள்ள முடிகின்றது.

நரம்பின் முரலும் நயம்வரு முரற்சி
விறலியர் வறுங்கைக் குறுந்தொடி செறிப்ப (மது. 217-18)

அரசன் முன்பு, யாழிசை போன்று நயமாகப் பாடிய, வெறுங்கையையுடைய விறலியருக்கு குறுந்தொடிகளைப் பரிசில்களாகத் தந்தனர். இவ்வாறு பல்வேறு பரிசில்களை விறலியர்க்கு வழங்கி அரசன் புரந்துள்ளான்.

**சமையல் செய்தல்**

விறலியர் அரசன் அரசவையில் பல நாட்கள் தங்கியிருந்து பரிசில்களைப் பெற்று வந்த போது, மேலும் வரும் பரிசிலர்க்கு உணவு சமைத்தும் வழங்கி உள்ளனர்.

உண்மின் கள்ளே அடுமின் சோறே
எறிக திற்றி! ஏற்றுமின் புழுக்கே!
வருநர்க்கு வரையாது பொலங்கலம் தெளிர்ப்ப
இருள்வணர் ஒலிவரும் புரிஅவிழ் ஐம்பால்
ஏந்துகோட்டு அல்குல் முகிழ்நகை மடவரல்
கூந்தல் விறலியர் வழங்குக அடுப்பே! (பதி. 18)

விறலியரே நீங்கள் கள்ளினை உண்ணுங்கள் அதுவன்றி விருந்தினர் உண்பதற்காகச் சோற்றினைச் சமையுங்கள்; தின்பதற்கு இறைச்சியினை அறுப்பீராக; தின்பதற்காக வேகவைக்கத்தக்க பொருட்களை அடுப்பினில் ஏற்றுங்கள். இருண்டு சுருண்டு தழைத்த நெறிப்புடைய கூந்தலையும், ஏந்திய புன்முறுவலையும் இளமையையுமுடைய கூந்தல் விறலியர் எனவரும் பாடலிலும்,

ஏற்றுக உலையே; ஆக்குக சோறே
கள்ளும் குறைபடாமல் ஓம்புமின்! ஒள்இழைப்
பாடுவல் விறலியர் கோதையும் புனைக
அன்னவை பிறவும் செய்க; என்னதூஉம்
பரியல் வேண்டா; வருபதம் நாடி; (புறம். 172)

உலையை ஏற்றுக; சோற்றை ஆக்குக; கள்ளையும் குறையாமல் வடிக்க; அணிகலம் அணிந்த பாடல் வல்ல விறலியரே மாலையும் சூடுக; அத்தகைய பிறவற்றையும் செய்க; சற்றும் வருந்துதல் வேண்டா எனவரும் பாடலிலும் வரும் விருந்தினர்க்காக அரசன் சார்பாக விறலி சமையல் செய்தமையை அறிந்து கொள்ள முடிகின்றது.

**கடவுளைப் பாடுதல்**

விறலியர் காட்டு வழியில் செல்லும் போது கடவுளரைப் பாடி வணங்கிச் சென்றுள்ளனர். இக்கருத்தினேயே, "வீரப்பாடல்களுக்கு முன்னதாக மந்திரம் மற்றும் சடங்கு இலக்கியங்கள் இருந்தமை குறித்து விவாதிக்கும் சூழலில், அவர்கள் கடவுளரின் புகழைப் பாடவும் ஆடவும் செய்தனர் எனக் கூறப் பெறுதற்குரியவராகலாம்"[19] என்ற கருத்தும் காணப்படுகின்றது.

குறிக்கொண்டு மரங்கொட்டி, நோக்கிச்
செறிதொடி விறலியர் கைதொழூஉப் பழிச்ச (மலை. 200-01)

வளையலை அணிந்த விறலியர் இறைவன் எம்மை காக்க எனக் கையால் தொழுது, வாழ்த்திச் சென்றனர் எனவும்,

இறும்பூது கஞலிய இன்குரல் விறலியர்
நறுங்கார் அடுக்கத்துக் குறிஞ்சி பாடிக்
கைதொழூஉப் பரவிப் பழிச்சினிர் கழிமின் (மலை. 358-60)

இனிய இசையுடன் நெருங்கிய விறலியர், மணமிக்க கரிய மலை அடுக்கத்திலுள்ள தெய்வங்களைக் கையால் தொழுது, குறிஞ்சிப் பண்ணைப் பாடி சென்றனர்

என்ற குறிப்பும் கொண்டு விறலியர் கடவுளரை வாழ்த்திப் பாடினர் என்று அறிந்துகொள்ள முடிகின்றது.

**சமூக மதிப்பிறக்கம் பெறுதல்**

இனக்குழுச் சமூகத்தில் மதிப்பு மிக்க கலைஞர்களாய்க் காணப்பட்ட விறலியர், முடியாட்சி காலத்தில் மதிப்பிறக்கம் பெற்று தலைவன் தலைவியின் ஊடல் தீர்க்கும் வாயிலாகவும் தலைவன் / அரசனின் அக ஒழுக்கத்தில் பங்கு கொள்ளும் நபராகவும் மாற்றம் எய்தினர். "நகர சமூகத்தில் தலைவர்களின் வாழ்க்கையில் தலைவனின் வாயில்களுள் ஒன்றாக, தலைவனின் அந்தரங்க வாழ்க்கையில் முக்கிய இடம் பெறுவாள்"[20] என்று கூறப்படுவதன் மூலம் தெளியலாம்.

மடக்கண் தகரக் கூந்தல் பணைத்தோள்
வார்ந்தவால் எயிற்றுச் சேர்ந்துசெறி குறங்கின்
பிணையல் அம்தழைத் தைஇத் துணையிலள்
விழக்களம் பொலிய வந்துநின் றனளே
எழுமினோ எழுமின்எங் கொழுநற்கு ஆக்கம் (நற். 170)

இளமை வாய்ந்த கண்களையும், நறுமணம் மிக்க கூந்தலையும், பருத்த தோள்களையும், வரிசை மிக்க பற்களையும், திரண்டு நெருங்கிய துடைகளையும் உடைய இவ்விறலி அவள்தன் அழகில் ஈடு இணை இல்லாதவள். இன்று நம் ஊரில் கொண்டாடப்படும் விழாவே அழகு பெறுமாறு இவ்விறலி இங்கே வந்து நிற்கின்றாள். ஆகையால், இவளிடமிருந்து நம் காதலர்களைக் காக்க வேண்டும் ஓடி வாருங்கள்! ஓடி வாருங்கள் என வரும் தோழி கூற்று பாடலிலிருந்து விறலி கலைமரபிலிருந்து ஆண்களைக் கவருபவளாய் மாற்றமடைந்துள்ளாள் என அறியமுடிகின்றது.

வீரர் அனைவரும் ஏந்திப் புகழ்தற்குக் காரணமானதும், வலிமை நிறைந்து நோய் அற்றதாய் விளங்குவதுமான உன்னுடைய உடம்பினை உன்னைப் பாடுகின்ற பாடல் மகள் காண்பாளாக (பதி.44) என வருவதும், ஒண்நுதல் விறலியர் பூவிலை பெறுகென (புறம்.32) எனவரும் புறப்பாடலில் விறலியரின் பூவிற்கு விலையாக அரசன் மாட மாளிகைகளையும் தருவான் என வரும் பாடலைக் கொண்டும் விறலி முடியாட்சி காலத்தில் சமூக மதிப்பிறக்கம் பெற்றாள் என்தை அறிந்துகொள்ள முடிகின்றது.

**கிணைஞர்**

கிணைஞர் எனப்படும் பொருநர்கள் தடாரிப் பறை இசைக்கும் கலைஞர்களாக சங்கப் பாடல்கள் அடையாளப்படுத்துகின்றன. புறநானூற்றுப் பாடல்கள் பாணர், விறலி, கிணைஞர் (பொருநர்) என்ற மூன்று பெருமரபினரை மட்டுமே விரிவாக அடையாளப் படுத்துகின்றன. சங்க இலக்கிய தொகுப்பு பற்றி, "சங்க இலக்கியப் பாடல்கள் பாடப்பட்ட காலத்திற்கும் அது தொகுக்கப்பட்ட காலத்திற்குமிடையே கால வேறுபாட்டினைக் காண முடிகின்றது"[13] என்று பெ.மாதையன் குறிப்பிட்டுள்ளார். அதன் தொகுப்பு மரபு என்பது பொருண்மை (அகம், புறம்), அடி வரையறை (3-6, 4-8, 9-12, 13-31), எண்ணிக்கை (பரி-70, பதி-100, கலி-150, குறு, நற், அகம், புறம்-400, ஐங்-500) சார்ந்ததாகக் காணப்படுகின்றது. புறநானூற்றுப் பாடல்களின் தொகுப்பு மரபினுள் பாணர், கிணைஞர் என்ற கலை மரபினரின் பாடல்கள் தொழிற்பட்டிருக்கலாம் என்ற கருத்தும் தோன்ற இடம் உள்ளது. புறநானூற்றின் தொடக்கம் முதல் 368 பாடல்கள் வரை (புறம். 70,111 தவிர்த்து) பாணர், விறலி பற்றிய செய்திகளைத் தருவதாகவும், புறம்.369, முதல் 400 வரையிலான பாடல்கள் கிணைஞர் பற்றிய பாடல்களாகவும் காணப்படுவதைக் கொண்டு தொகுப்பு மரபினுள் கலைஞர்கள் பற்றிய கருத்தும் தொழிற்பட்டிருக்கலாம் எனவும் கருத இடம் உள்ளது.

பொருநர் என்ற சொல்லுக்கான பொருளாக தமிழ்ப் பேரகராதி, "பொருநர் என்ற சொல், வீரன், குறிஞ்சி நிலத்தலைவன், படைத் தலைவன், உவமிக்கப்படுவோன், தலைவன், பகைவன் என்றும் ஏர்க்களத்தேனும் போர்க்களத்தேனும் சென்று பாடுங் கூத்தன் என்று பொருள் கூறுகின்றது."[22] சங்க இலக்கியத்தில் பொருநன் என்னும் சொல் தலைவன் என்னும் பொருளிலும் (புறம்.2, 380, 390, 393, நற்.18; அகம்.13,25) வீரன் என்னும் பொருளிலும் (புறம்.386) காணப்படினும், பொராஅப் பொருநரேம் என வரும் பாடல் போர்த் தொழிலைச் செய்யாத பாடல் பாடும் கலை மரபினர் என்று குறிப்பிடுகின்றது.

பொருநர், தெண்கண் மாக்கிணை (புறம். 382) என்னும் கருவியைப் பயன்படுத்தினர். கிணையைப் பயன்படுத்தியமையால் பொருநர், கிணைஞர் என்றும் அழைக்கப்பட்டனர். "தடாரியை, கிணையாக இனங் காண்பது கிணைஞரைப் பொருநருடன் இனங்காண்பதற்கு இட்டுச் செல்லும்[23] என் று கா.சிவத்தம்பி அவர்களும், கிணைஞர், கிணைப் பொருநர் என்ற சொல்லாலும் அழைக்கப்பட்டனர்"[24] என்று ஔவை சு.துரைசாமிப்பிள்ளை அவர்களும் குறிப்பிடும் கருத்தினைக் காண முடிகின்றது.

கிணைஞர்கள் விடியற் பொழுதிலே வள்ளல்களின் இல்லத்தின் முன்பும், தெருக்களிலும் பாடிச் சென்றமையைக் காணமுடிகின்றது.

தண்பனி உறைக்கும் புலரா ஞாங்கர்
மன்றப் பலவின் மால்அரைப் பொருந்தி என்
தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப ஒற்றி (புறம். 374)

குளிர்ந்த பனி பெய்யும் விடியற் பொழுதில் ஊர் மன்றத்தில் நிற்கும் பெரிய பலாமரத்தின் அடியில் இருந்து என் பெரிய தடாரியை அடித்து என வரும் பாடலில் (புறம். 383, 392,394, 397, 398, 400) கிணைஞர் விடியற் பொழுதில் பாடல்களைப் பாடியவர்கள் என்று அறிந்துகொள்ள முடிகின்றது.

கருங்கோல் குறிஞ்சி அடுக்கம் பாட (புறம். 374)

வாடா வஞ்சி பாடினேன் ஆக (புறம். 394)

என வரும் பாடல்களில், கிணைஞர் குறிஞ்சிப் பண்ணை பாடினர் என்றும், "வஞ்சி - பகைமேற் செலவு,"[25] வஞ்சித் துறை பற்றிய பாடல்களைப் பாடினர் என்றும் அறிந்துகொள்ள முடிகின்றது.

மேலும், கிணைஞர்கள் போர்க்களத்திற்கே சென்று பாடல்களைப் பாடியுள்ளனர் (புறம். 373, 369). "பொருநன் என்ற சொல் மற்றவரைப் போல ஒப்பீடு கொள்பவன் என்ற பொருளைத் தெளிவாக்கும். போர்ப் பொருநரின் இத்தகைய வாழ்க்கைப் பாங்கு, அவர்கள் போர் வீரர்களோடு களத்திற்குச் சென்று தங்கள் வீரப்பாடல்களால் அவர்களைக் கிளர்ச்சியுறச் செய்த செய்தியாலும் மிகவும் தெளிவாகிறது. அவர்கள், போர் வீரர்களைப் போல அவ்வீரர்களின் முன்னோர்தம் அருஞ்செயல்களையும் புகழையும் பாடினர்"[26] என வரும் கருத்தைக் கொண்டு, போர்க்களத்திற்குச் செல்லும் வீரர்களும், வீரர்களுக்கு உற்சாகமூட்டுபவர்களும் பொருநர் என்னும் பொதுப்பெயரால் அழைக்கப்பட்டனர் என்று அறிந்துகொள்ள முடிகின்றது.

**தடாரியின் தோற்றம்**

முழுமதி போன்று கிணை காணப்பட்டது (புறம். 393), பெரிய யானையின் அடி போன்று கிணை காணப்பட்டது (புறம். 392) என்று கிணைப்பறைக்கு உவமை கூறப்பட்டது.

முழாஅரைப் போந்தை அரவாய் மாமடல்
நாரும் போழும் கிணையொடு சுருக்கி (புறம். 375)

பனையின் அரம் போன்ற கருக்கையுடைய மட்டையில் இருந்து எடுத்த நாரையும் குருத்தையும் தடாரியுடன் சேர்த்துக் கட்டினர்.

வீங்குவிசிப் புதுப்போர்வைத்
தெண்கண் மாக்கிணை இயக்கி (புறம். 387)

ஆமையின் வெண்ணிற வயிறு போன்று இறுக்கிக் கட்டப்பட்ட புதுத் தோல் போர்த்தப்பட்ட கிணை என்றும், சிறிய திரண்ட கோலுடன் கட்டப்பட்டது (புறம். 383) என்றும், கிணையின் தோற்றத்தைக் காணமுடிகின்றது. கிணையை இயக்கும் முன்பு கிணை தெய்வத்தை வழிபட்டனர் (புறம். 399) வாழ்த்திப் பாடும் முன்பு தெய்வம் நின்று காக்க வேண்டும் (புறம். 377) என்று வேண்டினர்.

'இரும்பேர் ஒக்கல்' (புறம். 389, 390, 391, 394) என்று கிணைஞர்கள் பெரிய சுற்றமாகவே காணப்பட்டனர்.

வேங்கட வரைப்பின் வடபுலம் பசித்தென
ஈங்குவந்து இறுத்த என் இரும்பேர் ஒக்கல் (புறம். 391)

வேங்கட மலையாகிய வடக்கு நிலம் வறுமையுற்றது. அதனால் இங்குவந்து தங்கிய என் மிகப்பெரிய சுற்றம் இங்கிருந்து செல்லுதலைத் தவிர்க்கும் இயல்பினையுடையதாய் இருக்கின்றது என வரும் பாடலைக் கொண்டு கிணைஞர் வேங்கட மலை நாட்டவராகலாம் என்று உய்த்தறிய இடம் உள்ளது.

**அரசன் பரிசில் வழங்கியமை**

வாழியோ கிணைவ (புறம். 381) என்று கிணைவனை வாழ்த்தி அரசன் பல்வேறு பரிசில்களை வழங்கினான். பிறர் வாயிலில் நின்று அகன்ற கண்ணை யுடைய கிணைப்பறை ஒலித்தலைக் கேட்டு கொடை வழங்குபவனாகவும் (புறம். 385), அன்புடையவனாய்த் தன் இல்லில் உள்ள திருமகள் போலும் மனையாளுக்கு அறிமுகம் செய்து வைத்து இவனையும் என்னைப் போல் இனிது பேணுக (புறம். 395) என்று கூறுபவனாகவும் வலிய திமிலையுடைய காளையைக் கேட்கும் முன்பே கொடுத்தவனாகவும் (புறம். 399) வறுமையுற்ற கிணைஞர்களுக்கு உணவுக் கொடையும், உடையும் வழங்கியவனாகக் காணப்படுகின்றான்.

**வேறு தொழில் செய்தமை**

கிணைப்பறை கொண்டு அரசனை வாழ்த்திப்பாடும் இப்பொருநர்கள், தங்களைப் புரக்கும் வள்ளல்கள் இல்லாத போது வேறு தொழில் செய்தமைக்கான பதிவுகளும் காணப்படுகின்றன.

வள்ளியோர்க் காணாது உய்திறன் உள்ளி
நாரும் போழும் செய்தூண் பெறாஅது
பசிதினத் திரங்கிய இரும்பேர் ஒக்கற்கு (புறம். 370)

கொடையாளரைக் காணாமையால் பிழைக்கும், வழியை நினைத்து பனை நாரையும் குருத்தையும் வைத்துத் தொழில் செய்து, உணவு இல்லாமையால் பசி நிலையாக வருந்தச் செய்த என் சுற்றம் என வரும் பாடலில் கிணைஞர் பனைநாரையும் குருத்தையும் வைத்து தொழில் செய்தமையைக் காண முடிகின்றது.

கிணைமகள் அட்ட பாவல் புளிங்கூழ்
பொழுதுமறுத் துண்ணும் உண்டியேன் (புறம். 399)

நெடிய கழையால் அமைந்த தூண்டிலால் பிடித்த மீனை விற்றுக் கிணைமகள் ஆக்கிய புளிங்கூழை உரிய பொழுதில் உண்ணாமல் கள் உண்ட மயக்கதில் உள்ளான் என வரும் பாடலில், கிணைமகள் மீன் பிடித்து விற்ற செய்தியையும் காணமுடிகின்றது. "சமூகத்தின் போர்ப் பண்பு குறைவடைந்து போனமை இவர்களின் வறுமைக்குக் காரணமாகலாம். போர்க்களத்தில் தமது தொழிலைச் செய்த பொருநர், போர்ப் பண்பு குறைந்ததால் வறுமை நிலைக்குத் தள்ளப்பட்டு தமது சீவனோபாயத்திற்காக மருதநிலத் தலைவர்களை நாடிச் சென்றிருத்தல் வேண்டும்"[27] என வரும் கருத்தினைக் கொண்டு இதனை மேலும் விளங்கிக் கொள்ளலாம்.

தலைவனின் பெயரைக் குறிப்பிடல்,

வில்லியாதன் கிணையேம் பெரும (புறம். 379)

கரும்பன் ஊரன் கிணையேம் பெரும (புறம். 384)

அறப்பெயர்ச் சாத்தன் கிணையேம் பெரும (புறம். 395)

எழினி யாதன் கிணையேம் பெரும (புறம். 396)

என வரும் பாடல்கள், குறிப்பிட்ட சீறூர்த் தலைவர்களுக்கென்று கிணைஞர்கள் இருந்தமை தெளிவாகின்றது. வள்ளல்கள் கிணைஞர்களை நிலையாக புரந்தமையைக் கொண்டு சமூகத்தில் அவர்களுக்கு இருந்த மதிப்பையும் முக்கியத்துவத்தையும் உணர்ந்து கொள்ளமுடிகின்றது.

பாணர்களுக்கும் பிற இசைக் கலைஞர்களுக்குமான வேறுபாட்டை நுட்பமாக ஆராயும் போது, பாணர்கள் அரசனின் அரசவையில் (நாளவையில்) தனித்த மதிப்போடும் முக்கியத்துவத்தோடும் காணப்பட்டனர். அகவலர், வயிரியர், கோடியர், கிணைஞர் போன்ற இசைக்கலைஞர்கள் அரசர் / சீறூர் தலைவர்களின் வாயிலின் முன்பும், தெருக்களில் உள்ள வீடுகளின் முன்பும் பாடல்களைப் பாடுபவர்களாகக் காணமுடிகின்றது. எனினும் பாணர்களைப் போற்றியமை போன்றே பிற இசைக் கலைஞர்களையும் அரசர் / வள்ளல்கள் போற்றி புரந்துள்ளனர் என்பதைக் காணமுடிகின்றது.

**தொகுப்புரை**

* மனிதர்கள் இயற்கை நிகழ்வுகளை உற்று நோக்கியே இசை என்பதைச் செயற்கையாகப் படைத்துக் கொண்டனர்.
* பண்டைய சமூகத்தில் ஒவ்வொரு நிலத்திற்கும் தனித்தனியான பண்கள் இருந்ததை அறிய முடிகின்றது.
* சங்க இலக்கியத்தில் சீறியாழ், பேரியாழ், பாலையாழ் ஆகிய யாழ்களைக் காணமுடிகின்றது.
* பாணர்கள் யாழை மரபு வழிப்பட்ட பயிற்சி முறையிலேயே இசைத் துள்ளனர்.
* பாணர்கள் இசைநூலில் வல்லவர்களாகக் காணப்பட்டதோடு வேறு பல இசைக் கருவிகளையும் இசைத்துள்ளனர்.
* அகவுநர்கள் எனப்பட்ட கலை மரபினர் போர்க்களத்திற்குச் சென்று வாழ்த்துப்பாடல்களைப் பாடியுள்ளனர்.
* அகவுநர்கள் எப்பொழுதும் கையில் சிறிய கோலுடனேயே காணப்பட்ட கலைஞர்களாவர்.
* வயிரியர் எனப்பட்ட கலைமரபினர் ஊர் மன்றங்களிலும் தெருக்களில் உள்ள வீடுகளின் முன்பும் பாடல்களைப் பாடினர்.
* கோடியர் எனப்பட்ட இசைக் கலைஞர்கள் பல்வேறு இசைக் கருவிகளை பயன்படுத்தினர்.
* கோடியர்கள் விழாக்களில் ஆடும் கலைமரபினராகக் காணப்பட்டனர்.

* விறலியர் எனப்பட்ட பெண் கலைஞர்கள் பாணர் குழுவில் இடம் பெற்றும் தனித்தும் கலையை நிகழ்த்தினர்.
* விறலியர் அரசனின் அரசவையில் பரிசிலர்களுக்காகச் சமையல் செய்பவர்களாகவும் காணமுடிகின்றது.
* அரசனின் அக ஒழுக்கத்திலும் விறலியர் பங்கு கொண்டவர்களாகக் காணமுடிகின்றது.
* கிணைஞர் எனப்பட்ட பொருநர் விடியற் காலையில் அரசனின் இல்லத்தின் முன்பு பாடல்களைப் பாடுபவர்களாகக் காணப்பட்டனர்.
* கிணைஞர்கள் வேங்கட மலை நாட்டைச் சார்ந்தவர்களகாகக் காணப் பட்டனர்.
* கிணைஞர் பரிசிலரைக் காணாத போது, வேறு சில தொழில்களையும் செய்துள்ளனர்.
* இனக்குழுத் தலைவர்களுக்கென்று குறிப்பிட்ட கிணைஞர்கள் காணப்பட்டனர்.

**அடிக்குறிப்பு**

1. அ.ராகவன், யாழும் இசையும், ப.11.
2. மேலது, ப.14.
3. மேலது. ப.30.
4. மா.இராசமாணிக்கனார், தமிழகக் கலைகள், ப.57.
5. வெ.வரதராசன், தமிழ்ப் பாணர் வாழ்வும் வரலாறும், ப.26.
6. இரா.இளங்குமரன், பாணர், ப.43.
7. அ.ராகவன், யாழும் இசையும், ப.49.
8. க.கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப.158.
9. அம்மன்கிளி முருகதாஸ், சங்கக் கவிதையாக்கம் மரபும் மாற்றமும், ப.205.
10. மேலது, ப.206.
11. மா.ரா.இளங்கோவன், அகவன் மகள், (சூன்.1958)
12. க.கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப.156.
13. கார்த்திகேசு சிவத்தம்பி, பண்டைய தமிழ்ச் சமூகத்தில் நாடகம், ப.214.
14. க.கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப.155.
15. கார்த்திகேசு சிவத்தம்பி, பண்டைய தமிழ்ச் சமூகத்தில் நாடகம், ப.211.
16. க.கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப.152.
17. கார்த்திகேசு சிவத்தம்பி, பண்டைய தமிழ்ச் சமூகத்தில் நாடகம், ப.227.
18. க.கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப.154.
19. மேலது. ப.152.
20. கார்த்திகேசு சிவத்தம்பி, பண்டைய தமிழ்ச் சமூகத்தில் நாடகம், ப.227.
21. பெ.மாதையன், தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், ப.2.
22. தமிழ்ப் பேரகராதி, தொகுதி -5.

23. கார்த்திகேசு சிவத்தம்பி, பண்டைய தமிழ்ச் சமூகத்தில் நாடகம், ப.219.

24. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை, புறநானூறு உரை, ப.362.

25. உ.வே.சாமிநாதையர், புறநானூறு மூலமும் குறிப்புரையும், ப.294.

26. க.கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப.142.

27. கார்த்திகேசு சிவத்தம்பி, பண்டைய தமிழ்ச் சமூகத்தில் நாடகம், ப.223.

சங்க இலக்கியங்கள் வெளிப்படுத்தும் செய்திகளில் இசைக்குடி மரபினரான பாணர்களின் இருப்பும் சமூக செயல்பாடுகளையும் தொகுத்து வகைப்படுத்திக் காண்பது இவ்வாய்வின் அடிப்படை நோக்கமாகும்.

சங்க இலக்கியம் வழி அறியலாகும் பாணர் மரபு எனும் இந்த ஆய்வு சங்க இலக்கியப் பாடல்களின் வாயிலாக அறியப்படும் பாணர்கள், பாணர் - புலவர் வேறுபாடு, பாணர் அரசர் உறவுநிலை, பிற இசைக்கலைஞர்கள் என நான்கு இயல்களில் முழுமையாக ஆராயப்பட்டுள்ளது. ஒவ்வொரு இயலின் இறுதியிலும் அந்தந்த இயலில் ஆராய்ந்து கண்ட உண்மைகள் தொகுப்புரைகளாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

சங்க இலக்கியப் பாடல்களை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப் பட்டுள்ள இவ்வாய்வு வெளிப்படுத்தும் முடிவுகளில் குறிப்பிடத்தக்கவை சில பின்வருமாறு கொடுக்கப்பட்டுள்ளன.

தமிழ்ச் சமூகத்தின் தொடக்ககால பாடுநர்களாக அறியப்பட்ட பாணர்கள் தனித்த நிலையிலும் பிற இசைக் கலைஞர்களுடனும் அரசர்களின் வாழ்த்துப் பாடல்களைப் பாடுபவர்களாக அறியப்பட்டனர்.

மண்டைப் பாணர் என்னும் பிரிவினர் தனித்த நிலையில் இல்லை என்பதுடன், மண்டை (உண்கலம்) எனும் சொல் பாணரைத் தவிர்த்து பிற நபர்களுடனும் இணைந்து வந்துள்ளமையைக் காணமுடிகின்றது.

தொல்பழங் குடியினரான பாணர்கள் கடவுள் வழிபாட்டுடனும், சடங்குகளில் பங்கு பெற்றவர்களாகவும், அரசர், வீரர்களுக்கு உற்சாகமூட்டும் பாடல்களைப் பாடியவர்களாகவும் காணப்பட்டனர்.

மரபுவழிப்பட்ட இசைநுட்பம் கொண்ட பாணர்கள் அரசர்கள் பற்றிய புகழ்ச்சிப் பாடல்களை நிலவியல்சார் அறிவுடன் மக்கள் மத்தியில் பாடி மகிழ்வூட்டினர்.

பாணர்கள் இசைக் கலைஞர்களாக மட்டுமல்லாது அரசர்களாகவும், வீரர்களாகவும் விளங்கினர். சங்க காலத்தின் முற்பகுதியில் மரபிசைக் கலைஞர்களாகக் காணப்பட்ட பாணர்கள், பின்னர் நிலவுடைமைச் சமூகத்தில் மீன்பிடிக் கலைஞர்களாய் மாற்றம் எய்தினர். இதன் காரணமாக பாணர்கள் சமூக மதிப்பிறக்கம் பெற்றனர் என்பதை உய்த்தறிய முடிகின்றது.

சமூக மதிப்பிறக்கத்தின் காரணமாக தலைவன், தலைவியரின் ஊடல் தீர்ப்பவர்களாகவும், தூது உரைப்பவர்களாகவும் மாறினர்.

பாணர், புலவர் என்ற இருவேறுபட்ட பாடுநர் குழுக்களைக் கொண்டது சங்க இலக்கியம். மரபு வழிப்பட்ட பாணர்களிடமிருந்த பாடும் முறையை உட்செறித்த புலவர் மரபு புதிய பாடல்களைப் புனைந்தது.

இனக்குழுத் தலைவர்களிடம் நெருக்கமாகக் காணப்பட்ட பாணர்களை மரபுவழிப்பட்ட வாய்மொழியுடனும், வேந்தர்களிடம் நெருக்கமாகக் காணப்பட்ட புலவர்களை கல்வி, கேள்வியுடனும் அடையாளப்படுத்தினர்.

மரபுவழிப்பட்ட வாய்மொழிப் பாடல்களைப் பாடும் பாணர்களைக் காட்டிலும் சொற்தேர்ச்சி கொண்ட புலவர்களுக்கே அரசர்கள் அதிக முக்கியத்துவம் தரவேண்டும் என்பதை வலியுறுத்திப் பாடினர்.

சங்க இலக்கியப் பாடல்களில் புலவராற்றுப்படை எனவரும் துறையில் அமைந்த பாடல்கள் புலவரை ஆற்றுப்படுத்தாமல் பாணரையே ஆற்றுப்படுத்துவதை அறிந்துகொள்ள முடிகின்றது.

பாணர் பாடல்கள் அரசர்களின் புகழைப் பாடுவதாகவும். புலவர் பாடல்கள் அரசர்களுக்கு ஆலோசனைக் கூறுவதாகவும் காணமுடிகின்றது.

புலவர்களைப் புதுவகை உவமையால் உயர்த்தியும் பாணர்களைக் கல்லாதவர்கள் என்று தாழ்த்தியும் குறிப்பிட்டுள்ளமையைக் காண முடிகின்றது.

இனக்குழு வாழ்வியலையும் வேந்தர்களின் வாழ்வியலையும் வெளிப்படுத்தி நிற்கும் சங்க இலக்கியத்தில் அதிகார படிநிலைகள் இருப்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

பெரும் செல்வம் கொண்ட வேந்தர்களின் பரிசில்களைக் காட்டிலும் பொருளாதாரமற்ற இனக்குழுத் தலைவர்கள் வழங்கும் உணவுக் கொடையே சிறந்தது என்னும் கருத்தை பாணர், புலவர் பாடல்களில் காணமுடிகின்றது.

பாண்கடன் என்பது, பாணர்களைப் பாதுகாத்தல் என்னும் சமூகக் கடமையாகக் கருதப்பட்டதுடன், அரசர்களுக்குக் கூடுதல் தகுதியும் வழங்கப்பட்டதாக அறிந்துகொள்ள முடிகின்றது.

இனக்குழுச் சமூகத்தில் கொடை என்பது கூட்டுண்ணுதல் என்னும் பொதுப்பண்பாக இருக்க, மூவேந்தர்களின் முடியாட்சி காலத்தில் தகுதியின் குறியீடாக மாறியது.

விருந்தோம்பல், பரிசில் வழங்குதல் என்று பாணர்களுக்கு வழங்கப்பட்ட கொடைகளை இருவேறு முறைகளில் காணலாம்.

தங்களைப் புரந்த வள்ளல்கள் இறந்த போது, மிகுந்த துயரமுற்ற பாணர்கள் ஒப்பனை செய்து கொள்ளாமலும், கையறுநிலைப் பாடல்களைப் பாடித் திரிபவர்களாகவும் காணப்பட்டனர்.

நிலத்திற்கு ஏற்ப தனித்தனி பண்களை வகுத்துக் கொண்ட பழந்தமிழ் மக்கள் இசைக்கு மிகுந்த முக்கியத்துவம் அளித்தனர்.

இசைநூலில் வல்லவர்களாகக் காணப்பட்ட பாணர்கள், யாழிசைக் கருவி மட்டுமல்லாது வேறுபல இசைக் கருவிகளையும் இசைத்தனர். மேலும் பிற கலைஞர்களுடன் இணைந்து நிலம் முழுவதும் பயணித்தனர்.

விறலி என்பவள் ஆடல் வல்லவளாகவும், பாடல் வல்லவளாகவும் மட்டுமல்லாது பரிசிலர்களுக்காக அரசவையில் சமையல் செய்பவளாகவும் காணப்பட்டாள்.

அகவுநர், வயிரியர், கோடியர் எனப்பட்ட இசைக்கலைஞர்கள் ஊர் மன்றத்திலும் தெருக்களில் உள்ள வீடுகளின் முன்பும் பாடல்களைப் பாடுபவர்களாகவும், பாணர்கள் என்போர் அரசவையில் பாடுபவர்களாகவும் அடையாளம் காணமுடிகின்றது.

பாணர்களைப் போன்றே பிற இசைக்கலைஞர்களும் முக்கியத்துவம் பெற்றவர்களாகவும், அரசனால் போற்றத்தக்கவர்களாகவும் விளங்கினர்.

இவ்வாய்வின் நீட்சியாகவும் தொடர்புடையதுமான ஆய்வுக்களங்கள் உள்ளன. அவை,

பாணர்கள் மற்றும் பிற இசைக்கலைஞர்களிடம் காணப்படும் நிகழ்த்துக்கலை மரபிற்கும் தமிழ்ச் சமூகத்தின் அரங்க மரபிற்குமான தொடர்புகள் குறித்து ஆராய்தல், இசைக்குடி மரபினரைப் போன்றே, சங்க இலக்கியப் பாடல்களின் வழி அறியப்படும் பிற குடி மரபினரைக் குறித்து ஆராய்தல், தொல்லியல் தரவுகளின் அடிப்படையில் சங்க இலக்கியப் பாடல்களில் காணப்படும் பாணர்கள் வாழ்வியல் குறித்து ஆராய்தல் என்பன போன்று பல நிலைகளில் ஆய்வுக்களங்கள் உள்ளன.

## துணை நூற் பட்டியல்

### முதன்மை ஆதாரங்கள்


*அண்ணாமலை, சுப. (உ.ஆ), கலித்தொகை மூலமும் உரையும், கோவிலூர் மடாலயம், கோவிலூர், 2003.*

*இளங்குமரன், இரா., (உ.ஆ), புறநானூறு மூலமும் உரையும், கோவிலூர் மடாலயம், கோவிலூர், 2003.*

*சாரங்கபாணி, இரா., (உ.ஆ), பரிபாடல் மூலமும் உரையும், கோவிலூர் மடாலயம், கோவிலூர், 2003.*

*சிங்கார வடிவேலன், அர., (உ.ஆ), ஐங்குறுநூறு மூலமும் உரையும், கோவிலூர் மடாலயம், கோவிலூர், 2002.*

*சுப்பிரமணியன், ச.வே., (உ.ஆ), பத்துப்பாட்டு மூலமும் உரையும், கோவிலூர் மடாலயம், கோவிலூர், 2003.*

*தமிழண்ணல், (உ.ஆ), குறுந்தொகை மூலமும் உரையும், கோவிலூர் மடாலயம், கோவிலூர், 2002.*

*பரிமணம், அ.மா.,(உ.ஆ), பதிற்றுப்பத்து மூலமும் உரையும், கோவிலூர் மடாலயம், கோவிலூர், 2003.*

*மகாதேவன், கதிர்., (உ.ஆ), நற்றிணை மூலமும் உரையும்,கோவிலூர் மடாலயம், கோவிலூர், 2003.*

*மீனவன், நா., முருகசாமி, தெ., (உ.ஆ), அகநானூறு மூலமும் உரையும், கோவிலூர் மடாலயம், 2004.*


துணைமை ஆதாரங்கள்


*அருணாசலம்,மு., தமிழ் இசை இலக்கண வரலாறு, கடவு பதிப்பகம், மதுரை, 2009.*

*அம்மன் கிளி முருகதாஸ், சங்கக் கவிதையாக்கம் மரபும் மாற்றமும், குமரன் புத்தக இல்லம், சென்னை, 2006.*

*அன்புச் செல்வன், தி., பண்டைத் தமிழரின் அரசமைப்புச் சிந்தனைகள், பாரதி புத்தகாலயம், சென்னை, 2010.*

ஆனந்தகுமார்,பா., இலக்கியமும் பண்பாட்டு மரபுகளும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட், சென்னை, 2007.

இராசமாணிக்கனார், மா., தமிழகக் கலைகள், புலவர் பதிப்பகம், சென்னை, 2004.

இராசரெத்தினம்,கு., சங்க இலக்கியத்தில் பொது மக்கள், நாம் தமிழர் பதிப்பகம், சென்னை, 2011.

இளங்குமரன், இரா., பாணர், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1987.

குணசேகரன், கரு.அழ., பதிற்றுப்பத்து மூலமும் ஆராய்ச்சிப் புத்துரையும், உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை, 2010.

கேசவன்,கோ., மண்ணும் மனித உறவுகளும், சென்னை புக் ஹவுஸ், சென்னை, 1979.

கைலாசபதி,க., தமிழ் வீரநிலைக் கவிதை, குமரன் புத்தக இல்லம், சென்னை, 2006.

கைலாசபதி,க., பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், குமரன் பப்ளிஷர்ஸ், சென்னை, 1999.

சண்முக சுந்தரம்,க., சங்க இலக்கிய வரலாறு, தமிழ் ஆய்வகம், சென்னை, 1984.

சண்முகம்,வை.செ., சங்க கால மொழி வளர்ச்சியும் மொழி உணர்வும், மெய்யப்பன் பதிப்பகம், சென்னை, 2009.

சரளா இராசகோபாலன், சங்க இலக்கியம்(அகம்), அலைகள் அச்சகம், சென்னை, 1988.

சாமிநாத ஐயர்,உ.வே., புறநானூறு மூலமும் குறிப்புரையும், லா.ஜர்னல் பதிப்பகம், சென்னை, 1935.

சிதம்பரனார்,சாமி., பழந்தமிழர் அரசியல், நாம் தமிழர் பதிப்பகம், சென்னை, 2009.

சிவத்தம்பி கார்த்திகேசு, பண்டைத் தமிழ்ச் சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட், சென்னை, 2010.

சிவத்தம்பி கார்த்திகேசு, பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் நாடகம், குமரன் புத்தக இல்லம், சென்னை, 2005.

சிவத்தம்பி கார்த்திகேசு, சங்க இலக்கியம் கவிதையும் கருத்தும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2009.

சிவத்தம்பி கார்த்திகேசு, தமிழின் கவிதையியல், குமரன் புத்தக இல்லம், சென்னை, 2007.

சுப்பிரமணியன்,கா., சங்ககாலச் சமுதாயம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2011.

சுப்பிரமணியன்,நா., சங்க கால வாழ்வியல், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி) லிட், சென்னை, 2010.

செண்பகம் இராமசாமி, கிரேக்க லிரிக் கவிதைகளும் சங்க இலக்கிய கவிதைகளும் ஒப்பீடு, பாத்திமா கல்லூரி, மதுரை, 1987.

செல்வராசு,நா., சிலம்பு, சங்க இலக்கிய மறுவாசிப்பு,ள காவ்யா பதிப்பகம், சென்னை, 2005.

சேவியர் தனிநாயகம் அடிகள், பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் கல்வி, மாற்று வெளியீட்டகம், சென்னை, 2009.

தட்சிணாமூர்த்தி,அ., தமிழர் நாகரீகமும் பண்பாடும், யாழ் வெளியீடு, சென்னை, 2008.

தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, செல்லப்பா பதிப்பகம், மதுரை, 2005.

தனஞ்செயன்.ஆ., சங்க இலக்கியமும் பண்பாட்டுச் சூழலியலும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிட், சென்னை, 2010.

தனபாண்டியன்,ஆ.து., இசைத்தமிழ் வரலாறு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1994.

திருநாவுக்கரசு,க.த., திருக்குறள் நீதி இலக்கியம், சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை, 1985.

துரைசாமிப் பிள்ளை, ஔவை.சு., புறநானூறு மூலமும் விளக்க உரையும், திருநெல்வேலி சைவ சித்தாந்தநூற்பதிப்புக் கழகம், சென்னை, 1908.

தேவநேய பாவாணர்,ஞா., பண்டைத் தமிழர் நாகரீகமும் பண்பாடும், பூம்புகார் பதிப்பகம், சென்னை,2009.

நவநீத கிருட்டிணன்,மா., தமிழ் இலக்கியத்தில் ஆற்றுப்படை, குறிஞ்சிமலர் வெளியீடு, மதுரை, 1988.

பஞ்சாங்கம்,க., சங்க இலக்கியம், காவ்யா பதிப்பகம், சென்னை, 2007.

பழனிவேலு,கே., சங்க இலக்கியம் பாட்டு மரபும் எழுத்து மரபும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2010.

பாண்டுரங்கன்,அ., தொகைஇயல், தமிழரங்கம், புதுச்சேரி, 2008.

பாலசுப்பிரமணியன்,கு.வெ., சங்க இலக்கியத்தில் புறப்பொருள், மீரா பதிப்பகம், புதுக்கோட்டை, 1986.

பெரிய கருப்பன், இராம., பரிசில் வாழ்க்கை, சோலை நூலகம், மதுரை, 1977.

பெருமாள்சாமி,வெ., சங்க காலத் தமிழகத்தில் சமூக நிலை, பாரதி புத்தகாலயம், சென்னை, 2007.

மகாதேவன்,கதிர்., ஒப்பியல் நோக்கில் சங்க காலம், சக்தி பிரிண்டர்ஸ், மதுரை, 1975.

மணவாளன்,அ.அ., சங்க இலக்கியம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி) லிட், சென்னை, 2009.

மாதையன்,பெ., தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் காலமும் கருத்தும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி) லிட், சென்னை, 2011.

மாதையன்,பெ., சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும், பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2004.

மாதையன்,பெ., தமிழ்ச் செவ்வியல் படைப்புகள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிட், சென்னை, 2009.

ராகவன்,அ., யாழும் இசையும், அமிழ்தம் பதிப்பகம், சென்னை, 1971.

ராஜ் கௌதமன், பதிற்றுப்பத்து ஐங்குறுநூறு சில அவதானிப்புகள், விடியல் பதிப்பகம், கோவை, 2010.

ராஜ் கௌதமன், ஆகோள் பூசலும் பெருங்கற்கால நாகரிகமும், தமிழினி வெளியீடு, சென்னை, 2009.

ராஜ் கௌதமன், தமிழ்ச் சமூகத்தில் அறமும் ஆற்றலும், விடியல் பதிப்பகம், கோவை, 2008.

ராஜ் கௌதமன், கலித்தொகை - பரிபாடல், ஒரு விளிம்பு நிலை நோக்கு, விடியல் பதிப்பகம், கோவை, 2011.

வரகுணபாண்டியன்,அ.ஆ., யாழ்நூல் பாணர் கைவழி, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1950.

வரதராசன்,வெ., தமிழ்ப்பாணர் வாழ்வும் வரலாறும், பண்ணன் பதிப்பகம், சென்னை, 1973.

வித்தியானந்தன்,சு., தமிழர் சால்பு, பாரி புத்தகப் பண்ணை, சென்னை, 1985.

விபுலானந்தர், யாழ்நூல், யாதுமாகி பதிப்பகம், திருநெல்வேலி, 2003.

வேல்சாமி,பொ., பொற்காலங்களும் இருண்ட காலங்களும், காலச்சுவடுப் பதிப்பகம், சென்னை, 2007.

வையாபுரிப்பிள்ளை,எஸ்., காவிய காலம் தொகுதி-3, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 1991.

**கட்டுரைகள்**

இராமநாதன், பாணர் கைவழி, செந்தமிழ்ச் செல்வி, ஆகஸ்டு, 1936.

இளங்கோவன்,மா.ரா., அகவன் மகள், செந்தமிழ், சூன், 1958.

குமரன்,க., பாண்பசி பகைஞன், செந்தமிழ்ச் செல்வி, செப்டம்பர், 1952.

சுந்தரம்,வீ.ப.க., தமிழிசை மரபு, செந்தமிழ்ச் செல்வி, செம்டம்பர், 1952.

தமிழ் நாட்டு வரலாற்றுக்குழு, தமிழ் நாட்டு வரலாறு சங்க காலம், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1989.

தேவநேயப் பாவாணர்,ஞா., பாணர், செந்தமிழ் செல்வி, ஏப்ரல், 1939.

பார்வதியம்மாள்,சிவ., பாணர் வரலாறு, செந்தமிழ்ச் செல்வி, ஆவணி, 1941.

பிரபஞ்சன், கல்லாப் பாணரான கலைத் தொழிலாளிகள், உயிர்மை இதழ், நவம்பர், 2010.

*மீனாட்சி சுந்தரம், பாணன் வருகை, தமிழ்ப் பொழில், நவம்பர், 1944.*

*விபுலானந்தர், பண்டைத் தமிழிசை ஆராய்ச்சி, செந்தமிழ்ச் செல்வி, வைகாசி, 1943.*

**நிகண்டுகள்**

*சூடாமணி நிகண்டு, வித்தியானு பாலன இயந்திர சாலை, சென்னைப் பட்டினம், 1926.*

*பிங்கல நிகண்டு, மதராஸ் ரிப்பன் அச்சு இயந்திர சாலை, சென்னைப் பட்டினம், 1917.*

**அகராதி**

*தமிழ்ப் பேரகராதி, சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு, சென்னை, 1982.*

**ஆய்வேடு**

*சம்பத்குமார், மா., சங்க இலக்கியத்தில் கலைஞர்களின் வாழ்வியலும் பாணர்களின் தற்கால நிலையும், பாரதியார் பல்கலைக்கழகம், கோவை, 2009.*

## பின்னிணைப்புகள்

தொகை நூல்களில் காணப்படும் கலைஞர்கள் குறித்தான பதிவுகள் பின்வருமாறு.

1. புறநானூறு
2. பதிற்றுப்பத்து
3. அகநானூறு
4. குறுந்தொகை
5. நற்றிணை
6. ஐங்குறுநூறு
7. கலித்தொகை
8. பரிபாடல்

## 1.புறநானூறு

| வ.எண் | பாடல் எண் | குறிப்பு | பாடியவர் |
|---|---|---|---|
| 1. | பாடல்-3 | இரவலர் | இரும்பிடத்தலையர் |
| 2. | பாடல்-6 | பரிசில் மாக்கள் | காரிகிழார் |
| 3. | பாடல்-9 | வயிரியர் | நெட்டிமையார் |
| 4. | பாடல்-11 | பாணன், பாடினி | பேய்மகள் இள எயினி |
| 5. | பாடல்-12 | பாணர் | நெட்டிமையார் |
| 6. | பாடல்-14 | பரிசிலர் | கபிலர் |
| 7. | பாடல்-15 | பாடினி | நெட்டிமையார் |
| 8. | பாடல்-24 | இரவலர் | மாங்குடிகிழார் |
| 9. | பாடல்-28 | கூத்தர் | உறையூர் முதுகண்ணன் சாத்தனார் |
| 10. | பாடல்-29 | கோடியர் | உறையூர் முதுகண்ணன் சாத்தனார் |
| 11. | பாடல்-32 | விறலி | கோவூர் கிழார் |
| 12. | பாடல்-33 | பாடுநர் | கோவூர் கிழார் |
| 13. | பாடல்-34 | பாணர் | ஆலந்தூர் கிழார் |
| 14. | பாடல்-48 | இரவலர் | பொய்கையார் |
| 15. | பாடல்-54 | இரவலர் | எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார் |
| 16. | பாடல்-56 | இரவலர் | மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் |
| 17. | பாடல்-60 | விறலி | உறையூர் மருத்துவன் தாமோதரனார் |
| 18. | பாடல்-64 | விறலி | நெடும்பல்லியத்தனார் |
| 19. | பாடல்-38 | பாணர் | கோவூர்கிழார் |

| | | | |
|---|---|---|---|
| *20.* | பாடல்-*69* | பாணர் | ஆலந்தூர் கிழார் |
| *21.* | பாடல்-*70* | இரவலர் | கோவூர்கிழார் |
| *22.* | பாடல்-*89* | விறலி | ஔவையார் |
| *23.* | பாடல்-*103* | விறலி | ஔவையார் |
| *24.* | பாடல்-*109* | விறலி | கபிலர் |
| *25.* | பாடல்-*111* | கிணைமகள் | கபிலர் |
| *26.* | பாடல்-*115* | பாணர் | கபிலர் |
| *27.* | பாடல்-*119* | இரவலர் | கபிலர் |
| *28.* | பாடல்-*126* | பாணர் | மறோகத்து நப்பசலையார் |
| *29.* | பாடல்-*127* | பாணர் | உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் |
| *30.* | பாடல்-*128* | இரவலர் | உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் |
| *31.* | பாடல்-*133* | விறலி | உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் |
| *32.* | பாடல்-*135* | பாணர் | உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் |
| *33.* | பாடல்-*138* | பாணர் | மருதன் இளநாகனார் |
| *34.* | பாடல்-*139* | விறலி | மருதன் இளநாகனார் |
| *35.* | பாடல்-*140* | விறலி | ஔவையார் |
| *36.* | பாடல்-*141* | பாணர் | பரணர் |
| *37.* | பாடல்-*151* | பாடுநர் | பெருந்தலைச் சாத்தனார் |
| *38.* | பாடல்-*152* | விறலி | வன்பரணர் |
| *39.* | பாடல்-*155* | பாணர் | மோசிகீரனார் |
| *40.* | பாடல்-*156* | இரவலர் | மோசிகீரனார் |
| *41.* | பாடல்-*164* | வயிரியர் | பெருந்தலைச் சாத்தனார் |

| | | | |
|---|---|---|---|
| 42. | பாடல்-168 | பரிசிலர் | கருவூர்க்கதப் பிள்ளை சாத்தனார் |
| 43. | பாடல்-170 | பாணர் | உறையூர் மருத்துவன் தாமோதரனார் |
| 44. | பாடல்-172 | விறலி | வடம வண்ணக்கன் தாமோதரனார் |
| 45. | பாடல்-173 | பாணர் | சோழன் குளமுற்றத்துஞ்சிய கிள்ளிவளவன் |
| 46. | பாடல்-199 | இரவலர் | பெரும்பதுமனார் |
| 47. | பாடல்-212 | பாணர் | பிசிராந்தையார் |
| 48. | பாடல்-242 | பாணர் | குடவாயில் கீரத்தனார் |
| 49. | பாடல்-244 | பாணர் | குடவாயில் கீரத்தனார் |
| 50. | பாடல்-264 | பாணர் | பெருங்குன்றூர் கிழார் |
| 51. | பாடல்-285 | பாணர் | அரிசில்கிழார் |
| 52. | பாடல்-289 | பாணர் | கழாத்தலையார் |
| 53. | பாடல்-302 | பாணர் | வெறிபாடிய காமக் கண்ணியார் |
| 54. | பாடல்-308 | பாணர் | கோவூர் கிழார் |
| 55. | பாடல்-316 | பாணர் | மதுரைக் கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார் |
| 56. | பாடல்-318 | பாணர் | பெருங்குன்றூர் கிழார் |
| 57. | பாடல்-319 | பாணர் | ஆலங்குடி வங்கனார் |
| 58. | பாடல்-320 | பாணர் | வீரை வெளியனார் |
| 59. | பாடல்-321 | பாணர் | உறையூர் மருத்துவன் தாமோதரனார் |
| 60. | பாடல்-324 | பாணர் | ஆலந்தூர் கிழார் |
| 61. | பாடல்-326 | பாணர் | தங்கால் பொற்கொல்லனார் |

| | | | |
|---|---|---|---|
| 62. | பாடல்-327 | பாணர் | ..... |
| 63. | பாடல்-328 | பாணர் | ..... |
| 64. | பாடல்-334 | பாணர் | மதுரைத் தமிழ்க் கூத்தனார் |
| 65. | பாடல்-335 | பாணர் | மாங்குடி கிழார் |
| 66. | பாடல்-348 | பாணர் | பரணர் |
| 67. | பாடல்-361 | பாடினி | கயமனார் |
| 68. | பாடல்-364 | பாணர் | கூகைக் கோழியார் |
| 69. | பாடல்-368 | கோடியர் | கழாத்தலையார் |
| 70. | பாடல்-377 | கிணைஞன் | உலோச்சனார் |
| 71. | பாடல்-379 | கிணைஞன் | புறத்திணை நன்னாகனார் |
| 72. | பாடல்-381 | கிணைஞன் | புறத்திணை நன்னாகனார் |
| 73. | பாடல்-382 | பொருநர் | கோவூர் கிழார் |
| 74. | பாடல்-384 | கிணைஞன் | புறத்திணை நன்னாகனார் |
| 75. | பாடல்-388 | கிணைமகன் | மதுரை அளக்கனார் |
| 76. | பாடல்-391 | பொருநன் | கல்லாடனார் |
| 77. | பாடல்-393 | ஆடுமகள் | நல்லிறையனார் |
| 78. | பாடல்-395 | கிணைஞர் | மதுரை நக்கீரர் |
| 79. | பாடல்-396 | கிணைஞர் | மாங்குடி கிழார் |
| 80. | பாடல்-399 | கிணைமகள் | ஐயூர் முடவனார் |

## 2. பதிற்றுப்பத்து

| வ.எண் | பாடல் எண் | குறிப்பு | பாடியவர் |
|---|---|---|---|
| *1.* | *பாடல்-14* | *பாடினி* | *குமட்டூர் கண்ணனார்* |
| *2.* | *பாடல்-15* | *கலப்பையர்(பாணர்)* | *குமட்டூர் கண்ணனார்* |
| *3.* | *பாடல்-17* | *பாடினி* | *குமட்டூர் கண்ணனார்* |
| *4.* | *பாடல்-18* | *விறலி* | *குமட்டூர் கண்ணனார்* |
| *5.* | *பாடல்-20* | *வயிரியர்* | *குமட்டூர் கண்ணனார்* |
| *6.* | *பாடல்-23* | *கலப்பையர்(பாணர்)* | *பாலை கொளதமனார்* |
| *7.* | *பாடல்-29* | *வயிரியர்* | *பாலை கொளதமனார்* |
| *8.* | *பாடல்-32* | *பாணர்* | *காப்பியாற்றுக் காப்பியனார்* |
| *9.* | *பாடல்-37* | *நகைவர் (பாணர்)* | *காப்பியாற்றுக் காப்பியனார்* |
| *10.* | *பாடல்-38* | *பாணர்* | *காப்பியாற்றுக் காப்பியனார்* |
| *11.* | *பாடல்-40* | *விறலி* | *காப்பியாற்றுக் காப்பியனார்* |
| *12.* | *பாடல்-40* | *கலப்பையர்(பாணர்)* | *பரணர்* |
| *13.* | *பாடல்-42* | *கோடியர்* | *பரணர்* |
| *14.* | *பாடல்-43* | *விறலி,கோடியர்* | *பரணர்* |
| *15.* | *பாடல்-44* | *பாடுமகள்* | *பரணர்* |
| *16.* | *பாடல்-46* | *பாணர்* | *பரணர்* |
| *17.* | *பாடல்-47* | *விறலி* | *பரணர்* |
| *18.* | *பாடல்-48* | *விறலி* | *பரணர்* |
| *19.* | *பாடல்-49* | *விறலி* | *பரணர்* |
| *20.* | *பாடல்-50* | *விறலி* | *காக்கை பாடினியார் நச்செள்ளையார்* |
| *21.* | *பாடல்-54* | *விறலி* | *காக்கை பாடினியார் நச்செள்ளையார்* |

| | | | |
|---|---|---|---|
| 22. | பாடல்-55 | இரவலர் | காக்கை பாடினியார் நச்செள்ளையார் |
| 23. | பாடல்-56 | கோடியர் | காக்கை பாடினியார் நச்செள்ளையார் |
| 24. | பாடல்-57 | பாணர் | காக்கை பாடினியார் நச்செள்ளையார் |
| 25. | பாடல்-58 | விறலியர், பரிசிலர் | காக்கை பாடினியார் நச்செள்ளையார் |
| 26. | பாடல்-59 | பாண்மகன் | காக்கை பாடினியார் நச்செள்ளையார் |
| 27. | பாடல்-60 | பாண்மகன் | காக்கை பாடினியார் நச்செள்ளையார் |
| 28. | பாடல்-61 | பாடினி | கபிலர் |
| 29. | பாடல்-64 | வயிரியர் | கபிலர் |
| 30. | பாடல்-65 | பாணர் | கபிலர் |
| 31. | பாடல்-66 | இரவலன் | கபிலர் |
| 32. | பாடல்-67 | பாணன் | கபிலர் |
| 33. | பாடல்-78 | விறலி | அரிசில் கிழார் |
| 34. | பாடல்-87 | பாடினி | பெருங்குன்றூர் கிழார் |

## 3. அகநானூறு

| வ.எண் | பாடல் எண் | குறிப்பு | பாடியவர் |
|---|---|---|---|
| 1. | பாடல்-14 | பாணர் | ஒக்கூர் மாசாத்தியார் |
| 2. | பாடல்-45 | வயிரியர் | வெள்ளிவீதியார் |
| 3. | பாடல்-50 | பாணர் | கருவூர்ப் பூதஞ்சாத்தனார் |
| 4. | பாடல்-56 | பாணர் | மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் |
| 5. | பாடல்-76 | பொருநர் | பரணர் |
| 6. | பாடல்-97 | அகவுநர் | மாமூலனார் |
| 7. | பாடல்-106 | பாணர் | ஆலங்குடி வாங்கனார் |
| 8. | பாடல்-111 | கோடியர் | பாலை பாடிய பெருங்கடுங்கோ |
| 9. | பாடல்-113 | அகவுநர் | கல்லாடனார் |
| 10. | பாடல்-115 | பாணர் | மாமூலனார் |
| 11. | பாடல்-126 | பாண்மகள் | நக்கீரர் |
| 12. | பாடல்-146 | பாணன் | உவர்க் கண்ணூர்ப் புல்லங் கீரனார் |
| 13. | பாடல்-151 | ஆடுமகள் | காவன் முல்லைப்பூதனார் |
| 14. | பாடல்-152 | அகவுநர் | பரணர் |
| 15. | பாடல்-155 | வயிரியர் | பாலை பாடிய பெருங்கடுங்கோ |
| 16. | பாடல்-162 | இரவலர் | பரணர் |
| 17. | பாடல்-176 | ஆடுமகள் | மருதம்பாடிய இளங்கடுங்கோ |
| 18. | பாடல்-189 | கூத்தர் | கயமனார் |

| | | | |
|---|---|---|---|
| *19.* | பாடல்-*196* | பாட்டி(பாண்மகள்) | பரணர் |
| *20.* | பாடல்-*208* | அகவுநர் | பரணர் |
| *21.* | பாடல்-*216* | பாண்மகள் | ஐயூர் முடவனார் |
| *22.* | பாடல்-*226* | பாணர் | பரணர் |
| *23.* | பாடல்-*237* | பாணர் | தாயங்கண்ணனார் |
| *24.* | பாடல்-*244* | பாணர் | மதுரை மள்ளனார் |
| *25.* | பாடல்-*249* | அகவுநர் | நக்கீரனார் |
| *26.* | பாடல்-*301* | கோடியர் | அதியன் விண்ணத்தனார் |
| *27.* | பாடல்-*309* | கோடியர் | கருவூர்க் கந்தப்பிள்ளை சாத்தனார் |
| *28.* | பாடல்-*311* | பரிசிலர் | மாமூலனார் |
| *29.* | பாடல்-*314* | பாணர் | மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் அம்மள்ளனார் |
| *30.* | பாடல்-*325* | பாணர் | மாமூலனார் |
| *31.* | பாடல்-*328* | வயிரியர் | மதுரைப் பண்ட வாணிகன் இளந்தேவனார் |
| *32.* | பாடல்-*331* | பாணர் | மாமூலனார் |
| *33.* | பாடல்-*346* | பாணர் | நக்கீரர் |
| *34.* | பாடல்-*349* | பாடுநர் | மாமூலனார் |
| *35.* | பாடல்-*359* | கோடியர் | மாமூலனார் |
| *36.* | பாடல்-*374* | பாணர் | இடைக்காடனார் |
| *37.* | பாடல்-*386* | பாணர் | பரணர் |

## 4. குறுந்தொகை

| வ.எண் | பாடல் எண் | குறிப்பு | பாடியவர் |
|---|---|---|---|
| *1.* | *பாடல்-19* | *பாணர்* | *பரணர்* |
| *2.* | *பாடல்-23* | *அகவன் மகள்* | *ஔவையார்* |
| *3.* | *பாடல்-31* | *ஆடுகள மகள்* | *ஆதிமந்தி* |
| *4.* | *பாடல்-33* | *பாணர்* | *படுமரத்து மோசி கீரனார்* |
| *5.* | *பாடல்-78* | *கோடியர்* | *நக்கீரனார்* |
| *6.* | *பாடல்-85* | *பாணர்* | *வடம வண்ணக்கன் தாமோதரனார்* |
| *7.* | *பாடல்-27* | *பாணர்* | *ஓரம்போகியார்* |
| *8.* | *பாடல்-169* | *பாணர்* | *வெள்ளிவீதியார்* |
| *9.* | *பாடல்-298* | *அகவன் மகள்* | *பரணர்* |
| *10.* | *பாடல்-323* | *பாணர்* | *பதடி வைகலார்* |
| *11.* | *பாடல்-328* | *பாணர்* | *பரணர்* |
| *12.* | *பாடல்-359* | *பாணர்* | *பேயனார்* |

## 5. நற்றிணை

| வ.எண் | பாடல் எண் | குறிப்பு | பாடியவர் |
|---|---|---|---|
| 1. | பாடல்-30 | பாணர் | கொற்றனார் |
| 2. | பாடல்-46 | பாணர் | கொற்றனார் |
| 3. | பாடல்-108 | கிணையர் | கொற்றனார் |
| 4. | பாடல்-127 | பாணர் | சீத்தலைச்சாத்தனார் |
| 5. | பாடல்-150 | பாணர் | கடுவனிள மள்ளனார் |
| 6. | பாடல்-167 | பாணர் | கடுவனிள மள்ளனார் |
| 7. | பாடல்-170 | விறலி | கடுவனிள மள்ளனார் |
| 8. | பாடல்-172 | பாணர் | கடுவனிள மள்ளனார் |
| 9. | பாடல்-185 | பாணர் | கடுவனிள மள்ளனார் |
| 10. | பாடல்-186 | பாணர் | கடுவனிள மள்ளனார் |
| 11. | பாடல்-189 | சென்னியர் | கடுவனிள மள்ளனார் |
| 12. | பாடல்-212 | கோடியர் | குடவாயிற் கீரத்தனார் |
| 13. | பாடல்-250 | பாணர் | மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார் |
| 14. | பாடல்-291 | பாணர் | கபிலர் |
| 15. | பாடல்-300 | பாணர் | பரணர் |
| 16. | பாடல்-310 | பாணர் | பரணர் |
| 17. | பாடல்-328 | விறலி | தொல்கபிலர் |
| 18. | பாடல்-360 | ஆடல்மகள் | ஓரம்போகியார் |
| 19. | பாடல்-370 | பாணர் | உறையூர்க் கதுவாய்ச் சாத்தனார் |
| 20. | பாடல்-380 | பாணர் | கூடலூர்ப் பல்கண்ணனார் |

## 6. ஐங்குறுநூறு

| வ.எண் | பாடல் எண் | குறிப்பு | பாடியவர் |
|---|---|---|---|
| 1. | பாடல்-1 | பாணர் | ஓரம்போகியார் |
| 2. | பாடல்-43 | பாணர் | ஓரம்போகியார் |
| 3. | பாடல்-47 | பாண்மகள் | ஓரம்போகியார் |
| 4. | பாடல்-48 | பாண்மகள் | ஓரம்போகியார் |
| 5. | பாடல்-49 | பாண்மகள் | ஓரம்போகியார் |
| 6. | பாடல்-100 | பாணர் | ஓரம்போகியார் |
| 7. | பாடல்-111 | பாணர் | அம்மூவனார் |
| 8. | பாடல்-131 | பாணர் | அம்மூவனார் |
| 9. | பாடல்-132 | பாணர் | அம்மூவனார் |
| 10. | பாடல்-133 | பாணர் | அம்மூவனார் |
| 11. | பாடல்-134 | பாணர் | அம்மூவனார் |
| 12. | பாடல்-135 | பாணர் | அம்மூவனார் |
| 13. | பாடல்-136 | பாணர் | அம்மூவனார் |
| 14. | பாடல்-137 | பாணர் | அம்மூவனார் |
| 15. | பாடல்-138 | பாணர் | அம்மூவனார் |
| 16. | பாடல்-139 | பாணர் | அம்மூவனார் |
| 17. | பாடல்-140 | பாணர் | அம்மூவனார் |
| 18. | பாடல்-402 | பாணர் | பேயனார் |
| 19. | பாடல்-407 | பாணர் | பேயனார் |
| 20. | பாடல்-408 | பாணர் | பேயனார் |
| 21. | பாடல்-410 | பாணர் | பேயனார் |
| 22. | பாடல்-458 | பாணர் | பேயனார் |
| 23. | பாடல்-471 | பாணர் | பேயனார் |

| | | | |
|---|---|---|---|
| *24.* | பாடல்-*472* | பாணர் | பேயனார் |
| *25.* | பாடல்-*473* | பாணர் | பேயனார் |
| *26.* | பாடல்-*474* | பாணர் | பேயனார் |
| *27.* | பாடல்-*475* | பாணர் | பேயனார் |
| *28.* | பாடல்-*476* | பாணர் | பேயனார் |
| *29.* | பாடல்-*477* | பாணர் | பேயனார் |
| *30.* | பாடல்-*478* | பாணர் | பேயனார் |
| *31.* | பாடல்-*479* | பாணர் | பேயனார் |
| *32.* | பாடல்-*480* | பாணர் | பேயனார் |

### 7. கலித்தொகை

| வ.எண் | பாடல் எண் | குறிப்பு | பாடியவர் |
|---|---|---|---|
| *1.* | பாடல்-*70* | பாணர் | மருதனிளநாகனார் |
| *2.* | பாடல்-*71* | பாணர் | மருதனிளநாகனார் |
| *3.* | பாடல்-*72* | பாணர் | மருதனிளநாகனார் |
| *4.* | பாடல்-*74* | பாணர் | மருதனிளநாகனார் |
| *5.* | பாடல்-*77* | பாணர் | மருதனிளநாகனார் |
| *6.* | பாடல்-*81* | பாணர் | மருதனிளநாகனார் |
| *7.* | பாடல்-*85* | பாணர் | மருதனிளநாகனார் |
| *8.* | பாடல்-*95* | பாணர் | மருதனிளநாகனார் |
| *9.* | பாடல்-*96* | பாணர் | மருதனிளநாகனார் |
| *10.* | பாடல்-*98* | பாணர் | மருதனிளநாகனார் |

## 8. பரிபாடல்

| வ.எண் | பாடல் எண் | குறிப்பு | பாடியவர் |
|---|---|---|---|
| 1. | பாடல்-3 | பாணன் | கடுவன் இளவெயினனார் |
| 2. | பாடல்-6 | விறலி | ஆசிரியன் நல்லத்துவனார் |
| 3. | பாடல்-7 | சென்னியர் | மையோடக் கோவனார் |
| 4. | பாடல்-9 | பாணர் | குன்றம் பூதனார் |
| 5. | பாடல்-10 | வயிரியர் | கரும்பிள்ளை பூதனார் |
| 6. | பாடல்-15 | அகவுநர் | இளம்பெரு வழுதியார் |
| 7. | பாடல்-17 | பாணர் | நல்லழிசியார் |
| 8. | பாடல்-18 | பாணர் | குன்றம் பூதனார் |